உ

ஸ்ரீ காமாக்ஷ்யை நம:

मूककवि प्रणीत

# ॥ मन्दस्मित शतकम् ॥

மஹாராஜன் மூக கவி

இயற்றிய

# மந்தஸ்மித சதகம்.

( மூக பஞ்சசதீயின் ஐந்தாம் பாகம். )

மூலம் நாகரத்திலும், தமிழிலும்.

பதவுரை, பொழிப்புரை விசேஷக் குறிப்புக்களுடன் கூடியது.



விலை ] 1953. [ ரு. 1—4—0

|| ஸ்ரீ: ||

# மூகபஞ்ச சதீ

# மந்தஸ்மித சதகம்.

---

बध्नीमो वयमञ्जलिं प्रतिदिनं बन्धच्छिदे देहिनां
कन्दर्पागमतन्त्रमूलगुरवे कल्याणकेलीभुवे ।
कामाक्ष्या घनसारपुञ्जरजसे कामद्रुहश्चक्षुषां
मन्दारस्तबकप्रभामदमुषे मन्दस्मितज्योतिषे ॥ १ ॥

பத்நீமோ வய மஞ்ஜலிம் ப்ரதிதிநம் பந்தச்சிதே தேஹிநாம்
கந்தர்ப்பாகம தந்த்ரமூல குரவே கல்யாண கேளீபுவே |
காமாக்ஷ்யா கநஸாரபுஞ்ஜரஜஸே காம த்ருஹச்சக்ஷுஷாம்
மந்தார ஸ்தபக ப்ரபா மத முஷே மந்தஸ்மித ஜ்யோதிஷே || (1)

| | |
|---|---|
| தேஹிநாம் | பிராணிகளுடைய |
| பந்தச்சிதே | பாபமைப் பந்தத்தை ஒழிக்கிறதாயும் |
| கந்தர்ப்பாகம தந்த்ர மூல குரவே | கோகோஹ சாஸ்திரத்தின் அநுஷ்டானத்தைக் கண்டு பிடித்த ஆதி குருவாயும் |
| கல்யாண கேளீபுவே | மங்களங்களின் விளையாட்டிடமாயும் |

---

மூககவி எழுதிய பஞ்சசதியில் இது ஐந்தாவது சதகம். முதலாவதான **'ஆர்யாசதக'**த்தால் அம்பிகையைத் தியானித்தார். அவள் பெருமைக்குத் தோற்ற **'பாதாரவிந்த சதக'**த்தால் அவள் பாதாரவிந்தமே கதியென்று நிர்ணயித்தார். மூன்றாவதான **'ஸ்துதி சதக'**த்தால் சரண்யையான தேவியைத் துதித்தார். துதியால் மகிழ்ந்த தேவியின் கருணாகடாக்ஷத்தை நான்காவதான **'கடாக்ஷ சதக'**த்தால் வர்ணித்தார். கடாக்ஷத்தால் உஜ்ஜீவிக்கும் சேதனர்களைக் கண்டு ஏற்படுவதும், மோக்ஷமீறான ஸகல புருஷார்த்தங்களுக்கும் காரணமானதுமான தேவியின் புன்னகையை இந்த **'மந்தஸ்மித சதக'**த்தில் வர்ணிக்கிறார்.

| | |
|---|---|
| *காமத்ருஹ:* | *காமாரியான பரமசிவனுடைய* |
| *சக்ஷுஷாம்* | *கண்களுக்கு* |
| *கர்ப்பூர புஞ்ஜ ரஜஸே* | *(மலர்ச்சியையுண்டுபண்ணுகிற) பச்சைக்கற்பூரப் பொடியாயும்* |
| *மந்தார ஸ்தபக ப்ரபா மத முஷே* | *மந்தாரப் பூங்கொத்தின் காந்திக்குள்ள கர்வத்தை அடக்குகிறதாயுமுள்ள* |
| *காமாக்ஷ்யா:* | *காமாக்ஷியினுடைய* |
| *மந்தஸ்மித ஜ்யோதிஷே* | *புன்சிரிப்பின் ஒளிக்கு* |
| *வயம்* | *நாம்* |
| *ப்ரதிதினம்* | *ஒவ்வொருநாளும்* |
| *அஞ்ஜலிம்* | *கை கூப்புதலை* |
| *பத்னீம:* | *செய்கிறோம்.* |

*பிராணிகளின் ஸம்ஸார பந்தத்தைப் போக்குவதும், மன்மதனுடைய ஆகம தந்த்ரத்திற்கு ஆதிகுருவும், மங்களங்களுக்கு விளையாடுமிடமும், பரமசிவனின் கண்களுக்குப் பச்சைக்கற்பூரத்தின் சூர்ணமாயும், மந்தாரப் புஷ்பக்கொத்தின் காந்தியின் கர்வத்தை அபஹரிப்பதுமான காமாக்ஷி தேவியின் புன்னகையின் ஜோதியை தினமும் நாம் அஞ்ஜலி செய்து வணங்குகிறோம்.*

*குறிப்பு:- 'காமத்ருஹ:' என்பதை 'கந்தர்ப்பாகம' என்றவிடத்திலும் சேர்த்துக்கொள்ளலாம்.*

सध्रीचे नवमल्लिकासुमनसां नासाग्रमुक्तामणे-
राचार्याय मृणालकाण्डमहसां नैसर्गिकाय द्विषे ।
स्वर्धुन्या सह युध्वने हिमरुचेरर्धासनाध्यासिने
कामाक्ष्याः स्मितमञ्जरीधवलिमाद्वैताय तस्मै नमः ॥ २ ॥

ஸத்ரீசே நவமல்லிகா-ஸுமநஸாம் நாஸாக்ர-முக்தாமணே:
ஆசார்யாய ம்ருணாள-காண்ட-மஹஸாம் நைஸர்கிகாய த்விஷே |
ஸ்வர்துந்யா ஸஹ யுத்வநே ஹிமருசேரர்த்தா ஸநாத்யாஸிநே
காமாக்ஷ்யா: ஸ்மிதமஞ்ஜரீ-தவளிமாத்வைதாய தஸ்மை நம: ॥ (2)

| | |
|---|---|
| நவமல்லிகா ஸுமநஸாம் | கொடை மல்லிகைப்பூக்களுக்கு |
| ஸத்ரீசே | ஸமானமாயும் |
| நாஸாக்ர-முக்தாமணே: | மூக்கு நுனியில் இருக்கிற புல்லாக்கு முத்துக்கு |
| ஆசார்யாய | ஆசாரியனாயும் |
| ம்ருணால-காண்ட-மஹஸாம் | தாமரைத் தண்டின் காந்திகளுக்கு |
| நைஸர்க்கிகாய | ஸ்வபாவமான |
| த்விஷே | சத்துருவாயும் |
| ஸ்வர்துன்யா | கங்கையோடு |
| ஸஹயுத்தஸீம்நி | கூடிச்சண்டையிடுகிறதாயும் |
| ஹிமகோ: | சந்திரனுடைய |
| அர்த்தாஸந அத்யாஸிநே | ஆஸனத்தின் பாதியில் அமருகிறதாயுமிருக்கிற |
| தஸ்மை | அப்படிப்பட்ட |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| ஸ்மித-மஞ்ஜரீ-தவளிமா அத்வைதாய | புன்சிரிப்பின் இணையற்ற வெளுப்பிற்கு |
| நம: | நமஸ்காரம். |

கொடைமல்லிகைப் புஷ்பங்களுக்கு ஸமானமாயும், மூக்கின் நுனியிலிருக்கிற சிறந்த புல்லாக்குமுத்துக்கு ஆசார்யனாயும், தாமரைத்தண்டின் காந்திகளுக்கு இயற்கையான சத்ருவாயும், ஆகாசகங்கையோடு எதிர்த்து யுத்தம் செய்வதும், சந்திரனோடு அர்த்தாஸனத்தில் அமர்வதுமான காமாக்ஷி தேவியின் இணையற்ற அந்தப் புன்னகையின் வெண்மைக்கு நமஸ்காரம்.

குறிப்பு:- புன்சிரிப்பின் காந்தியை வெளுப்பாகக் கவிகள் வர்ணிக்கிற வழக்கமாகையால் இங்கே வெளுப்பான வஸ்துக்கள் உபமானங்களாகக் கூறப்படுகின்றன.

कर्पूरद्युतिचातुरीमतितरामल्पीयसीं कुर्वती
दौर्भाग्योदयमेव संविदधती दोषाकरीणां त्विषाम् ।
क्षुल्लानेव मनोज्ञमल्लिनिकरान्फुल्लानपि व्यञ्जती
कामाक्ष्या मृदुलस्मितांशुलहरी कामप्रसूरस्तु मे ॥ ३ ॥

கர்ப்பூர-த்யுதி-சாதுரீமதிதராம் அல்பீயஸீம் குர்வதீ
தௌர்பாக்யோதயமேவ ஸம்விதததீ தௌஷாகரீணாம்
த்விஷாம் |
க்ஷுல்லானேவ மனோஜ்ஞ-மல்லி-நிகராந் புல்லா
நபி வ்யஞ்ஜதீ
காமாக்ஷ்யா ம்ருதுள-ஸ்மிதாம்சு-லஹரீ
காம-ப்ரஸூரஸ்து மே || (3)

| | |
|---|---|
| கர்ப்பூர-த்யுதி-சாதுரீம் | கற்பூரக்கட்டியின் காந்தியின் அழகை |
| அதிதராம் | மிகவும் |
| அல்பீயஸீம் | சிறியதாக |
| குர்வதீ | செய்கிறதாயும் |
| தௌஷாகரீணாம் | சந்திரனுடையதான |
| த்விஷாம் | காந்திகளுக்கு |
| தௌர்பாக்ய—உதயம் ஏவ | துரதிருஷ்டத்தின் உற்பத்தியையே |
| ஸம்விதததீ | நன்கு செய்கிறதாயும் |
| புல்லாந் | மலர்ந்த |
| மனோஜ்ஞ-மல்லி-நிகராந் அபி | நல்ல மல்லிகைப்பூக்களின் கூட்டங்களையும் |
| க்ஷுல்லாந் ஏவ வ்யஞ்ஜதீ | அல்பமாகவே தோன்றும்படி செய்கிறதாயுமிருக்கிற |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| ம்ருதுல-ஸ்மிதாம்சு-லஹரீ | மனோஜ்ஞமாய்மேன்மேலும் வளரும் மந்தஹாஸத்தின் காந்தியின் பிரவாஹமானது |
| மே | எனக்கு |
| காம ப்ரஸூ: | இஷ்டத்தைக் கொடுப்பதாக |
| அஸ்து | ஆகட்டும். |

கற்பூரக்கட்டியின் அழகியகாந்தியை மிகவும் அல்பமாகச் செய்கிறதாயும், சந்திரனின் காந்திகளுக்கு அழகில்லாமைமையே செய்கிறதாயும், மலர்ந்த நல்ல மல்லிகைப்பூக்களையும் அல்பமாகத் தோன்றும்படி செய்கிறதாயுமிருக்கிற காமாக்ஷி தேவியின் மனோக்ஞமாய் மேன்மேலும் வளரும் புன்னகையின் காந்தி எனக்கு இஷ்டத்தைக் கொடுப்பதாக ஆகட்டும்.

या पीनस्तनमण्डलोपरि लसत्कर्पूरलेपायते
या नीलेक्षणरात्रिकान्तिततिषु ज्योत्स्नाप्ररोहायते ।
या सौन्दर्यधुनीतरङ्गततिषु व्यालोलहंसायते
कामाक्ष्याः शिशिरीकरोतु हृदयं सा मे स्मितप्राचुरी ॥ ४ ॥

யா பீந-ஸ்தந-மண்டலோபரி லஸத்-கர்ப்பூர-லேபாயதே
யா நீலேக்ஷண-ராத்ரி-காந்தி-ததிஷு ஜ்யோத்ஸ்நா-ப்ரரோஹாயதே |
யா ஸௌந்தர்ய-துநீ-தரங்க-ததிஷு வ்யாலோல-ஹம்ஸாயதே
காமாக்ஷ்யா: சிசிரீ-கரோது ஹ்ருதயம் ஸா மே ஸ்மித-ப்ராசுரீ ॥ (4)

| | |
|---|---|
| யா | எந்த |
| ஸ்மித ப்ராசுரீ | நிறைந்த புன்சிரிப்பானது |
| பீந-ஸ்தந-மண்டலோபரி | பருத்த ஸ்தந மண்டலத்தின் மேல் |
| லஸத்-கர்ப்பூர-லேபாயதே | பிரகாசிக்கிற பச்சைக்கர்ப்பூரப் பூச்சாக ஆகின்றதோ |
| யா | எந்தப் புன்சிரிப்பானது |
| நீல-சக்ஷுண-காந்தி-ராத்ரி-ததிஷு | கருத்த கடாக்ஷங்களாகிற இராக்காலக் கூட்டங்களில் |
| ஜ்யோத்ஸ்நா-ப்ரரோஹா யதே | நிலாவின் முளையாகத் தோன்றுகிறதோ |
| யா | எந்தப் புன்சிரிப்பானது |
| ஸௌந்தர்ய-துநீ-தரங்க-ததிஷு | அழகு என்கிற நதியின் அலைகளின் வரிசைகளில் |
| வ்யாலோல-ஹம்ஸாயதே | ஸஞ்சரிக்கிற ஹம்ஸமாகத் தோன்றுகிறதோ |
| ஸா | அத்தகைய |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| (ஸ்மித-ப்ராசுரீ | நிறைந்த புன்சிரிப்பானது) |
| மே | என்னுடைய |
| ஹ்ருதயம் | மனதை |
| சிசிரீ-கரோது | குளிரச்செய்யட்டும். |

எந்த நிறைந்த புன்சிரிப்பானது பருத்த ஸ்தன மண்டலத்தின் மேல் பிரகாசிக்கிற பச்சைக் கர்ப்பூரப்பூச்சாகத் தோன்றுகிறதோ, எந்த புன்சிரிப்பானது கருத்த கடாக்ஷங்களின் காந்தியாகிற இராக்காலக்கூட்டத்தில் புதிய நிலாவாகத் தோன்றுகிறதோ, எந்த புன்சிரிப்பானது அழகு என்ற நதியின் அலைகளில் ஸஞ்சரிக்கின்ற ஹம்ஸமாகத் தோன்றுகிறதோ, அத்தகைய காமாக்ஷியினுடைய நிறைந்த புன்சிரிப்பானது எனது மனதைக் குளிரச்செய்யட்டும்.

येषां गच्छति पूर्वपक्षसरणिं कौमुद्वतः श्वेतिमा
येषां संततमारुरुक्षति तुलाकक्ष्यां शरच्चन्द्रमाः ।
येषामिच्छति कम्बुरप्यसुलभामन्तेवसत्प्रक्रियां
कामाक्ष्या ममतां हरन्तु मम ते हासत्विषामङ्कुराः ॥ ५ ॥

யேஷாம் கச்சதி பூர்வபக்ஷ-ஸரணிம் கௌமுத்வத:
ச்வேதிமா
யேஷாம் ஸந்ததம் ஆருருக்ஷதி துலா-கக்ஷ்யாம்
சரத்-சந்த்ரமா: |
யேஷாமிச்சதி கம்புரப்யஸுலபாம் அந்தே-வஸத்-
ப்ரக்ரியாம்
காமாக்ஷ்யா மமதாம் ஹரந்து மம தே ஹாஸ
த்விஷா மங்குரா: ll (5)

| | |
|---|---|
| கௌமுத்வத: | ஆம்பலுடையதான |
| ச்வேதிமா | வெண்மையானது |
| யேஷாம் | எவைகளுக்கு |
| பூர்வபக்ஷஸரணிம் | பூர்வபக்ஷமென்கிறநிலைமையை |
| கச்சதி | அடைகிறதோ |
| சரத் சந்த்ரமா: | சரத்காலத்திய சந்திரன் |
| யேஷாம் | எவைகளின் |
| துலா-கக்ஷ்யாம் | ஸமமாயிருக்கும் நிலைமையை |
| ஸந்ததம் | எப்போதும் |
| ஆருருக்ஷதி | அடைய விரும்புகிறதோ |
| கம்பு: அபி | சங்குகூட |
| அஸுலபாம் | கிடைக்க அரிதான |
| யேஷாம் | எவைகளுக்கு |

| | |
|---|---|
| அங்கேவனத் ப்ரக்ரியாம் | சிஷ்யனாயிருக்கும் நிலைமையை |
| இச்சதி | ஆசைப்படுகிறதோ |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| தே | அந்த |
| ஹாஸ த்விஷாம் அங்குரா: | புன்சிரிப்புக் காந்திகளின் முளைகள் |
| மம | என்னுடைய |
| மமதாம் | அஹங்காரத்தை |
| ஹரந்து | போக்கடிக்கட்டும். |

ஆம்பல் மலர்களுடைய வெண்மையானது எவைகளுக்குப் பூர்வபக்ஷமென்கிற நிலைமையை அடைகிறதோ, சரத் கால சந்திரன் எவைகளுடன் சமமாயிருக்கும் நிலைமையை அடைய விரும்புகிறானோ, (வெள்ளொளி வீசும்) சங்குகூட எவைகளுக்கு தனக்கு எளிதில் கிடைத்தற்கு அரிதான சீடனாயிருக்க அவாவுகின்றதோ, அப்படிப்பட்ட காமாக்ஷீ தேவியின் புன்முறுவலிலுள்ள ஒளிப்பிழம்புகள் என்னுடைய அஹங்காரத்தைப் போக்கடிக்கட்டும்.

आशासीमसु संततं विदधती नैशाकरीं व्याक्रियां
काशानामभिमानभङ्गकलनाकौशल्यमाबिभ्रती ।
ईशानेन विलोकिता सकुतुकं कामाक्षि ते कल्मष-
क्लेशापायकरी चकास्ति लहरी मन्दस्मितज्योतिषाम् ॥ ६ ॥

ஆசா-ஸீமஸு ஸந்ததம் விதததீ நைசாகரீம் வ்யாக்ரியாம்
காசாநாம் அபிமான-பங்க-கலனா-கௌசல்யம் ஆபிப்ரதீ I
ஈசாநேந விலோகிதா ஸகுதுகம் காமாக்ஷி தே கல்மஷ-
க்லேசாபாயகரீ சகாஸ்தி லஹரீ மந்தஸ்மித-
ஜ்யோதிஷாம் II (6)

| | |
|---|---|
| காமாக்ஷி | ஏ காமாக்ஷி! |
| ஸந்ததம் | எப்போதும் |
| ஆசா-ஸீமஸு | திசுந்தங்களில் |
| நைசாகரீம் வ்யாக்ரியாம் | சந்திரனுடையதான ரீதியை |
| விதததீ | செய்கிறதாயும் |
| காசாநாம் | நாணல் பூக்களுடைய |
| அபிமாந-பங்க-கலநா கௌசல்யம் | கொழுப்பை அடக்கும் காரியத்தில் ஸாமர்த்தியத்தை |

| | |
|---|---|
| ஆப்ரதி | அடைந்திருப்பதாயும் |
| சசாங்கோ | பரமசிவனால் |
| ஸகுதுகம் | ஆவலோடுகூட |
| விலோகிதா | பார்க்கப்பட்டதாயும் |
| கல்மஷ-க்லேசாபாய-கரீ | பாபங்களால் ஏற்படும் கஷ்டங்களைப் போக்குகிறதாயுமுள்ள |
| தே | உன்னுடைய |
| மந்தஸ்மித-ஜ்யோதிஷாம் லஹரீ | புன்சிரிப்பின் காந்திப்பெருக்கானது |
| சகாஸ்தி | விளங்குகிறது. |

ஏ காமாக்ஷி! எப்பொழுதும் திக்கோடிகளில் சந்திரனின் க்ரியையைச் செய்கிறதாயும், "தாம்தான் வெண்மையில் சிறந்தவை" என்ற நாணல் பூக்களுடைய கொழுப்பை அடக்கும் காரியத்தில் ஸாமார்த்தியத்தை அடைந்திருப்பதாயும், பரமசிவனால் ஆவலோடுகூடப் பார்க்கப்பட்டதாயும், பாபங்களாலேற்படும் கஷ்டங்களைப் போக்கடிக்கிறதாயுமுள்ள உன்னுடைய புன்சிரிப்பின் பெருக்கானது விளங்குகிறது.

ஸ்ரீ அம்பாளின் புன்சிரிப்பின் ஒளியானது திக்குகளில் பரவும்போது, அங்கு சந்திரன் விளங்குகின்றானோவென்று எண்ணும்படியாயிருக்கிறது.

"கல்மஷக்லேசாபாயகரீ" என்பதற்கு கல்மஷத்திற்கு க்லேசத்தையும் அபாயத்தையும் தருவதான—என்றும் அர்த்தம் சொல்லலாம். (கல்மஷம் — கருமை, பாபம்)

आरूढस्य समुन्नतस्तनतटीसाम्राज्य सिंहासनं
कन्दर्पस्य विभोर्जगत्त्रयजयप्राकट्यमुद्रानिधेः ।
यस्याश्चामरचातुरीं कलयते रश्मिच्छटा चञ्चला
सा मन्दस्मितमञ्जरी भवतु नः कामाय कामाक्षि ते ॥ ७ ॥

ஆரூடஸ்ய ஸமுந்நத ஸ்தநதட ஸாம்ராஜ்ய-
ஸிம்ஹாஸநம்
கந்தர்ப்பஸ்ய விபோ: ஜகத்த்ரய ஜயப்ராகட்யமுத்ராநிதே:।
யஸ்யா: சாமரசாதுரீம் கலயதே ரச்மிச்சடா சஞ்சலா
ஸா மந்தஸ்மித-மஞ்ஜரீ பவது ந: காமாய காமாக்ஷி!
தே ॥ (7)

| | |
|---|---|
| ஸமுந்நத ஸ்தந தடீ-ஸாம்ராஜ்ய-ஸிம்ஹாஸநம் | உயர்ந்த ஸ்தந தடமென்கிற ஸாம்ராஜ்ய ஸிம்ஹாஸனத்தில் |
| ஆரூடஸ்ய | ஏறியிருப்பவனும் |
| ஜகத் த்ரய-ஜய-ப்ராகட்ய-முத்ராங்கிதே: | மூன்று உலகங்களிலும் அடைந்த வெளிப்படையான வெற்றிக்கு அறிகுறியாகவுள்ள விருதுகளுக்கும் பொக்கிஷம் போன்றவனும் |
| விடோ: | ஸாமர்த்தியமுள்ளவனுமாயிருக்கிற |
| கந்தர்ப்பஸ்ய | மன்மதனுக்கு |
| சாமர-சாதுரீம் | சாமரத்தின் நிலைமையை |
| யஸ்யா: | எந்த புன்சிரிப்பினுடைய |
| சஞ்சலா-ரச்மி-சடா | அசைகிற காந்தி ஸமூகமானது |
| கலயதே | செய்கிறதோ |
| காமாக்ஷி | ஏ! காமாக்ஷி! |
| ஸா | அப்படிப்பட்ட |
| தே | உனது |
| மந்தஸ்மித-மஞ்ஜரீ | பூங்கொத்துப்போன்ற புன்சிரிப்பானது |
| ந: | நம்முடைய |
| காமாய | இஷ்டத்தை நிறைவேற்றுவதாக |
| பவது | ஆகட்டும். |

ஏ தேவி காமாக்ஷி! எந்த புன்முறுவலின் சலிக்கின்ற ஒளியானது, உயர்ந்த ஸ்தன பாரமாகிய அரியேற்றில் வீற்றிருப்பவனும் மூவுலகத்தையும் வென்று நிகரற்றவனுமான மதன வேளுக்குச் சாமரம் வீசுவதுபோலிருக்கிறதோ; அப்படிப்பட்ட நினது புன்முறுவலானது எமது மனோரதத்தை நிறைவேற்றவேண்டும் என்பதாம்.

குறிப்பு:—புன்சிரிப்பின் காந்தியானது அம்பாளின் ஸ்தன தடத்தில் பரவி அசையும்போது அவ்விடத்தில் வீற்றிருக்கும் மன்மதராஜனுக்குச் சாமரம் வீசுவதுபோலிருக்கிறது.

शम्भोर्या परिरम्भसंभ्रमविधौ नैर्मल्यसीमानिधि-
गैर्वाणीव तरङ्गिणी कृतमृदुस्पन्दां कलिन्दात्मजाम् ।
कल्माषीकुरुते कलङ्कसुषमां कण्ठस्थलीचुम्बिनीं
कामाक्ष्याः स्मितकन्दली भवतु सा कल्याणसन्दोहिनी ॥ ८ ॥

சம்போர் யா பரிரம்ப-ஸம்ப்ரம விதௌ நைர்மல்ய
ஸீமாநிதி:
கைர்வாணீவ தரங்கிணீ க்ருத-ம்ருது-ஸ்யந்தாம்
களிந்தாத்மஜாம் ।
கல்மாஷீ-குருதே களங்க-ஸுஷமாம் கண்ட
ஸ்தலீ-சும்பிநீம்
காமாக்ஷ்யா: ஸ்மித கந்தளீ பவது ஸா கல்யாண-
ஸந்தோஹிநீ ॥ (8)

நைர்மல்ய-ஸீமாநிதி: — வெண்மையின் ராசிக்கிருப்பிடமான
யா — எந்தப் புன்சிரிப்பானது
க்ருத-ம்ருது-ஸ்யந்தாம் — மெதுவாகப் பெருகிவருகிற
களிந்தாத்மஜாம் — யமுனையை
கைர்வாணீ தரங்கிணீ இவ — தேவ நதியான கங்கைபோல
பரிரம்ப-ஸம்ப்ரம-விதௌ — பரபரப்புடன் ஆலிங்கனம் செய்துகொண்ட ஸமயத்தில்
சம்போ: — சிவனுடைய
கண்ட-ஸ்தலீ-சும்பிநீம் — கழுத்திலிருக்கிற
களங்க-ஸுஷமாம் — கருப்பு நிறத்தை
கல்மாஷீ-குருதே — சித்திரவர்ணமுடையதாகச் (வெண்மையும் கருமையும் கலந்த நிறமுள்ளதாகச்) செய்கிறதோ
ஸா — அப்படிப்பட்ட
காமாக்ஷ்யா: — காமாக்ஷியினுடைய
ஸ்மித-கந்தளீ — உயர்ந்த புன்சிரிப்பின் முளையானது
ந: — எங்களுக்கு
கல்யாண-ஸந்தோஹிநீ — கல்யாணங்களைக் கொடுப்பதாக
பவது — ஆகட்டும்.

மெதுவாய் ஓடும் கருத்த யமுனா நதியை வெளுப்பான தேவநதியான கங்கை கலந்து விசித்திர வர்ணமுள்ளதாகச் செய்வதுபோல, பரபரப்புடன் ஆலிங்கனம் செய்துகொள்ளும் ஸமயத்தில் சிவனுடைய கழுத்திலிருக்கிற கருப்பு நிறத்தை மிகவும் வெளுத்த எந்த புன் சிரிப்பானது வெண்மையும் கருமையும் கலந்த ஒரு விசித்திர நிறமுள்ளதாகச் செய்கிறதோ; அவ்விதமான ஸ்ரீ காமாக்ஷியின் உயர்ந்த புன் சிரிப்பானது எங்களுக்கு மேன்மையை உண்டுபண்ணுவதாக ஆகட்டும்.

கல்யாணம் என்ற பதத்திற்கு சுபம், சுவர்ணம் என்று பொருள். எனவே மனதிற்கும் தேகத்திற்கும் வேண்டிய மங்களங்களை உண்டாக்கட்டும் என்பதாம். "நைர்மல்ய லீமாநிதி:" என்பது "கைர்வாணீ தரங்கிணீ" என்பதற்கும் விசேஷணம் (அடைமொழி).

குறிப்பு:— பரமசிவனுடைய கழுத்தின் கறுப்புக்காந்தியும், அம்பாளுடைய சிரிப்பின் வெளுப்புக் காந்தியும் சேர்ந்திருப்பது கங்கையும், யமுனையும் சேர்ந்தாற்போலிருக்கிறது.

जेतुं हारलतामिव स्तनतटीं संजग्मुषी सन्ततं
गन्तुं निर्मलतामिव द्विगुणितां मग्ना कृपास्रोतसि ।
लब्धुं विस्मयनीयतामिव हरं रागाकुलं कुर्वती
मञ्जुस्ते स्मितमञ्जरी भवभयं मथ्नातु कामाक्षि मे ॥ ९ ॥

ஜேதும் ஹாரலதாமிவ ஸ்தந தடீம் ஸஞ்ஜக்முஷீ ஸந்ததம்
கந்தும் நிர்மலதாமிவ த்விகுணிதாம் மக்நா க்ருபா ஸ்ரோதஸி।
லப்தும் விஸ்மயநீயதாமிவ ஹரம் ராகாகுலம் குர்வதீ
மஞ்ஜுஸ்தே ஸ்மித மஞ்ஜரீ பவ-பயம் மத்நாது காமாக்ஷி! மே ॥ (9)

| | |
|---|---|
| காமாக்ஷி | ஏ காமாக்ஷி! |
| ஹாரலதாம் | முத்துமாலையை |
| ஜேதுமிவ | ஜயிப்பதற்குப் போல் |
| ஸந்ததம் | எப்போதும் |
| ஸ்தந-தடீம் | ஸ்தன பிரதேசத்தை |
| ஸஞ்ஜக்முஷீ | நன்கு அடைவதாயும் |
| த்விகுணிதாம் | இரண்டு மடங்கான |

| | |
|---|---|
| நிர்மலதாம் | வெண்மையை |
| கந்தும் இவ | அடைவதற்குப்போல் |
| க்ருபா-ஸ்ரோதஸி | கருணை ப்ரவாஹத்தில் |
| மக்நா | முழுகியதாயும் |
| விஸ்மயநீயதாம் | ஆச்சர்யகரமான தன்மையை |
| லப்தும் இவ | அடைவதற்குப்போல் |
| ஹரம் | பரமசிவனை |
| ராகாகுலம் | மோஹித்தவனாக |
| குர்வதீ | செய்கிறதாயும் |
| மஞ்ஜுலா: | அழகாயுமிருக்கிற |
| தே | உனது |
| ஸ்மித-மஞ்ஜரீ | புன்சிரிப்பாகிய பூங்கொத்தானது |
| மே | எனது |
| பவ-பயம் | ஸம்ஸார பீதியை |
| மத்நாது | போக்கடிக்கட்டும். |

ஏ காமாக்ஷியே! வெளுப்பான முத்துமாலையை ஜயிப்பதற்குப்போல எப்பொழுதும் ஸ்தனப்ரதேசத்தையடைவதாயும், இரண்டு மடங்கான வெண்மையை அடைவதற்குப்போல கருணைப்ரவாகத்தில் முழுகியதாயும், ஆச்சர்யகரமான தன்மையை அடைவதற்குப்போல பரமசிவனை உவகை நிறைந்தவனாக செய்கிறதாயும், அழகாயுமிருக்கிற உனது புன்சிரிப்பு எனது ஸம்ஸார பீதியைப் (ஜனன மரண பயத்தைப்) போக்கடிக்கட்டும்.

குறிப்பு:— ராகம் என்பதற்கு ஆசை, சிவப்பு என்று பொருள். இந்த சுலோகத்தில் மந்தஸ்மிதத்தின் வெண்மையானது பரமேச்வரனைச் சிவப்பாகச் செய்கிறது என்பது ஒரு நயம். "வக்தும் விஸ்மயநீயதாமிவ" என்று பாடாந்தரம். ஆச்சர்யகரமான தன்மையைத் தெரிவிப்பதற்காக என்பது பொருள்.

श्वेतापि प्रकटं निशाकररुचां मालिन्यमातन्वती
शीतापि स्मरपावकं पशुपतेः सन्धुक्षयन्ती सदा ।
स्वाभाव्यादधराश्रितापि नमतामुच्चैर्दिशन्ती गतिं
कामाक्षि स्फुटमन्तरा स्फुरतु नस्त्वन्मन्दहासप्रभा ॥ १० ॥

ச்வேதாபி ப்ரகடம் நிசாகர-ருசாம் மாலிந்யம் ஆதந்வதீ
சீதாபி ஸ்மர-பாவகம் பசுபதேः ஸந்துக்ஷயந்தீ ஸதா।
ஸ்வாபாவ்யாத் அதராச்ரிதாபி நமதாம் உச்சைர்
திசந்தீ கதிம்
காமாக்ஷி! ஸ்புடம் அந்தரா ஸ்புரது நः த்வத்
மந்தஹாஸ-ப்ரபா ॥ (10)

| | |
|---|---|
| காமாக்ஷி | ஏ! காமாக்ஷி! |
| ச்வேதா அபி | வெளுப்பாயிருந்தபோதிலும் |
| நிசாகர-ருசாம் | சந்திரனுடைய காந்திகளுக்கு |
| ப்ரகடம் | அதிகமாக (வெளிப்படையாக) |
| மாலின்யம் | கருநிறத்தை |
| ஆதந்வதீ | உண்டாக்குகிறதாயும் |
| சீதா அபி | குளிர்ந்ததாயிருந்தபோதிலும் |
| ஸதா | எப்போதும் |
| பசுபதேः | பரமசிவனுக்கு |
| ஸ்மர-பாவகம் | மன்மதாக்னியை |
| ஸந்துக்ஷயந்தீ | வளரச்செய்வதாயும் |
| ஸ்வாபாவ்யாத் | ஸ்வபாவமாக |
| அதர-ஆச்ரிதாபி | கீழ் உதட்டை (கீழ்பட்ட மனிதனை) ஆச்ரயித்திருந்த போதிலும் |
| நமதாம் | ஸேவிப்பவர்களுக்கு |
| உச்சைः கதிம் | உயர்ந்த நிலைமையை |
| திசந்தி | கொடுக்கிறதாயுமிருக்கிற |
| த்வத்-மந்தஹாஸ-ப்ரபா | உன்னுடைய புன்சிரிப்பின் காந்தியானது |
| நः | நம்முடைய |
| அந்தரா | மனதில் |
| ஸ்புடம் | நன்றாக |
| ஸ்புரது | விளங்கட்டும். |

ஏ காமாக்ஷியே! வெளுப்பாயிருந்த போதிலும் சந்திரனுடைய காந்திகளுக்குக் கருப்பான நிறத்தை உண்டாக்குகிறதாயும், குளிர்ச்சியுள்ளதாயினும் எப்போதும் பரமசிவனுக்கு மன்மதாக்னியை வளர்ப்பதாயும், இயற்கையாய் கீழ் உதட்டை (தாழ்ந்த மனிதனை) ஆச்ரயித்திருந்தபோதிலும், ஸேவிப்

பவர்களுக்கு உயர்ந்தநிலையை கொடுக்கிறதாயுமிருக்கிற உனது புன்சிரிப்பின் காந்தியானது எங்களுடைய அகத்தில் நன்றாக விளங்கட்டும்.

குறிப்பு:--அதரம் என்பதற்கு கீழ் உதடு என்றும், கீழான மனிதன் என்றும் பொருள். தாழ்ந்த மனிதனை அடுத்திருக்கும் மந்தஹாஸம், தன்னை ஸேவிப்பவர்களுக்கு உயர்வான கதியைக் கொடுக்கிறது என்பது இதில் ஒரு நயம். புன்முறுவல் ஸ்வயம் வெளுப்பாயிருந்தும் சந்திரனுக்கு களங்கத்தைத் தருவதும், ஸ்வயம் குளிர்ச்சியுள்ளதாயிருந்தும் பரமசிவனுக்கு (மன்மத) அக்னியைத்தருவதும், தான் கீழ்பட்டவனை ஆச்ரயித்திருந்தாலும் பிறருக்கு மேன்மையை அளிப்பதும் விசித்திரமானது என்கிறார்.

वक्त्रश्रीसरसीजले तरलितभ्रूवल्लिकल्लोलिते
कालिम्ना दधती कटाक्षजनुषा माधुव्रतीं व्याप्रुतिम् ।
निर्निद्रामलपुण्डरीककुहनापाण्डित्यमाबिभ्रती
कामाक्ष्याः स्मितचातुरी मम मनःकातर्य मुन्मूलयेत् ॥ ११ ॥

வக்த்ர-ஸ்ரீஸரஸீ ஜலே தரளித-ப்ருவல்லி-கல்லோலிதே
காளிம்நா தததீ கடாக்ஷ ஜநுஷா மாதுவ்ரதீம் வ்யாப்ருதிம்।
நிர்நித்ராமல-புண்டரீக குஹநா-பாண்டித்யம் ஆபிப்ரதீ
காமாக்ஷ்யா: ஸ்மித-சாதுரீ மம மந:-காதர்யம்
உந்மூலயேத் ॥ (11)

தரளித-ப்ருவல்லி-கல்லோலிதே } அசைகிற புருவங்களென்கிற அலைகளுள்ள
வக்த்ர ஸ்ரீ-ஸரஸீ-ஜலே } முககாந்தியாகிற தாமரைக் குளத்தின் நீரில்
கடாக்ஷ-ஜநுஷா } கடைக்கண் பார்வையிலிருந்து உண்டான
காளிம்நா கருப்பினால்
மாதுவ்ரதீம் வண்டுகளுடையதான
வ்யாப்ருதிம் பரவுதலை
தததீ வஹிப்பதாயும்

| | |
|---|---|
| விகஸ்வர அமல-புண்டரீக-குஹனா-பாண்டித்யம் | மலர்ந்த வெண்டாமரையை வஞ்சிப்பதிலுள்ள ஸாமர்த்தியத்தை (வெண்டாமரையின் காந்தியை) |
| ஆபிப்ரதீ | அடைகிறதாயிருக்கிற |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| ஸ்மித-சாதுரீ | புன்சிரிப்பின் அழகானது |
| மம | என்னுடைய |
| மந:-காதர்யம் | மனதிலிருக்கும் கவலையை |
| உந்மூலயேத் | அடியோடு ஒழிக்கட்டும். |

புருவங்களாகிய அலைகள் அமைந்த காமாக்ஷி தேவியினுடைய ஒளிதளும்பிவழியும் முககாந்தியாகிய தாமரைத் தடாகத்தில் கண்களின் கரியகாந்தியாகிய வண்டுகள் மொய்க்கும்படி செய்வதும் மலர்ந்த வெண்டாமரையின் அழகைக் கவர்ந்ததென்று எண்ணத்தக்கதுமான புன்முறுவலின் அழகானது என் மனதிலுள்ள கவலையை அடியோடு ஒழிக்கட்டும். அம்பாளுடைய முககாந்திப்ரவாஹம் ஒரு தடாகம்போலிருக்கிறது. தடாகத்தில் வெண்டாமரையும், அலைகளும், வண்டுகளும் இருப்பதுபோல, அம்பாளுடைய புன்சிரிப்பு வெண்டாமரைபோலவும், கடைக்கண் காந்தி வண்டுபோலவும், புருவம் அலைபோலவும் இருகின்றன.

नित्यं बाधितबन्धुजीवमधरं मैत्रीजुषं पल्लवैः
शुद्धस्य द्विजमण्डलस्य च तिरस्कर्तारमप्याश्रिता ।
या वैमल्यवती सदैव नमतां चेतः पुनीतेतरां
कामाक्ष्या हृदयं प्रसादयतु मे सा मन्दहासप्रभा ॥ १२ ॥

நித்யம் பாதித பந்துஜீவமதரம் மைத்ரீ-ஜுஷம் பல்லவை:
சுத்தஸ்ய த்விஜ-மண்டலஸ்ய ச திரஸ்-கர்த்தாரம்
அப்யாச்ரிதா ।
யா வைமல்யவதி ஸதைவ நமதாம் சேத: புநீதே-தராம்
காமாக்ஷ்யா: ஹ்ருதயம் ப்ரஸாதயது மே ஸா
மந்தஹாஸ-ப்ரபா ॥ (12)

| | |
|---|---|
| நித்யம் | எப்போதும் |
| பாதித-பந்துஜீவா | பந்துக்களுடைய ஜீவனைப்பாதிப்பதும் (பாதிக்கப்பட்ட செம்பரத்தம்பூவையுடையதும் அதாவது அதற்குணமாயும்) |
| பல்லவை: | துஷ்டர்களோடு(தளிர்களோடு) |
| மைத்ரீ ஜுஷ: | ஸ்நேஹமுள்ளதும் |
| சுத்தஸ்ய | சுத்தமான (வெளுப்பான) |
| த்விஜ மண்டலஸ்ய | ப்ராம்மண ஸமூஹத்தை (பற்களின் கூட்டத்தை) |
| திரஸ்கர்த்தாரா: | அவமானம் செய்வதாயும் (மறைப்பதாயும்) உள்ள |
| அதரா: | உதட்டை (கீழான மனிதனை) |
| ஆச்ரிதா அபி | அடைந்திருந்தாலும் |
| யா | எந்த புன்சிரிப்பானது |
| வைமல்யவதீ | பாபமற்றதாயிருந்துகொண்டு (வெளுப்பாயிருந்துகொண்டு) |
| ஸதைவ | எப்போதும் |
| நமதாம் | நமஸ்கரிக்கிறவர்களுடைய |
| சேத: | மனதை |
| புநீதேதராம் | மிகவும் பரிசுத்தமாக்குகிறதோ |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| ஸா | அந்த |
| மந்தஹாஸ ப்ரபா | புன்சிரிப்பின் காந்தியானது |
| மே | என்னுடைய |
| ஹ்ருதயம் | மனதை |
| ப்ரஸாதயது | தெளிவு செய்யவேண்டும். |

எப்போதும் பந்துக்களைப்பாதிப்பதும் துஷ்டர்களோடு சேர்ந்தும், சுத்தமான பிராம்மண ஸமூஹத்தை அவமதிக்கும் கீழானமனிதனை ஆச்ரயித்துமிருந்தாலும்கூட, அதாவதுசெம்பரத்தம்பூக்களுக்கொப்பான தளிர்களோடு ஸ்நேஹமுள்ள (அதாவது-அதுபோல் மிருதுவான) வெளுப்பான பற்களை மறைக்கும் உதட்டை அடைந்தாலும், எந்தப்புன்சிரிப்பானது தான் எப்போதும் வெளுப்பாய் (பாபமற்றதாய்) நமஸ்கரிக்குமவர்களின் மனதைப் பரிசுத்தம் பண்ணுகிறதோ, அப்படிப் பட்ட காமாக்ஷியினுடைய புன்சிரிப்பானது என் மனதை

ஸர்தமாக (அதாவது அழுக்கற்றதாக, ஸந்தோஷமுள்ளதாக) செய்தருளவேண்டும்.

பந்துக்களை ஹிம்ஸித்து துஷ்ட ஸஹவாஸம் செய்து பிராம்மணர்களை அவமதித்துக் கீழாரோடு சேர்ந்திருக்கும் வஸ்துவானது, தான் சுத்தமாய் தன்னை வணங்கும் பிறரைப் பரிசுத்தம் பண்ணுவது என்பது ஆச்சரியம் என்பது குறிப்பு. செம்பரத்தம் பூவுக்கு ஸமமும், தளிர்போல் மிருதுவும், பற்களை மறைப்பதுமான உதட்டை அடைந்துள்ள புன்சிரிப்பு, தான் வெளுப்பாய் வணங்கினவர்களுக்குப் பரிசுத்தியைத் தருகிறது என்பது வாஸ்தவார்த்தம்.

द्रुह्यन्ती तमसे मुहुः कुमुदिनीसाहाय्यमाबिभ्रती
यान्ती चन्द्रकिशोरशेखरवपुःसौधाङ्गणे प्रेङ्खणम् ।
ज्ञानाम्भोनिधिवीचिकां सुमनसां कूलङ्कषां कुर्वती
कामाक्ष्याः स्मितकौमुदी हरतु मे संसारतापोदयम् ॥ १३ ॥

த்ருஹ்யந்தீ தமஸே முஹு: குமுதிநீ-ஸாஹாய்யம் [ஆபிப்ரதீ
யாந்தீ சந்த்ர-கிசோர-சேகர-வபுஸ்-ஸௌதாங்கணே [ப்ரேங்கணம் ।
ஞானாம்போ-நிதி-வீசிகாம் ஸுமநஸாம் கூலங்கஷாம் [குர்வதீ
காமாக்ஷ்யா: ஸ்மித-கௌமுதீ ஹரது மே ஸம்ஸார-தாபோதயம் ॥ (13)

| | |
|---|---|
| முஹு: | அடிக்கடி |
| தமஸே | இருளுக்கு (அஞ்ஞானத்துக்கு) |
| த்ருஹ்யந்தீ | பகைகொள்வதாயும் |
| குமுதிநீ ஸாஹாய்யம் | ஆம்பலுக்கு உதவியை |
| ஆபிப்ரதீ | அடைகிறதாயும் |
| சந்த்ர-கிசோர-சேகர-வபுஸ்-ஸௌத-அங்கணே | இளஞ்சந்த்திரனைத் தலையில் சூடிய பரமசிவனுடைய சரீரமாகிற உப்பரிகையில் |
| ப்ரேங்கணம் யாந்தீ | உலாவுதலை அடைவதாயும் |

| | |
|---|---|
| ஸுமநஸாம் | வித்வான்களுடைய (நல்ல மன முடையவர்களுடைய) |
| ஞான-அம்போ-நிதி-வீசிகாம் | ஞானமென்கிற ஸமுத்ரத்தின் அலையை |
| கூலங்கஷாம் குர்வதீ | கரைபுரண்டு செல்லும்படி செய்கிறதுமான |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| ஸ்மித-கௌமுதீ | புன்சிரிப்பாகிற நிலாவானது |
| மே | எனது |
| ஸம்ஸார-தாப-உதயம் | ஸம்ஸார தாபத்தின் உத்பத்தியை |
| ஹரது | போக்கடிக்கட்டும். |

அக்ஞானமென்னும் இருளை நீக்குவதும், ஆம்பல் புஷ்பங்களுக்கு அநுகூலத்தைச் செய்வதும், இளம் பிறையை தலையில் சூடிய சிவபெருமானுடைய திருமேனியாகிற உப்பரிகையில் உலாவுகிறதும், வித்வான்களுடைய (நல்ல மனமுள்ளவர்களின்) ஞானமென்னும் கடலின் அலைகளைக் கரை புரண்டோடும்படி செய்வதுமான காமாக்ஷியின் புன்முறுவலாகிய நிலாவானது என் ஸம்ஸாரதாபத்தின் எழுச்சியை அழித்தருளட்டும்.

குறிப்பு:- நிலா இருளை நீக்கும். ஆம்பலுக்குத் துணையாயிருக்கும், மாளிகைத்தளத்தில் தவழும். ஸமுத்திரத்தை அலைபுரள வளர்க்கும். இந்தக்காரியங்களை அம்பாளுடைய புன்சிரிப்பு என்கிற நிலாவும் செய்கிறது.

काश्मीरद्रवधातुकर्दमरुचा कल्माषतां बिभ्रती
हंसौघैरिव कुर्वती परिचितिं हारीकृतैर्मौक्तिकैः ।
वक्षोजन्मतुषारशैलकटके सञ्चारमातन्वती
कामाक्ष्या मृदुलस्मितद्युतिमयी भागीरथी भासते ॥ १४ ॥

காச்மீர-த்ரவ-தாது-கர்தம-ருசா கல்மாஷதாம் பிப்ரதீ
ஹம்ஸௌகைரிவ குர்வதீ பரிசிதிம் ஹாரீ-
[க்ருதைர் மௌக்திகை: |
வக்ஷோ-ஜந்ம-துஷார-சைல-கடகே-ஸஞ்சாரமாதந்வதீ
காமாக்ஷ்யா ம்ருதுள-ஸ்மித-த்யுதிமயீ பாகீரதீ
[பாஸதே || (14)

| | |
|---|---|
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| ம்ருதுல-ஸ்மித-த்யுதி-மயீ | அழகான மந்தஹாஸ காந்தியாகிற |
| பாகீரதீ | கங்கையானது |
| காச்மீர-த்ரவ-தாது-கர்தம-ருசா | குங்குமக் குழம்பின் காந்தியால் |
| கல்மாஷதாம்-பிப்ரதீ | விசித்திர வர்ணத்தை அடைந்ததாயும் |
| ஹாரீக்ருதை: மௌக்திகை: | ஹாரமாகச்செய்யப்பட்ட முத்துக்களோடு |
| ஹம்ஸ-ஓகை: இவ | ஹம்ஸக்கூட்டங்களோடுபோல |
| பரிசிதிம் | ஸஹவாஸத்தை |
| குர்வதீ | செய்கிறதாயும் |
| வக்ஷோஜ-ஜங்கம-துஷார-சைல கடகே | ஸ்தனமண்டலமென்கிற ஹிமயமலையின் தாழ்வரையில் |
| ஸஞ்சாரம் ஆதன்வதீ | ஸஞ்சாரத்தைச்செய்கிறதாயும் |
| பாஸதே | விளங்குகிறது. |

காமாக்ஷியின் அழகிய மந்தஹாஸத்தின் காந்தி என்னும் கங்கையானது, குங்குமப்பூச் சேர்ந்த சந்தனக்குழம்பில் கலக்கப்பட்ட (கஸ்தூரியின்) கறுத்த காந்தியால் விசித்திர வர்ணத்தையடைந்ததாயும், ஹாரமாகப் போடப்பட்ட (வெண்மையான) முத்துக்களென்னும் ஹம்ஸங்களோடு பரிசயத்தைச் செய்துகொண்டிருப்பதாயும், ஸ்தநபாரமாகிற ஹிமயமலையின் தாழ்வரையில் ஸஞ்சாரத்தைச் செய்துகொண்டிருப்பதாயும் திகழுகிறது.

கங்கை ஹிமயமலையிலிருந்து கிளம்பி, யமுனா நதியோடு கலக்கும்போது வேறொரு நிறம் பெற்று, ஆங்காங்கு அன்னபக்ஷிகளோடு கூடியதாயிருக்கும். அம்பாளுடைய புன்சிரிப்பு என்னும் கங்கைக்கும் இவைகள் பொருந்தியிருக்கின்றன.

வெண்மையான புன்னகையின் சோதிவெள்ளமே கங்கை; பூசப்பட்ட குங்குமம் கஸ்தூரி முதலியன சேர்ந்த கலவைச் சாந்தின் மேல் படவே அக்காந்தி ஒரு விசித்திர வர்ணத்தை அடைகிறது. ஹாரத்திலுள்ள நல்லமுத்துக்களோடு சேரும்போது, கங்கை ஹம்ஸங்களோடு கூடியதுபோல இருக்கிறது. அழகிய பருத்த ஸ்தனங்களின் மேல் காந்தி பரவுவது ஹிமயமலைச் சிகரத்தில் ஸஞ்சரிப்பது போன்றுளது.

कम्बोर्वंशपरम्परा इव कृपासन्तानवल्लीभुवः
सम्फुल्लस्तबका इव प्रसृमरा मूर्ताः प्रसादा इव ।
वाक्पीयूषकणा इव त्रिपथगापर्यायभेदा इव
भ्राजन्ते तव मन्दहासकिरणाः कामाक्षि! काञ्चीप्रिये ॥ १५ ॥

கம்போ: வம்ச-பரம்பரா இவ க்ருபா-ஸந்தாநவல்லீ-புவ:
ஸம்புல்ல-ஸ்தபகா இவ ப்ரஸ்ருமரா மூர்த்தா:
ப்ரஸாதா இவ ।
வாக்-பீயூஷ-கணா இவ த்ரிபதகா-பர்யாய-பேதா இவ
ப்ராஜந்தே தவ மந்தஹாஸ-கிரணா: காமாக்ஷி !
காஞ்சீ-ப்ரியே ॥ (15)

| | |
|---|---|
| காஞ்சி ப்ரியே | காஞ்சி பட்டணத்தில் ஆசை யுள்ளவளான |
| காமாக்ஷி ! | ஏ காமாக்ஷியே ! |
| தவ | உனது |
| க்ருபா ஸந்தாந வல்லீ புவ: | கருணையாகிற ஸந்தானக்கொடி யிலிருந்து உண்டான |
| மந்தஹாஸ கிரணா: | புன்சிரிப்பின் காந்திகள் |
| கம்போ: வம்சபரம்பரா இவ | சங்கின் வம்சத்தின் வரிசை போலும் |
| ப்ரஸ்ருமரா: | பரவுகின்ற |
| ஸம்புல்ல ஸ்தபகா: இவ | மலர்ந்த பூங்கொத்துக்கள் போன்றும் |
| மூர்த்தா: | உருவெடுத்து வந்த |
| ப்ரஸாதா: இவ | அநுக்ரஹங்கள் போலவும் |
| வாக் பீயூஷ கணா: இவ | வாக்குகளென்ற அம்ருதத்தின் திவலைகள் போன்றும் |
| த்ரிபதகா பர்யாய பேதா: இவ | கங்கையின் வேறு ஒரு உருவம் போன்றும் |
| ப்ராஜந்தே | விளங்குகின்றன. |

காஞ்சி நகரில் ஆசையுள்ள காமாக்ஷியே ! உன் கருணை யென்னும் ஸந்தானக் கொடியிலிருந்துண்டான புன்சிரிப்பின் கிரணங்கள், சங்கின் வம்சத்தின் வரிசைகள்போலும், மலர்ந்த பூங்கொத்துக்கள்போலும், உருவெடுத்துவந்த அருள்போலும், வாக்கென்னும் அம்ருதத்தின் திவலைகள்போலும், கங்கையின் வேறொரு உருவம்போலும் விளங்குகின்றன.

ஒன்பதாவது சலோகத்தில கருணைப்பிரவாஹத்தில் மந்தஸ்மிதமானது முழுகியதாய் வர்ணித்திருக்கிறதையும், இதில் கிருபையாகிற கற்பகக்கொடியில் உண்டான பூங்கொத்துப் போன்று சொல்லப்பட்டிருக்கிறதையும் கவனிக்கவும்.

புன்முறுவல் வெளுப்பான பல வஸ்துக்களுக்கு ஸமானமாக இருக்கிறது என்கிறார். அவையாவன: சங்குக்கூட்டங்களின் வரிசை, மலர்ந்த பூங்கொத்துக்கள், உருக்கொண்ட அருள்கள், அம்ருதத்தின் திவிலைகள், கங்கையின் ரூபாந்தரம்.

த்ரிபதகா— (ஆகாசம், பூமி, பாதாளம் என்ற) மூன்று மார்க்கங்களில் ஓடுவதால் கங்கைக்குத் 'த்ரிபதகா' என்று பெயர். அந்த கங்கா ஜலம் வெளுப்பாயிருப்பதால் புன்னகைக்கு ஒப்பிடப்பட்டது.

"காஞ்சிபுரீ நாயிகே" என்றும் பாடம். "க்ருபாலதாந்தவல்லீ புவ:" என்பதை நாலாம் அடியிலுள்ள "மந்தஹாஸகிரணா:" என்பதற்கு விசேஷணமாகச் (அடைமொழியாக) செய்யாமல் கிட்ட இருக்கும் "ஸம்புல்லஸ்தபகா:" என்பதற்கே விசேஷணமாக்குவது ஸ்வரஸம். அப்போது, காஞ்சிபுரியின் நாயகியாகியகாமாக்ஷி! உனது மந்தஹாஸ கிரணங்கள், சங்கின் வம்சாவளிபோலவும், கருணையென்னும் கற்பகக்கொடியினின்று உண்டான மலர்ந்த பூங்கொத்துக்கள்போலவும்...... விளங்குகின்றன—என்பது பொருள்.

वक्षोजे घनसारपत्ररचनाभङ्गीसपत्नायिता
कण्ठे बन्धुरदन्तपत्रकुहनाव्यापारमुद्रायिता ।
ओष्ठश्रीनिकुरुम्बपल्लवपुटे प्रेङ्खत्प्रसूनायिता
कामाक्षि स्फुरतां (तात्) मदीयहृदये त्वन्मन्दहासप्रभा ॥ १६ ॥

வக்ஷோஜே கநஸார-பத்ர-ரசநா-பங்கீ-ஸபத்நாயிதா
கண்டே பந்துர-தந்த-பத்ர-குஹநா-வ்யாபார-முத்ராயிதா ।
ஓஷ்ட-ஸ்ரீ-நிகுரும்ப-பல்லவ-புடே ப்ரேங்கத்-ப்ரஸூ[நாயிதா
காமாக்ஷி! ஸ்புரதாம் (தாத்) மதீய-ஹ்ருதயே த்வத்-[மந்தஹாஸ-ப்ரபா ॥ (16)

| | |
|---|---|
| காமாக்ஷி! | ஏ! காமாக்ஷியே! |
| வக்ஷோஜே | ஸ்தனங்களில் |
| கநஸார-பத்ர-ரசநா-பங்கி-ஸம்பாத்நாயிதா | பச்சைக்கர்ப்பூரப் பூச்சுக்கு எதிரி போலிருப்பதும் |
| கண்டே | கழுத்தில் |
| பந்துர-தந்த-பத்ர-குஹநா-வ்யாபார-முத்ராயிதா | அழகிய கண்டாபரணத்தின் வஞ்சநாகார்யத்தின் முத்ரை போலும் |
| ஓஷ்ட-ஸ்ரீ-நிகுரும்ப-பல்லவ-புடே | உதடுகளின் காந்தி ஸமூஹ மாகிற தளிர்களில் |
| ப்ரேங்கத்-ப்ரஸூநாயிதா | விளங்குகிற புஷ்பம் போலவும் இருக்கிற |
| த்வந்-மந்த ஹாஸ-ப்ரபா | உனது புன்சிரிப்பின் காந்தி யானது |
| மதீய-ஹ்ருதயே | எனது மனதில் |
| ஸ்புரதாம் (தாத்) | பிரகாசிக்கட்டும். |

காமாக்ஷியே! ஸ்தனத்தில் பச்சைக்கற்பூரத்தில் எழுதப் பட்ட மகரிகாபத்ரங்களின் சோபைக்கு எதிரி போன்றதும், கழுத்தில் அணியப்பட்ட அழகிய மாலையின் காயத்திற்கு ஒரு முத்ரைபோன்றதும், உதடுகளின் காந்தியென்னும் தளிர் களில் பூத்த ஒரு புஷ்பம்போன்றதுமான உன் புன்னகையின் சோபை என் மனதில் பிரகாசிக்கட்டும்.

**வக்ஷோஜே கநஸார-பத்ர-ரசநா** — ஸ்திரீகள் கன்னங்கள் மார்பு முதலான இடங்களில் அழகுக்காகவும், வாஸனைக்காக வும் பச்சைக்கற்பூரம் முதலிய ஸுகந்தத்திரவ்யங்களால் மீன் போல் எழுதிக்கொள்வது வழக்கம். புன்னகையின் வெண்மை யான காந்தி ஸ்தனங்கள்மேல் விழுந்திருப்பதைப் பார்த்தால் கற்பூரத்தால் எழுதப்பட்ட மகரிகாபத்ரங்கள்தானோ இவை என்று தோன்றுகிறது.

**கண்டே....முத்ராயிதா**—மந்தஸ்மிதத்தின் காந்தியானது கழுத்துப்பக்கம் பாவும்போது, அழகிய காதணியினாலுண் டாகும் சோபை போலிருக்கிறது என்பது பொருள். தந்த பத்ரம்-குண்டலம் என்று சப்தகல்பத்ருமத்தில் சொல்லி யிருக்கிறது.

"கண்டே மௌக்திகஹாரயஷ்டிகிரணவ்யாபார...." என்னும் பாடத்தில், கழுத்தில் அணிந்திருக்கும் முத்து மாலையின் கார்யத்திற்கு முத்ரை போன்றது — என்பது பொருள்.

"கர்ணே பந்துரதந்தபத்ர குஹநா வ்யாபார முத்ராபிதா" என்று நிர்ணயஸாகர பிரஸில் அச்சிட்டபுஸ்தகத்தில் பாடம் காண்கிறது. அந்தப் பாடத்தில்—காது வரையில் பரவும் மந்தஹாஸத்தின் காந்தி, காதில் அணியும் ஆபரணத்தின் வியாபாரம் போலிருக்கிறது—என்பது பொருள். தந்தபத்ரம்-யானைத்தந்தத்தால் செய்யப்படும் காதில் அணியக் கூடிய ஓர் ஆபரணம். "கர்ணாவஸக்தாமலதந்தபத்ரம் மாதா ததீயம் முகமுந்நமய்ய" என்று குமாரஸம்பவத்தில் (ஸ. 7 ஸ். 23) சொல்லியபடி காதிலிடும் ஆபரணமே தந்தபத்ரம் என்பது அறியத்தக்கது.

येषां बिन्दुरिवोपरि प्रचलितो नासाग्रमुक्तामणि-
यॆषां दीन इवाधिकण्ठमयते हारः करालम्बनम् ।
येषां बन्धुरिवोष्ठयोररुणिमा धत्ते स्वयं रञ्जनं
कामाक्ष्याः प्रभवन्तु ते मम शिवोल्लासाय हासाङ्कुराः ॥

யேஷாம் பிந்துரிவோபரி ப்ரசலிதோ நாஸாக்ரமுக்தாமணி:
யேஷாம் தீந இவாதி கண்டமயதே ஹார: கராலம்பநம் 1
யேஷாம் பந்துரிவோஷ்டயோரருணிமா தத்தே ஸ்வயம் [ரஞ்ஜநம்
காமாக்ஷ்யா: ப்ரபவந்து தே மம சிவோல்லாஸாய ஹாஸாங்குரா: (17)

நாஸா-அக்ர-முக்தாமணி: — மூக்கின் நுனியிலிருக்கும் புல்லாக்கின் முத்தானது
யேஷாம் — எந்தப் புன்சிரிப்புக்களுடைய
உபரி ப்ரசலித: — மேலே செல்லுகிற,
பிந்து: இவ — திவலைபோல் தோன்றுகின்றனவோ
அதி-கண்டம் — கழுத்திலிருக்கிற
ஹார: — ஹாரமானது
தீந: இவ — களைத்தவன் போல்

| | |
|---|---|
| யேஷாம் | எந்த புன்சிரிப்புக்களுடைய |
| கர அவலம்பநம் | கைலாக்கை |
| அயதே | அடைகிறதோ |
| ஓஷ்டயோ: | உதடுகளினுடைய |
| அருணிமா | சிவப்பானது |
| யேஷாம் | எந்தப் புன்சிரிப்புகளுடைய |
| பந்து: இவ | பந்துபோல் |
| ஸ்வயம் | தானாகவே |
| ரஞ்சநம் | ஆதரவை (சிவப்பை) |
| தத்தே | அடைகிறதோ |
| தே | அப்படிப்பட்ட |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| ஹாஸ-அங்குரா: | புதிய புன்சிரிப்பின் கொழுந்துகள் |
| மம | எனக்கு |
| சிவ-உல்லாஸாய | க்ஷேமத்தின் அபிவிருத்தியின் பொருட்டு |
| ப்ரபவந்து | ஆகட்டும். |

புல்லாக்கின் முத்தானது காமாக்ஷிதேவியின் எந்த புன்சிரிப்புக்களுடைய மேல்நோக்கிச்செல்லும் ஒரு திவிலைபோன்றனதோ, கழுத்திலணிந்த ஹாரம் களைத்தவன்போல எவைகளின் கைலாக்கையடைகின்றதோ, உதடுகளின் செவ்வொளி பந்துபோல எவற்றின் ஆதரவைத் தானகவே அடைகிறதோ, அப்பேற்பட்ட புன்முறுவல்கள் எனக்கு மங்களங்களின் அபிவிருத்தியின்பொருட்டு ஆகட்டும்.

**யேஷாம் பிந்து: இவ... நாஸாக்ர-முக்தாமணி:—** மூக்கில் விளங்கும் புல்லாக்கின் முத்து அதரங்களில் திகழும் புன்முறுவலின் மேல்நோக்கிச்செல்லும் ஒரு திவிலையோ என்று சொல்லும்படியிருக்கிறது.

**தீந இவ ...... கராலம்பநம் :—** புல்லாக்கின் முத்தினுடைய கீழ்ச்செல்லும் கிரணங்களைப்பார்த்தால் தளர்ந்து கீழே விழுவதுபோல் தோன்றுகிற கழுத்தில் பிரகாசிக்கும் ஹாரத்தைத் தூக்குவதற்குக் கை கொடுப்பதுபோல் தோன்றுகிறது.

या जाड्याम्बुनिधिं क्षिणोति भजतां वैरायते कैरवै-
र्नित्यं या नियमेन या च यतते कर्तुं त्रिनेत्रोत्सवम् ।
बिम्बं चान्द्रमसं च वञ्चयति या गर्वेण सा तादृशी
कामाक्षि स्मितमञ्जरी तव कथं ज्योत्स्नेत्यसौ कीर्त्यते ॥ १८ ॥

**யா** ஜாட்யாம்பு-நிதிம் க்ஷிணோதி பஜதாம் வைராயதே [கைரவை:
நித்யம் யா நியமேந யா ச யததே கர்த்தும் [த்ரிநேத்ரோத்ஸவம் ।
பிம்பம் சாந்த்ரமஸம் ச வஞ்சயதி யா கர்வேண ஸா தாத்ருசீ
காமாக்ஷி ஸ்மித-மஞ்ஜரீ தவ கதம் ஜ்யோத்ஸ்நேத்யஸௌ [கீர்த்யதே ॥ (18)

| | |
|---|---|
| காமாக்ஷி ! | காமாக்ஷியே! |
| யா | எந்தப் புன்சிரிப்பானது |
| பஜதாம் | அண்டினவர்களுடைய |
| ஜாட்ய-அம்புநிதிம் | முட்டாள் தனமாகிய ஸமுத்ரத்தை |
| க்ஷிணோதி | வற்றும்படி செய்கிறதோ |
| யா | எந்தப் புன்சிரிப்பானது |
| நித்யம் | எப்போதும் |
| கைரவை : | ஆம்பல்களோடு |
| வைராயதே | வைரம் பாராட்டுகிறதோ |
| யா | எந்தப் புன்சிரிப்பானது |
| நியமேந | கட்டாயமாக |
| த்ரிநேத்ர-உத்ஸவம் | முக்கண்ணனுக்கு ஆனந்தத்தை |
| கர்த்தும் | செய்வதற்கு |
| யததே ச | யத்னமும் செய்கிறதோ |
| யா | எந்தப் புன்சிரிப்பானது |
| கர்வேண | கர்வத்தினால் |
| சாந்த்ரமஸம் பிம்பம் ச | சந்த்ர பிம்பத்தையும் |
| வஞ்சயதி | ஏமாற்றுகிறதோ |
| ஸா | அந்த |
| தாத்ருசீ | அப்பேர்ப்பட்ட |
| தவ | உனது |

| | |
|---|---|
| அதௌ ஸ்மிதமஞ்ஜரீ | இந்த மந்தஹாஸமலர்க்கொத்தானது |
| ஜ்யோத்ஸ்நா இதி | நிலவு என்று |
| கதம் | எப்படி |
| கீர்த்யதே | சொல்லப்படுகிறது? |

காமாக்ஷியே! எந்தப் புன்சிரிப்பானது ஆச்ரயித்தவர்களுடைய அஜ்ஞானமென்னும் கடலை வற்றச் செய்கிறதோ, எது எப்போதும் ஆம்பல் புஷ்பங்களோடு பகைமையைப்பாராட்டுகிறதோ, எது முக்கண்ணனை பரமசிவனுக்கு ஆநந்தத்தை அளிக்க முயலுகிறதோ, எது கர்வத்தால் சந்திரபிம்பத்தையும் ஏமாற்றுகிறதோ, அப்பேர்ப்பட்ட பிரஸித்தமான உன் (என் கண்முன் திகழும்) பூத்த புன்முறுவலை நிலா என்று கவிகள் கூறுவது எப்படி?

நிலாவுடன் மந்தஸ்மிதத்தை வித்வான்கள் ஒப்பிடுகிறார்கள். ஆனால் இவ்விரண்டுக்கும் பல வேற்றுமைகள் இருக்கின்றனவே என்று கவி குறிப்பிடுகிறார்.

நிலா கடலைப் பொங்கச் செய்யும்; ஆம்பல்களை மலரச் செய்யும்; சந்திரனுக்கும் சோபையைக் கொடுக்கும்; புன்முறுவலோ (அஜ்ஞானக்)கடலை வற்றச்செய்கிறது; (தன் வெண்மையின் காந்தியால்) ஆம்பல்களையும் (மீறி நிற்பதால்) பகைக்கிறது; (சோபையின்) கர்வத்தால் சந்திரமண்டலத்தையும் (விஞ்சி) வஞ்சிக்கிறது. இப்படி நிலாவைக்காட்டிலும் விபரீதமான குணங்களையுடைய உன் புன்முறுவலைக் கவிகள் எங்ஙனம் நிலாவோடு ஒப்பிடுகிறார்கள்.

आरूढा रभसात्पु(दु)रः पुररिपोराश्लेषणोपक्रमे
या ते मातरुपैत(ति) दिव्यतटिनीशङ्काकरी तत्क्षणम् ।
ओष्ठं (ओष्ठौ) वेपयति भ्रुवौ कुटिलयत्यानम्रयत्याननं
तां वन्दे मृदुहासपूरसुषमां * कामाक्षि कामप्रदे ॥ १९ ॥

* एकाम्रनाथप्रिये ஏகாம்ரநாதப்ரியே என்றும் பாடம்.

ஆரூடா ரபஸாத் (உர:)புர: புர-ரிபோ: ஆச்லேஷணோபக்ரமே
யா தே மாதருபேத(தி)-திவ்ய-தடிநீ-சங்கா கரீ தத்க்ஷணம் |
ஓஷ்டம் (டௌ) வேபயதி ப்ருவௌ குடிலயத்யாநம்ரயத்யாந [நம்
தாம் வந்தே ம்ருது-ஹாஸ-பூர-ஸுஷமாம்
[காமாக்ஷி! காமப்ரதே ll (19)

| | |
|---|---|
| **மாத:** | தாயாராயும் |
| **காமப்ரதே** | இஷ்டங்களைக் கொடுப்பவளாயுமிருக்கிற |
| **காமாக்ஷி!** | ஏ காமாக்ஷியே |
| **புர-ரிபோ:** | த்ரிபுரங்களுக்குச் சத்ருவான பரமசிவனுடைய |
| **ஆச்லேஷண-உபக்ரமே** | ஆலிங்கனத்தின் ஆரம்பத்தில் |
| **ரபஸாத்** | வேகமாக |
| **புர:** | முன்பாக |
| **ஆரூடா** | ஏறியிருக்கிற |
| **தே** | உனது |
| **யா** | எந்த புன்சிரிப்பானது |
| **உபேத-திவ்ய-தடிநீ-சங்கா-கரீ** | அங்கே வந்துள்ள தேவ கங்கை என்னும் ஸந்தேகத்தை உண்டுபண்ணுகிறதாக ஆகி |
| **தத்க்ஷணாத்** | உடனே |
| **ஓஷ்டம் வேபயதி** | உதட்டைத் துடிக்கும்படி செய்கிறதோ |
| **ப்ருவௌ** | புருவங்களை |
| **குடிலயதி** | நெரியச்செய்கிறதோ |
| **ஆநநம்** | முகத்தை |
| **ஆநம்ரயதி** | குனியச் செய்கிறதோ |
| **தாம்** | அப்படிப்பட்ட |
| **மந்த-ஹாஸ-பூர-ஸுஷமாம்** | மந்தஹாஸப் பிரவாஹத்தின் காந்தியை |
| **வந்தே** | நமஸ்கரிக்கிறேன். |

‘ஓஷ்டௌ’ என்ற பாடத்தில் உதடுகளை என்று அர்த்தம். “பாதருணாதி திவ்ய....” என்ற பாடத்தில், கங்கையென்னும் ஸந்தேஹத்தை உண்டுபண்ணிக்கொண்டு அருகில் வருகிறதோ, என்று அர்த்தம்.

“ஆரூடா ரபஸாத்புர:புரரிபோ:” என்னும் பாடத்தில் பரமசிவனின் மார்பை அடைந்திருக்கிற எந்த மந்தஹாஸமானது என்று அர்த்தம். பரமசிவன் பார்வதியை ஆலிங்கநம் செய்ய ஆரம்பிக்கும்போது பார்வதி மந்தஹாஸம் செய்தாள். வெளுப்பான மந்தஹாஸம் பரமசிவனின் மார்பில் வெள்ள

மிட்டது. அதைக்கண்டு பார்வதி கங்கை தான் வந்துவிட்டாளோ என்று ஸந்தேஹங்கொண்டாள் என்பது பொருள்.

எல்லா மனோரதங்களையும் நிறைவேற்றுபவளான தாயே காமாக்ஷி! முப்புரமெரித்த பரமசிவன் உன்னை ஆலிங்கனம் செய்ய ஆரம்பிக்கும்போதே (ஸந்தோஷத்துடன்) அவனை நோக்கிச்சென்ற எந்த உன் புன்சிரிப்பானது உடனேயே அவன் தலையில் இருக்கும் கங்கைதானோ என்ற ஸந்தேஹத்தை (உனக்கு) உண்டுபண்ணுவதாக ஆகி, (ப்ரணயகலஹத்தால் ஏற்பட்ட கோபத்தினால்) உன் உதடுகளைத் துடிக்கச் செய்கிறதோ, புருவங்களை நெரியச்செய்கிறதோ, முகத்தைக் குனியும்படி செய்கிறதோ, அப்படிப்பட்ட மந்தஹாஸப்ரவாஹத்தின் காந்தியை நமஸ்கரிக்கிறேன்.

பரமேச்வரன் இறுகத் தழுவும் தருணத்தில் புன்னகையின் வெண்மையான காந்தி வெள்ளமிடுகிறது. அது அவர் தலையில் விழுவதைப் பார்த்தால் அவர் தலையால் தாங்கும் கங்காதேவிதானோ என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. அதனால் கோபத்திற்கு அடையாளமான உதடு துடித்தல் புருவம் நெறித்தல் முதலியவைகளைச் செய்விக்கின்றது புன்சிரிப்பு என்கிறார். "ஆரூடா நபஸாத் சிர:" என்ற பாடம் கொண்டால் இவ்விதம் அர்த்தமாகும்.

वक्त्रेन्दोस्तव चन्द्रिका स्मितरुचिर्वल्गु स्फुरन्ती सतां
स्याच्चेद्युक्तमिदं चकोरमनसां कामाक्षि कौतूहलम् ।
एतच्चित्रमहर्निशं * यदधिकामेषा रुचिं गाहते
बिम्बोष्ठद्युमणिप्रभास्वपि च यद्बिब्बोकमालम्बते ॥ २० ॥

வக்த்ரேந்தோ: தவ சந்த்ரிகா ஸ்மிதருசி: வல்கு
[ஸ்புரந்தீ ஸதாம்
ஸ்யாத் சேத் யுக்தமிதம் சகோர-மநஸாம் காமாக்ஷி
[கௌதூஹலம் |
ஏதத் சித்ரமஹர்நிசம் யததிகா மேஷா ருசிம் காஹதே
பிம்போஷ்ட த்யு மணி-ப்ரபாஸ்வபி ச யத் பிப்வோக
[மாலம்பதே॥ (20)

* यदधिकामाभां सदा गाहते - யத் அதிகாம் ஆபாம் ஸதா காஹதே – என்று பாடாந்தரம்.

| | |
|---|---|
| காமாக்ஷி ! | காமாக்ஷியே |
| தவ | உனது |
| ஸ்மித—ருசி: | புன்சிரிப்பின் காந்தியானது |
| வக்த்ர—இந்தோ: | முகமாகிற சந்திரனுடைய |
| சந்த்ரிகா | நிலாவாக ஆகி |
| வல்கு | அழகாக |
| ஸ்புரந்தீ | பிரகாசிக்கிறதாய் |
| சகோர மநஸாம் | சகோர பக்ஷி போன்ற மனதுள்ள |
| ஸதாம் | ஸாதுக்களுக்கு |
| கௌதூஹலம் | ஆனந்தகரமாக |
| ஸ்யாத் சேத் | இருக்குமானல் |
| இதம் யுக்தம் | இது நியாயம் |
| அஹர்-நிசம் | பகலும் இரவும் |
| ஏஷா | இது |
| அதிகாம் | அதிகமான |
| ருசிம் | காந்தியை |
| காஹதே | அடைகிறது என்பதும் |
| பிம்போஷ்ட | கோவைக்கனிபோன்ற உதடுகளாகிற |
| த்யுமணி | ஸூர்யனுடைய |
| ப்ரபாஸு அபி | பிரபை இருக்கும்போது கூட |
| பிப்போகம் | விலாஸத்தை |
| ஆலம்பதே | அடைகிறது |
| யத் | என்பது யாதொன்றுண்டோ |
| ஏதத் | இது |
| சித்ரம் | ஆச்சர்யம் |

காமாக்ஷியே! உன் புன்னகையின் காந்தி முகமென்னும் சந்திரனின் நிலவு போன்று, சகோர பக்ஷி போன்ற மனதுள்ள ஸாதுக்களுக்கு ஆநந்தத்தை அளித்துக்கொண்டு அழகாகப் பிரகாசிக்கிறது என்று கூறினல் இது தகுதியானதே. ஆனல் இது இரவும் பகலும் அதிகமான ஒளியைப் பெற்று விளங்குகிறது என்பதும், கோவைப்பழம் போன்ற உதடுகளென்னும் ஸூரியனுடைய வெளிச்சமிருக்கும்போதும் விலாஸத்தைப் பெற்றுத் திகழ்கிறது என்பதும் ஆச்சரியமாயிருக்கிறது.

*முகம் என்கிற சந்திரனின் நிலவான புன்சிரிப்பு, இரவும் பகலும் அதிகமான காந்தியை அடைந்திருக்கிறது என்பதுப் கோவைப்பழம் போன்ற உதடுகள் என்னும் சூரியன் ஒளி வீசிக்கொண்டிருக்கிறபோது அது விலாஸத்தை அடைந்திருக்கிறதென்பதும் ஆச்சரியம். சந்திரிகை இரவில் மட்டும் பிரகாசிக்குமேயொழிய இரவும் பகலும் பிரகாசியாது. ஸூர்யன் ஒளி வீசும்போது சந்திரிகை சோபையின்றியிருக்குமேயன்றி விலாஸத்தை யடையமாட்டாது. ஆனுல் முகமாகிய சந்திரனின் நிலவு போன்ற உனது புன்சிரிப்பு இதற்கு மாருக இருக்கிறது என்கிருர்.*

*'யத் அதிகாம் ஆபாம் ஸதா காஹதே' என்ற பாடத்தில் அதிகாம் ஆபாம்-அதிகமான காந்தியை, ஸதா காஹதே இதி யத்-எப்போதும் அடைகிறது-என்பதும், என்ற பொருள்.*

सादृश्यं कलशाम्बुधेर्वहति ते कामाक्षि मन्दस्मितं
शोभामोष्ठरुचाम्ब विद्रुमभवामेतद्विदां ब्रूमहे ।
एकस्मादुदितं पुरा किल पपौ सद्यः पुराणः पुमान्
अद्याप्यन्यसमुद्भवं रसयते माधुर्यरूपं रसम् ॥ २१ ॥

ஸாத்ருச்யம் கலசாம்புதே: வஹதி தே காமாக்ஷி! [மந்தஸ்மிதம்
சோபாமோஷ்ட-ருசாம்ப வித்ரும-பவாம் ஏதத் பிதாம் [ப்ரூமஹே |
ஏகஸ்மாத் உதிதம் புரா கில பபௌ ஸத்ய: புராண: [புமான்
அத்யாப்யந்ய ஸமுத்பவம் ரஸயதே மாதுர்ய ரூபம் [ரஸம் ll (21)

*பாடாந்தரம்—*

साहाय्यं कलशाम्बुधेर्वहति ते कामाक्षि मन्दस्मितं
शोभामोष्ठरुचा च विद्रुमभवामेतद्विदां ब्रूमहे ।
एतस्मादुदितां पुरा किल पपौ शर्वः पुराणः पुमा-
नेतन्मध्यसमुद्भवां रसयते माधुर्यरूपां सुधाम् ॥ २१ ॥

ஸாஹாய்யம் கலசாம்புதே: வஹதி தே காமாக்ஷி! மந்தஸ்மிதம்
சோபாமோஷ்ட-ருசா ச வித்ரும-பவா மேதத் பிதாம் ப்ரூமஹே l

ஏதஸ்மாத் உதிதாம் புரா கில பபௌ சர்வ: புராண: புமாந்
ஏதந்மத்ய ஸமுத்பவாம் ரஸயதே மாதுர்ய-ரூபாம்

[ஸுதாம் ll (21)

| | |
|---|---|
| அம்ப | தாயே |
| காமாக்ஷி | காமாக்ஷியே! |
| தே | உன்னுடைய |
| மந்தஸ்மிதம் | புன்சிரிப்பானது |
| கலசாம்புதே: | பாற்கடலுக்கு |
| ஸாத்ருச்யம் | ஒற்றுமையை |
| வஹதி | அடைந்திருக்கிறது |
| ஓஷ்ட ருசா | உதடுகளின் காந்தியால், (பாற்கடலிருக்கும்) |
| வித்ரும-பவாம் | பவழத்தினின்று உண்டாகும் |
| சோபாம் | அழகை |
| வஹதி | பெற்றுள்ளது. (ஆனால்) |
| ஏதத்-பிதாம் | (இதில்) இந்த வித்தியாஸத்தை |
| ப்ரூமஹே | சொல்லுகிறோம் |
| புராண: புமான் | புராண புருஷனான சிவன் |
| புரா கில | முன்பு ஒரு காலத்தில் |
| ஏதஸ்மாத் | ஒன்றிலிருந்து |
| உதிதாம் | உண்டான |
| ரஸம் | ரஸத்தை (விஷத்தை) |
| ஸத்ய: | உடனே |
| பபௌ | பருகிவிட்டான் |
| அந்ய ஸமுத்பவாம் | மற்றையதிலிருந்து உண்டாகிற |
| மாதுர்யரூபாம் | மதுரமயமான |
| ரஸம் | ரஸத்தை (அமிருதத்தை) |
| அத்ய அபி | இப்பொழுதும்கூட |
| ரஸயதே | பருகி அனுபவித்துக்கொண்டேயிருக்கிறான் |

தாயே காமாக்ஷி! உன் புன்சிரிப்பு பாற்கடலோடு ஒற்றுமையை அடைந்திருக்கிறது; உதடுகளின் காந்தியால் அதிலுள்ள பவழத்தின் சோபையையும் பெற்றிருக்கிறது. ஆனால் (இரண்டுக்கும்) இந்த ஒரு வித்தியாஸம் உள்ளது என்று கூறுகிறோம். புராண புருஷனான பரமசிவன் ஒன்றிலிருந்து

(பாற்கடலிலிருந்து) உண்டான ரஸத்தை (விஷத்தை) உடனே பருகிவிட்டான்; மற்றொன்றிலிருந்து உண்டாகும் மதுரமயமான ரஸத்தை இன்னமும் ரஸித்துக்கொண்டேயிருக்கிறான்.

தேவியின் ஸ்மிதத்திற்கும், பாற்கடலுக்கும் ஒற்றுமையிருந்தபோதிலும் வேற்றுமையும் காணப்படுகிறது. பாற்கடல் வெளுப்பாயும் பவழத்தின் காந்தியோடு கூடியும் இருக்கிறது. தேவியின் ஸ்மிதமும் வெளுப்பாகவும் பவழம்போன்ற அதரங்களின் சோபையோடும் அழகாக இருக்கிறது. ஆனால் அவற்றின் வேற்றுமையாவது: பாற்கடலில் உண்டான விஷத்தை உடனே பரமேச்வரன் பானம் பண்ணிவிட்டார். மந்தஸ்மிதத்தில் இருந்து உண்டாகும் அம்ருதத்தையோ இன்னும் பருகிக்கொண்டேயிருக்கிறார் என்பதாம்.

பாடாந்தரத்தில்—

"ஸாஹாய்யம்" என்பதற்கு ஸஹாயத்தன்மையை என்று அர்த்தம். அதாவது ஒப்புமையை என்பதாம். "ஏதஸ்மாத் ........ஸுதாம்" என்பதில், ஏதஸ்மாத் - இந்தத் திருப் பாற்கடலிலிருந்து, உதிதம் - உண்டானதை (விஷத்தை) புராகில - முன்பு, புராண: புமாந் சர்வ:- புராண புருஷனை பரமசிவன், பபௌ - பானம் செய்தார். ஏதந்மத்ய ஸமுத்பவாம் - வேறான மந்தஸ்மிதத்தின் மத்தியிலிருந்து உண்டான, மாதுர்ய ரூபாம் ஸுதாம் - இனிமையான அமுதத்தை, அத்ய அபி ரஸயதே — இப்பவும் பருகிக்கொண்டே இருக்கிறார். 'ஏகஸ்மாத் உதிதம் விஷம் கிலபபௌ சர்வ:' என்றும் பாடம்.

उत्तुङ्गस्तनकुम्भशैलकटके विस्तारिकस्तूरिका-
पत्रश्रीजुषि चञ्चलाः स्मितरुचः कामाक्षि ते कोमलाः ।
सन्ध्यादीधितिरञ्जिता इव मुहुः सान्द्राधरज्योतिषा
व्यालोलामलशारदाभ्रशकलव्यापारमातन्वते ॥ २२ ॥

உத்துங்க-ஸ்தந-கும்ப-சைல-கடகே விஸ்தாரி-கஸ்தூரிகா
பத்ர-ஸ்ரீஜுஷி சஞ்சலா: ஸ்மித-ருச: காமாக்ஷி! தே [கோமலா: |
ஸந்த்யா-தீதிதி-ரஞ்ஜிதா இவ முஹு: ஸாந்த்ரா தர- [ஜ்யோதிஷா
வ்யாலோலா-மல-சாரதாப்ர-சகல-வ்யாபாரம் ஆதந் [வதே || (22)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| விஸ்தாரி-கஸ்தூரிகா-பத்ர-ஸ்ரீ-ஜுஷி | விஸ்தாரமாகக் கஸ்தூரியால் எழுதப்பட்டுள்ள பத்திரங்களின் அழகோடு கூடிய |
| உத்துங்க-ஸ்தந-கும்ப-சைல கடகே | உயர்ந்த கும்பம்போன்ற ஸ்தனங்களாகிற பர்வதங்களின் தாழ்வரையில் |
| சஞ்சலா: | சலிக்கின்றவைகளாயும் |
| கோமலா: | மனோக்ஞங்களாயுமுள்ள |
| தே | உன்னுடைய |
| ஸ்மிதருச: | சிரிப்பின் காந்திகள் |
| ஸாந்த்ர-அதர-ஜ்யோதிஷா | அழகிய உதட்டின் காந்தியால் |
| முஹு: | அடிக்கடி |
| ஸந்த்யா-தீதிதி-ரஞ்ஜிதா: இவ | ஸந்தியாகால காந்தியால் சிவப்பு நிறமாகச் செய்யப்பட்டவைபோல் இருக்கின்றவைகளாய் |
| வ்யாலோல-அமல-சாரத அப்ர-சகல-வ்யாபாரம் | அசைகிறதும் வெண்மையுமான சரத்காலமேகங்களின் சிதறிய துண்டங்களின் செயலை |
| ஆதந்வதே | செய்கின்றன. |

காமாக்ஷியே! விஸ்தாரமாகக் கஸ்தூரியால் எழுதப்பட்டுள்ள மகரிகாபத்ரங்களின் அழகோடு கூடிய உயர்ந்த ஸ்தனபாரங்களாகிய பர்வதங்களின் தாழ்வரையில் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பவைகளும், மனோஹரமானவைகளும், அடிக்கடி அழகிய உதடுகளின் காந்தியால் ஸந்தியாகாலத்தின் செவ்வொளியால் சிவப்பாகச் செய்யப்பட்டவைபோல் இருப்பவைகளுமான உன்னுடைய புன்முறுவலின் காந்திகள், மெள்ள அசைந்துகொண்டிருக்கும் சரத்காலத்து வெண்மையான மேகங்களின் சிதறிய துண்டங்களின் சோபையை அடைகின்றன.

சரத்காலத்தில் நிர்மலமான ஆகாயத்தில் காணப்படும் வெண்மையான மேகங்கள் உயர்ந்த பர்வதங்களின் தாழ்வரையில் ஸஞ்சரிக்கும்போது, ஸந்தியாகாலம் வந்தால் மேற்

திசையின் செவ்வொளி அசோகங்களில் விழுந்து அவை களுக்கு ஒரு புதிய சோபையைக் கொடுத்து மனதைக் கவர் கின்றவைகளாகச் செய்யும்.

தேவியின் வெண்ணிறமான புன்சிரிப்பின் வெள்ளமிடும் காந்தியே வெள்ள வெள்ள உலவும் சரத்கால மேகங்கள்; உன்னதமான ஸ்தனங்களே பர்வதத்தின் தாழ்வரைகள்; அழகிய அதரங்களின் சிவந்த காந்தியே ஸந்தியாகாலத்தின் செவ்வொளி. இதனால் புன்சிரிப்பின் காந்தி அதரங்களின் சோபையோடு கலந்து மார்பில் விழுவதைப் பார்த்தால் பர்வதங்களில் மாலை வேளையில் ஸஞ்சரிக்கும் செவ்வொளி பூசிய சரத்கால மேகத்துண்டங்கள் போல் மனோஹரமாக இருக்கின்றது என்கிறார்.

ஶாரத-அப்ர — மழை காலத்திற்குப் பிறகு வருவது சரத் ருது; நீருண்டு கறுத்திருந்த மேகங்கள் மழையைப் பொழிந்து விட்ட பிறகு வெளுப்பாயிருப்பதாலும் அக்காலத்தில் ஆகா யம் நிர்மலமாயிருப்பதாலும் இதைத் தேவியின் புன்னகைக்கு ஒப்பிடுகிறார்.

क्षीरं दूरत एव तिष्ठतु कथं वैमल्यमात्रादिदं
मातस्ते सहपाठवीथिमयतां मन्दस्मितैर्मञ्जुलैः ।
किञ्चेयं तु भिदास्ति दोहनवशादेकं तु (तत्तु) सञ्जायते
कामाक्षि स्वयमर्थितं प्रणमतामन्यत्तु(मेतत्तु) दोदुह्यते ॥ २३ ॥

க்ஷீரம் தூரத ஏவ திஷ்டது கதம் வைமல்ய-மாத்ராதிதம்
மாதஸ்-தே ஸஹபாட-வீதிமயதாம் மந்த-ஸ்மிதைர்-
[மஞ்ஜுலை: |
கிஞ்சேயம் து பிதாऽஸ்தி தோஹந-வசாத் ஏகம் (ஏதத்) து
[ஸஞ்ஜாயதே
காமாக்ஷி! ஸ்வயமர்த்திதம் ப்ரணமதாம் அந்யத் (ஏதத்) து
[தோதுஹ்யதே ॥ (23)

| | |
|---|---|
| மாத: | தாயான |
| காமாக்ஷி! | ஏ காமாக்ஷியே! |
| க்ஷீரம் | பாலானது |
| தூரத ஏவ | தூரத்திலேயே |
| திஷ்டது | இருக்கட்டும் |

இதம் — இந்த பாலானது
வைமல்யமாத்ராத் — வெண்மையினால் மாத்திரம்
தே — உனது
மஞ்ஜுலை: — அழகு பொருந்திய
மந்தஸ்மிதை: — புன்சிரிப்புக்களோடு
ஸஹபாடவீம் — ஒத்திருக்கும் நிலைமையை
கதம் அயதாம் — எப்படி அடையமுடியும்?
கிஞ்ச — மேலும்
இயம் து பிதா — இந்த வேற்றுமையானது
அஸ்தி — இருக்கிறது
ஏகம் து — ஒன்று (பாலோவென்றால்)
தோஹநவசாத் — கறப்பதாலேயே
ஸஞ்ஜாயதே — உண்டாகிறது
அந்யத் து — மற்றொன்றான புன்சிரிப்போ வென்றால்
ப்ரணமதாம் — நமஸ்கரிப்பவர்களுடைய
அர்த்திதம் — வேண்டியதை
ஸ்வயம் — தானாகவே
தோதாஹ்யதே — விசேஷமாய்ச் சுரந்து கொடுக்கிறது

தாயே காமாக்ஷி! (உன் புன்சிரிப்பின் பெருமையோடு ஒப்பிட்டால்) பால் தூரத்திலேயே நிற்கவேண்டும். அது வெண்மையாயிருப்பதினால் மாத்திரம் உன் அழகிய புன்னகைகளோடு ஒற்றுமையை எப்படி அடைய முடியும்? மேலும் அவைகளுக்குள் இந்த வேற்றுமையும் இருக்கிறது; ஒன்று (அதாவது பால்) பிறர் கறப்பதனால் உண்டாகிறது; மற்றது (அதாவது உன் புன்னகை) வணங்குவோர்களுடைய வேண்டியவற்றைத் தானாகவே அதிகமாய்ச் சுரந்து கொடுக்கிறது.

மந்தஸ்மிதம் பால்போல் வெண்மையாய் இருக்கிறது என்று சொல்லலாம். ஆனால் பால் வேறொருவர் கறப்பதால் உண்டாகிறது. புன்சிரிப்போ அன்போடு நமஸ்கரிப்பவர்களுக்கு வேண்டியதைத் தானாகவே சுரந்து கொடுக்கிறது. ஆகையால் தேவியின் புன்சிரிப்போடு பாலை ஒப்பிட்டுப் பார்க்கில், பால் லஜ்ஜையால் ஒதுங்கி நிற்க வேண்டியது என்பது கருத்து.

**ஸஹ-பாட-வீதிம்**—சேர்ந்து படிப்பவர்களின் வழி, அதாவது ஸாத்ருச்யம்.

> कर्पूरैरमृतांशु(न्तु)भिर्जननि ते कान्तैश्च चन्द्रातपै-
> मुक्ताहारगुणैर्मृणालवलयैर्मुग्धस्मितश्रीरियम् ।
> श्रीकाञ्चीश्वरि सज्जनैः समतया कामाक्षि संस्तूयते
> तत्तादृङ्मम तापशान्तिविधये किं देवि मन्दायते ॥ २४ ॥

கர்ப்பூரை: அம்ருதாம்சு(பு)பி: ஜநநி! தே காந்தை: ச
[சந்த்ராதபை:
முக்தா-ஹார-குணை: ம்ருணாள-வலயை: மந்த-
[ஸ்மித-ஸ்ரீரியம் |
ஸ்ரீ காஞ்சீச்வரி! ஸஜ்ஜநை: ஸமதயா காமாக்ஷி!
[ஸம்ஸ்தூயதே
தத் தாத்ருக் மம தாப-சாந்தி-விதயே கிம் தேவி
[மந்தாயதே ॥ (24)

**कर्पूरैरमृतैर्जगज्जननि ते** *கர்ப்பூரைரம்ருதை: ஜகஜ்ஜநநி தே*-என்றும் **श्रीकाञ्चीपुरनायिके समतया संस्तूयते सज्जनैः** *ஸ்ரீ காஞ்சீபுரநாயிகே ஸமதயா ஸம்ஸ்தூயதே ஸஜ்ஜநை:* என்றும் பாடாந்தரம்.

| | |
|---|---|
| ஜநநி! | தாயே |
| தேவி | தேவியே |
| ஸ்ரீ காஞ்சீச்வரி! | காஞ்சீ நகர ஈச்வரியே |
| காமாக்ஷி! | ஏ காமாக்ஷி! |
| தே | உனது |
| இயம் | இந்த |
| மந்த-ஸ்மித-ஸ்ரீ: | மந்தஹாஸ காந்தியானது |
| அம்ருதாம்சுபி: | அம்ருத கிரணங்களோடும் |
| கர்ப்பூரை: | பச்சைக் கற்பூரத்தோடும் |
| காந்தை: | அழகு பொருந்திய |
| சந்த்ராதபை: | நிலாவோடும் |
| முக்தா-ஹார-குணை: | முத்து ஹாரஸரங்களோடும் |
| ம்ருணாள-வலயை: | தாமரைத் தண்டுகளோடும் |
| ஸமதயா | ஒத்திருப்பதாக |
| ஸஜ்ஜநை: | பெரியோர்களால் |
| ஸம்ஸ்தூயதே | புகழப்படுகிறது. |

| | |
|---|---|
| தத் தாத்ருக் | அப்படிப்பட்ட புன்சிரிப்பானது |
| மம | எனது |
| தாப-சாந்தி-விதயே | தாபத்தைக் குறைக்கும் விஷயத்தில் |
| கிம் மந்தாயதே | ஏன் தாமஸிக்கிறது? |

காஞ்சீச்வரியே! தாயே! காமாக்ஷி தேவியே! உனது இந்த மந்தஹாஸகாந்தி அம்ருத கிரணங்களோடும், பச்சைக் கற்பூரத்தோடும், அழகு பொருந்திய நிலாவோடும், முத்து ஹாரஸங்களோடும், தாமரைத்தண்டுகளோடும் ஸமானமாயிருப்பதாக ஸாதுக்களால் மிகவும் புகழப்படுகிறது. அப்படி குளிர்ச்சியான தன்மையுள்ள உன் புன்சிரிப்பு என் தாபத்தைப் போக்கும் விஷயத்தில் மட்டும் ஏன் தாமதிக்கிறது?

தேவியே! என்னுடைய கஷ்டம் நான் செய்த வினைக்கு ஏற்குமாயினும் உம்முடைய புன்சிரிப்பாகிய திருவருட்பெருக்கத்துக்கு ஏற்காதென்பதாம். அதாவது: உன் புன்சிரிப்போ உலகத்தில் உஷ்ணத்தைப் போக்கவல்லவையும், குளிர்ச்சியுள்ளவைகளுமான கற்பூரம், அமுதம், நிலா, முத்து, தாமரைத்தண்டு என்பவைகளுக்கு ஸமானமாய் இருப்பதாகப் பெரியோர்களால் துதிக்கப்படுகிறது. ஆனால் என் ஸம்ஸார தாபத்தைப் போக்கும் விஷயத்தில் மட்டும் ஏன் தாமதிக்கிறது.

பாடாந்தரத்தில் — ஜகத் ஜநநி - உலகத்துக்கு எல்லாம் தாயே! காமாக்ஷி, முக்தஸ்மித ஸ்ரீ: - அழகிய புன்சிரிப்பின் வனப்பு - என்பது பொருள். "அம்ருதாம்புபி:" என்றும் பாடத்தில் அமுத ஜலங்களோடும் என்று பொருள். "காஞ்சீபுராயிகே" என்ற பாடத்தில் பொருளில் மாறுதலில்லை.

मध्ये गर्भितमञ्जुवाक्यलहरीमाध्वीझरीशीतला
मन्दारस्तबकायते जननि ते मन्दस्मितांशुच्छटा ।
यस्या वर्धयितुं मुहुर्विकसनं कामाक्षि कामद्रुहो
वल्गुर्वीक्षणविभ्रमव्यतिकरो वासन्तमासायते ॥ २५ ॥

மத்யே-கர்பித-மஞ்ஜு-வாக்ய-லஹரீ-மாத்வீ-ஜ்ஜரீ-சீதளா
மந்தார-ஸ்தபகாயதே ஜநநி! தே மந்த-ஸ்மிதாம்.
[சுச்-சடா |

யஸ்யா வர்த்தயிதும் முஹு:-விகஸநம் காமாக்ஷி [காமத்ருஹ:
வல்குர்-வீக்ஷண-விப்ரம-வ்யதிகரோ வாஸந்த [மாஸாயதே ll (25)

| | |
|---|---|
| ஜநநி! | தாயாரான |
| காமாக்ஷி! | ஏ காமாக்ஷியே! |
| யஸ்யா: | எதனுடைய (எந்த புன்சிரிப்பினுடைய) |
| விகஸநம் | விகாஸத்தை |
| முஹு: | அடிக்கடி |
| வர்த்தயிதும் | விருத்தி செய்வதற்கு |
| காமத்ருஹ: | காமனைக்கொன்ற பரமசிவனுடைய |
| வல்கு: | அழகு பொருந்திய |
| வீக்ஷண-விப்ரம-வ்யதிகர: | கண் பார்வையின் சுழற்சிகளின் போக்கானது (சேர்க்கையானது) |
| வாஸந்த-மாஸாயதே | வஸந்தமாஸகாலமாக விளங்குகிறதோ |
| மத்யே-கர்பித-மஞ்ஜு-வாக்ய-லஹரீ-மாத்வீ ஜரீ தளா | நடுவில் நிறைந்த அழகிய சொற்பெருக்கென்றும் தேன் அருவியினால் குளிர்ந்ததாயுள்ள |
| தே | உன்னுடைய |
| மந்தஸ்மித-அம்சு-ச்சடா | மந்தஹாஸத்தின் காந்தியின் ஸமூஹமானது |
| மந்தார-ஸ்தபகாயதே | மந்தாரப் பூங்கொத்தாக விளங்குகிறது. |

எந்த புன்சிரிப்பினுடைய மலர்ச்சியை அடிக்கடி அதிகப்படுத்துவதற்காக பரமசிவனுடைய அழகு பொருந்திய பார்வைகளின் ஸம்பந்தப் வஸந்தருதுவின் மாதங்களாக இருக்கின்றதோ, நடுவில் நிறைந்திருக்கும் அழகிய சொற்பெருக்கு என்ற தேன் அருவியினால் குளிர்ந்துள்ள உன்னுடைய அந்தப் புன்சிரிப்பின் காந்தியானது மந்தாரப்பூங்கொத்தாக விளங்குகிறது.

*தேவியின் புன்சிரிப்பை மந்தாரப் புஷ்பத்திற்கும், வாக் விசேஷத்தைப் புஷ்பத்தில் உள்ள தேனுக்கும், பரமேச்வரனுடைய பார்வையை வஸந்தருதுவுக்கும் ஒப்பிடுகிறார்.*

बिम्बोष्ठद्युतिपुञ्जरञ्जितरुचिस्त्वन्मन्दहासच्छटा
कल्याणं गिरिसार्वभौमतनये कल्लोलयत्वाशु मे ।
फुल्लन्मल्लिपिनद्धहल्लकमयी कामाक्षि मालेव या
श्री काञ्चीश्वरि मारमर्दितुरुरोमध्ये मुहुर्लम्बते ॥ २६ ॥

பிம்போஷ்ட-த்யுதி-புஞ்ஜ-ரஞ்ஜித-ருசிஸ்-த்வன்-
[மந்தஹாஸச்-சடா
கல்யாணம் கிரி-ஸார்வபௌம-தநயே கல்லோல
[யத்வாசு மே |
புல்லன்-மல்லி-பிநத்த-ஹல்லக-மயீ காமாக்ஷி!
[மாலேவ யா
ஸ்ரீகாஞ்சீச்வரி! மார-மர்த்திது: உரோ-மத்யே
முஹுர்-லம்பதே ll (26)

हल्लकमयी मालेव या पेशला — *ஹல்லகமயீ மாலேவ யா பேசலா—என்றும் பாடம்.*

| | |
|---|---|
| *ஸ்ரீ காஞ்சீச்வரி!* | *ஸ்ரீ காஞ்சீபட்டணத்தின் யஜமானியான* |
| *கிரி-ஸார்வபௌம-தநயே* | *பர்வத ராஜனான ஹிமவானின் குமாரியான* |
| *காமாக்ஷி!* | *காமாக்ஷியே!* |
| *யா* | *எந்தப் புன்சிரிப்பானது* |
| *புல்லத்-மல்லி-பிநத்த-ஹல்லக-மயீ* | *மலர்ந்த மல்லிகைப் பூவோடு தொடுத்த செங்கழுநீர் புஷ்பங்களாலான* |
| *மாலா இவ* | *மாலைபோல்* |
| *மார-மர்த்திது:* | *மன்மதனை ஸம்ஹாரம் செய்த பரமசிவனுடைய* |
| *உரோ-மத்யே* | *மார்பு நடுவில்* |
| *முஹு:* | *அடிக்கடி* |
| *லம்பதே* | *தொங்குகிறதோ* |
| *[ஸா* | *அப்படிப்பட்ட]* |

| | |
|---|---|
| பிம்போஷ்ட-த்யுதி-புஞ்ஜ-ரஞ்ஜித-ருசி: | கோவைப்பழம் போன்ற உதடுகளின் கிரணங்களின் ஸமூகங்களால் சிவப்பாகச் செய்யப்பட்ட காந்தியை உடைய |
| த்வத்-மந்தஹாஸச்-சடா | உனது மந்தஹாஸ ராசியானது |
| மே | எனக்கு |
| கல்யாணம் | க்ஷேமத்தை |
| ஆசு | சீக்கிரத்தில் |
| கல்லோலயது | விருத்தி செய்யட்டும். |

காஞ்சிக்கு அதீச்வரியும் பர்வத ராஜகுமாரியுமான காமாக்ஷியே! எந்தப் புன்சிரிப்பானது மலர்ந்த மல்லிகைப் புஷ்பங்களோடு சேரத் தொடுக்கப்பட்ட செங்கழுநீர்ப் புஷ்பமாலை போல பரமசிவனுடைய மார்பில் அடிக்கடி தொங்கிக்கொண்டிருக்கிறதோ, கோவைப் பழம்போன்ற உதடுகளின் கிரணங்களின் ஸமூஹங்களால் சிவப்பாகச் செய்யப்பட்ட சோபையையுடைய உனது மந்தஹாஸத்தின் ராசியானது எனது க்ஷேமத்தை மேன்மேலும் சீக்கிரத்தில் விருத்தி செய்யட்டும்.

இங்கே திரிசதியில் "கல்யாணீ" என்ற நாமத்தின் பொருளும், "பவது ஸா கல்யாண ஸந்தோஹினீ" என்ற முடிவுடைய 8-வது ச்லோகத்தின் கருத்தும் கவனிக்கத்தக்கது.

தேவி, தன் நாயகனை பரமசிவனை புன்முறுவலுடன் நோக்கும்போது அதரங்களின் சிவப்பும், புன்முறுவலின் வெளுப்பும் கலந்து அவர் மார்பின்மேல் வீசுவதைப் பார்த்தால், மல்லிகைப் புஷ்பங்களையும் செங்கழுநீர்ப்பூக்களையும் வைத்துச் சேரத்தொடுக்கப்பட்ட ஒரு மாலை அவருடைய மார்பில் விளங்குவது போன்றுளது என்கிறார்.

बिभ्राणा शरदभ्रविभ्रमदशां विद्योतमानाप्यसौ
कामाक्षि स्मितमञ्जरी किरति ते कारुण्यधारारसम् ।
आश्चर्यं शिशिरीकरोति जगतीमालोक्य चैनामहो
कामं खेलति नीलकण्ठहृदयं कौतूहलान्दोलितम् ॥ २७ ॥

பிப்ராணா சரதப்ர-விப்ரம-தசாம் வித்யோதமானாப்யஸௌ
காமாக்ஷி! ஸ்மித-மஞ்ஜரீ கிரதி தே காருண்ய-தாரா-
[ரஸம் |

ஆச்சர்யம் சிசிரீ-கரோதி ஜகதீமாலோக்ய சைநாமஹோ
காமம் கேலதி நீலகண்ட-ஹ்ருதயம் கௌதூஹ
[லாந்தோளிதம் ll (27)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தே | உனது |
| அமௌ ஸ்மித-மஞ்ஜரீ | இந்தப் புன்னகை பூங்கொத்தானது |
| சரத்-அப்ர-விப்ரம-தசாம் | சரத்கால மேகத்தின் அழகு நிறைந்த நிலைமையை |
| ப்ராப்ய | வகிக்கிறதாக |
| வித்யோதமானா அபி | விளங்கிக்கொண்டிருந்த போதிலும் |
| காருண்ய-தாரா-ரஸை | கருணை ரஸத்தின் தாரையை |
| கிரதி | வர்ஷிக்கிறது. |
| ஆச்சர்யம் | ஆச்சரியம். |
| ஜகதீம் | உலகை |
| சிசிரீ-கரோதி | குளிரச்செய்கிறது. |
| ச | இன்னும் |
| ஏநாம் ஆலோக்ய | இதைப் பார்த்து |
| நீலகண்ட-ஹ்ருதயம் | பரமசிவனாகிற மயிலின் மனதானது |
| கௌதூஹல-ஆந்தோளிதம் | உத்ஸாஹம் நிறைந்ததாய் |
| காமம் கேலதி | நன்றாக விளையாடுகிறது |
| அஹோ! | ஆச்சர்யம். |

காமாக்ஷியே! உன்னுடைய இந்தப் புன்சிரிப்பானது சரத்காலமேகத்தின் அழகிய நிலைமையை அடைந்து விளங்கிக்கொண்டிருந்த போதிலும், கருணாரஸம் என்னும் மழையின் தாரையைப் பொழிந்துகொண்டிருக்கிறது. உலகத்தைக் குளிர்ச்சியாகவும் செய்கிறது. இது ஆச்சர்யம். இன்னும், இம்மேகத்தைக்கண்டு நீலகண்டனின் மனதும் உத்ஸாஹம் நிறைந்ததாய் நன்றாக ஆடிக்கொண்டிருக்கிறது. இதுவும் ஆச்சர்யம்.

நீலகண்டன்—மயில், பரமேச்வரன். கடாக்ஷ சதகம் 71-வது சலோகத்தில், நீலகண்டன் என்கிற மயில் கடாக்ஷமாகிய

கார்முகிலைக் கண்டு ஆனந்தமடைகிறது என்று கூறியிருத்தலைக் காண்க.

**பரத்-அப்ர-விப்ரம-தபாம்** — பரத்காலம் என்பது மழை காலத்திற்குப் பின்வருவது. அப்போது மழை பெய்து தீர்ந்து ஸாரமற்றதலால், மேகங்கள் வெளுத்துத் தோன்றும். சரத் மேகங்கள் மழையைப் பொழியுமோ தவிர, வெளுத்தலை மழையை வர்ஷிக்கா. தேவியின் புன்சிரிப்பு வெண்மையில் பரத்காலத்து மேகத்தை ஒத்து இருப்பினும், கருணை என்னும் ஜலத்தைப் பொழிவதால மாறுபட்டும் இருக்கிறது.

**பிபிரீகரோதி** — நீருண்ட மேகத்தைக்கண்டால் தான் குளிர்ச்சியாயிருக்கும்; வெளுத்த மேகம் போன்றிருந்தும் இது தாபத்தைப் போக்குகிறது.

**நீலகண்ட-ஹ்ருதயம் கௌதூஹல-ஆந்தோளிதம்** — கார்முகிலைக்கண்டு தான் மயில் ஆநந்தத்தோடு ஆடும்; இங்கேயோ நீலகண்டனை பரமசிவன் தேவியின் புன்முறுவலான வெளுத்த மேகத்தைக்கண்டும் ஆநந்தமடைகிறார்.

प्रेङ्खत्प्रौढकटाक्षकुञ्जकुहरेष्वत्यच्छगुच्छायितं

वक्त्रेन्दुच्छविसिन्धुवीचिनिचये फेनप्रतानायितम् ।

नैरन्तर्यविजृम्भितस्तनतटे नैचोलपट्टायितं

कल्माषं कबलीकरोतु मम ते कामाक्षि मन्दस्मितम् ॥ २८ ॥

ப்ரேங்கத்-ப்ரௌட-கடாக்ஷ-குஞ்ஜ-குஹரேஷ்வ த்யச்ச-குச்சாயிதம்

வக்த்ரேந்துச்-சவி-ஸிந்து-வீசி-நிசயே பேந-ப்ராதாநாயிதம் |

நைரந்தர்ய-விஜ்ரும்பித-ஸ்தநதடே நைசோள-பட்டாயிதம்

கல்மாஷம் கபளீ-கரோது மம தே காமாக்ஷி! மந்தஸ்மிதம் ||
(28

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ப்ரேங்கத்-ப்ரௌட-கடாக்ஷ-குஞ்ஜ-குஹரேஷு | ஒளி வீசுகிறதும் கம்பீரமுமான கடாக்ஷமென்கிற புதர்களின் மத்தியில் |
| அதி-அச்ச-குச்சாயிதம் | மிகவும் வெளுப்பான பூங்கொத்துப் போன்றதும் |
| வக்த்ர-இந்துச்-சவி-ஸிந்து-வீசி-நிசயே | சந்திரன் போன்ற முகத்தின் காந்தியாகிற ஸமுத்திரத்தின் அலைகளின் குவியலில் |

| | |
|---|---|
| போ-ப்ரதாராயிதா | நுரையின் கூட்டம் போலிருப்பது |
| நைரந்தர்ய-விஜ்ரும்பித-ஸ்தன-தடே | இடையின்றி பெருத்தெழுந்துள்ள ஸ்தனப்பிரதேசத்தில் |
| மாசேசான-பட்டாயிதம் | வெண்பட்டு ரவிக்கை போலிருப்பதான |
| தே | உனது |
| மந்தஸ்மிதம் | புன் சிரிப்பானது |
| மம | என்னுடைய |
| கல்மாஷம் | பாபத்தை |
| கபளீகரோது | விழுங்கட்டும். |

காமாக்ஷி! ஒளி வீசுகிற கா்பிரமான கடாக்ஷமென்கிற பதா்களின் மத்தியில் மிகவும் வெளுப்பான பூங்கொத்துப் போன்றதும், சந்திரன்போன்றுள்ள முகத்தின் காந்தியாகிற ஸமுத்திரத்தின் அலைகளின் கூட்டத்தில் நுரையின் கூட்டம் போன்றதும், நடுவில் இடையின்றி பெருத்தெழுந்துள்ள ஸ்தனப் பிரதேசத்தில் வெண்பட்டு ரவிக்கையாகக் காணப்படுவதுமான உன் புன்சிரிப்பு என் தோஷத்தைப் போக்கடிக்கட்டும்.

**ப்ரேங்கத்-ப்ரௌட......குச்சாயிதம்**—தேவியின் கறுத்த நேத்ரங்களிலிருந்து கா்பிரமாய் ஒளி பொருந்திய கடாக்ஷங்கள் பரவுவதைப் பார்த்தால் அடர்ந்த பசுமையுடன் கூடிய ஒரு லதா - க்ருஹம்போல் இருக்கிறது; புன்முறுவல் அதில் புஷ்பித்த மிகவும் வெளுப்பான ஒரு பூங்கொத்து.

**வக்த்ரேந்து....ப்ரதாநாயிதம்** — சந்திரன்போன்ற தேவியின் முககாந்தியின் வெள்ளமோ ஸமுத்திரத்தின் அலைகள்; புன்முறுவலோ அவ்வலைகளின் நடுவே விளங்கும் நுரை.

**நைரந்தர்ய......பட்டாயிதம்** — நடுவில் இடமில்லாது பெருத்துள்ள ஸ்தனங்களின் மீது பரவும் புன்னகையைப் பார்த்தால், அவற்றை மறைப்பதற்காக அணியப்பட்ட ஒரு வெண்பட்டு ரவிக்கை போன்றிருக்கிறது.

நாம் செய்த வினைகள் தேவியின் திருவருள் ஏற்படும் காலத்தே அழிந்துபோகும் என்பதாம். "வினைக்கேடரும் உளரோ பிறர் சொல்லீர்" என்ற திருவாசகக் கருத்தையும் உன்னுக.

पीयूषं तव मन्थरस्मितमिति व्यर्थैव साऽप(पि)प्रथा
कामाक्षि ध्रुवमीदृशं यदि भवेदेतत्कथं वा शिवे ।
मन्दारस्य कथालवं न सहते मथ्नाति मन्दाकिनी-
मिन्दुं निन्दति कीर्तिते च कलशीपाथोधिमीर्ष्यायते ॥ २९ ॥

பீயூஷம் தவ மந்த்ர-ஸ்மிதமிதி வ்யர்த்தைவஸாऽபி (ப)ப்ரதா
காமாக்ஷி! த்ருவமீத்ருசம் யதி பவேதேதத் கதம் வா சிவே |
மந்தாரஸ்ய கதாலவம் ந ஸஹதே மத்நாதி மந்தாகிநீம்
இந்தும் நிந்ததி கீர்த்திதே ச கலசீ-பாதோதிம் ஈர்ஷ்யாயதே॥
(29)

| | |
|---|---|
| சிவே | மங்கள மூர்த்தியான |
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தவ | உன்னுடைய |
| மந்தர-ஸ்மிதம் | மந்தஹாஸமான புன்சிரிப் [பானது |
| பீயூஷம் இதி | அமிருதமென்ற |
| ஸா-ப்ரதா-அபி | அந்தப் புகழ்ச்சியும் |
| வ்யர்த்தா-ஏவ | வியர்த்தம் தான். |
| த்ருவம் | நிச்சயம் |
| ஈத்ருசம் பவேத் யதி | இப்படியிருக்குமானல் |
| ஏதத் | இது |
| கதம் வா | ஏன்? |
| மந்தாரஸ்ய | மந்தார புஷ்பத்தினுடைய |
| கதாலவம் | வார்த்தையைக் கூட |
| ந ஸஹதே | ஸஹிக்கிறதில்லை |
| மந்தாகிநீம் | கங்கையை |
| மத்நாதி | கலக்குகிறது. |
| இந்தும் | சந்திரனை |
| நிந்ததி | நிந்திக்கிறது |
| கீர்த்திதே ச | சொல்லும்போதே |
| கலசீ-பாதோதிம் | பால் ஸமுத்ர விஷயத்தில் |
| ஈர்ஷ்யாயதே | பொறாமைப்படுகிறது |

மங்கள மூர்த்தியான காமாக்ஷியே! உன் மந்தஹாஸம் அம்ருதம் (போன்றது) என்ற சொல்லும் அந்தப் புகழ்ச்சியும் வீணே. (அர்த்தமில்லாதது). உண்மையில் இது இவ்விதம் (அம்ருதமாக) இருக்குமாகில், ஏன் மந்தாரபுஷ்பத்தின் பேச்சையே பொறுக்கமாட்டுகிறதில்லை; கங்கையை

கலக்குகிறது; சந்திரனை நிந்திக்கிறது; பாற்கடலிடத்தில் அவமையையடைகிறது?

திருப்பாற்கடலைக் கடைந்தபோது அதில் நின்றும் அமிருதம், மந்தாரப்புஷ்பம், கங்கை, சந்திரன் முதலாயின உண்டாயின என்பது புராணம். புன்சிரிப்பை அம்ருதத்துக்கு ஒப்பு என்றால், இச்சரிதத்தை ஒட்டி அம்ருதத்துடன் பிறந்த மற்றைய வஸ்துக்களை ஏன் இந்தப் புன்சிரிப்பு வருத்துகிறது—என்று கவி அதிசயிக்கிறார். அம்ருதம் முதலான வஸ்துக்கள் அதிக வெண்மையான நிறமுள்ளவை. தன் சோபையாலும், வெண்மையாலும் புன்சிரிப்பு அவற்றையும் விஞ்சிநிற்பதால் அவற்றைப் பொறுப்பதில்லை என்றும், கலக்குகிறது என்றும் கவி வர்ணிக்கிறார்.

“ஸ்பர்த்தயா ஸா அபவாதா”—என்ற பாடத்தில், அந்த அபவாதமும் வீண் என்பது பொருள்.

विश्वेषां नयनोत्सवं वितनुतां विद्योततां चन्द्रमा
विख्यातो मदनान्तकेन मुकुटीमध्येच (न) संमान्यताम् ।
आः किं जातमनेन हाससुषमामालोक्य कामाक्षि ते
कालङ्कीमवलम्बते खलु दशां कल्माषहीनोऽप्यसौ ॥ ३० ॥

விச்வேஷாம் நயநோத்ஸவம் விதநுதாம் வித்யோததாம் [சந்த்ரமா:
விக்யாதோ மதநாந்தகேந முகுடீ-மத்யே(ந)ச ஸம்மாந்யதாம்।
ஆ:கிம் ஜாதமநேந ஹாஸ-ஸுஷமாம் ஆலோக்ய காமாக்ஷி!தே
காளங்கீம் அவலம்பதே கலு தசாம் கல்மாஷ-ஹீநோ-
ப்யஸௌ ॥ (30)

| | |
|---|---|
| காமாக்ஷி | காமாக்ஷியே! |
| சந்த்ரமா: | சந்திரன் |
| விச்வேஷாம் | எல்லாருக்கும் |
| நயந-உத்ஸவம் | நேத்ரானந்தத்தை |
| விதநுதாம் | செய்யட்டும் |
| விக்யாத: | பிரஸித்தியுள்ளவனாக |
| வித்யோததாம் | விளங்கட்டும் |
| மதந-அந்தகேந | மன்மதனுக்குச் சத்ருவான பரமசிவனால் |
| முகுட-மத்யே | மகுட மத்தியில் வைத்து |

| | |
|---|---|
| ஸம்பாவ்யதாம் ச | கௌரவிக்கவும் படட்டும் |
| அபி | இதனால் |
| ஆ: கிம்! ஜாதம்! | ஆச்சரியம் என்ன வந்து விட்டது? |
| அஸௌ | இந்த சந்திரன் |
| கல்மாஷ-ருசி: அபி | களங்க(பாப)மற்றவனாயிருந்த போதிலும் |
| தே | உனது |
| ஹாஸ-ஸம்ஸ்காரம் | புன்சிரிப்பின் காந்தியை |
| ஆலோக்ய | பார்த்து |
| காளிம் தசாம் | களங்கமுள்ள நிலைமையை |
| அவலம்பதே கலு | அடைகிறானல்லவா? |

காமாக்ஷியே! சந்திரன் உலகிலுள்ள எல்லோருடைய கண்களுக்கும் ஆநந்தத்தை அளிக்கட்டும், மிகவும் பிரஸித்தி பெற்றவனாகப் பிரகாசிக்கட்டும்; பரமசிவனால் தலையால் தாங்கிக் கௌரவிக்கப்படட்டும். ஆம், இதனால் அவனுக்கு என்ன பெருமை வந்துவிட்டது? இந்த சந்திரன் களங்க(பாப)மற்றவனாயிருந்த போதிலும் உனது புன்முறுவலின் காந்தியைப்பார்த்து களங்கமுள்ள (கலக்கமடைந்த) நிலைமையை அடைகிறானல்லவா?

உலகத்தில் நாம் சந்திரனை அதிக வெண்மைநிறம் உடையவனையும் பிரகாசப்பிரஸித்தி யுடையவனையும் சிவனால் தலையால் தாங்கப்படுகிறவனையும் காண்கிறோம். இந்தச் சந்திரனே அம்பாள் மந்தஸ்மிதத்தின் வெண்மையான காந்திக்கு முன் தான் நிற்பதற்கும் இல்லாமல் மங்குகிறான் என்றால், மந்தஸ்மிதத்தின் காந்தியின் மிகுதியை இவ்விதம் இருக்கும் என்று நாம் நினைக்கலாமோ; எவ்வாற்றானும் நினைத்ததற்கு ஸாத்தியமில்லை என்பதாம்.

चेत: शीतलयन्तु न: पशुपतेरानन्दजीवातवो
नम्राणां नयनाध्वसीमसु शरच्चन्द्रातपोपक्रमा: ।
संसाराख्यसरोरुहाकरखलीकारे तुषारोत्करा:
कामाक्षि स्मरकीर्तिबीजनिकरास्त्वन्मन्दहासाङ्कुरा: ॥ ३१ ॥

சேத: சீதளயந்து ந: பசுபதேராநந்த-ஜீவாதவ:
நம்ராணாம் நயநாத்வ-ஸீமஸு சரத்-சந்த்ராதபோ பக்ரமா: |

ஸம்ஸாராக்ய-ஸரோருஹாகர-கலீகாரே துஷா ரோத்கரா:
காமாக்ஷி ஸ்மர-கீர்த்தி-பீஜ-நிகரா: த்வந்-மந்த
ஹாஸாங்குரா: II (31)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே |
| பசுபதே: | பரமசிவனுடைய |
| ஆநந்த-ஜீவாதவ: | ஆனந்தத்துக்கு உயிர் நிலையாய் உள்ளவைகளும் |
| நம்ராணாம் | நமஸ்கரிப்பவர்களுடைய |
| நயந-அத்வ-ஸீமஸு | கண்கள் செல்லும் பிரதேசங்களில் |
| சரத்-சந்த்ர-ஆதப-உபக்ரமா: | சரத்காலத்திய நிலாவின் ஆரம்பம் போன்றவைகளும் |
| ஸம்ஸார-ஆக்ய-ஸரோருஹ-ஆகர-கலீகாரே | ஸம்ஸாரமென்கிற தாமரைக் குளத்தை நாசம் செய்யும் விஷயத்தில் |
| துஷார-உத்கரா:- | கடும்பனி போன்றவைகளும் |
| ஸ்மர-கீர்த்தி-பீஜ-நிகரா: | மன்மதனுக்குக் கீர்த்தியை உண்டாக்கும் விதைக்கோட்டைகளாயுமிருக்கிற |
| த்வத்-மந்தஹாஸ-அங்குரா: | உனது இளம் புன்னகைகள் |
| ந: | எங்களுடைய |
| சேத: | மனதை |
| சீதலயந்து | குளிரச் செய்யட்டும். |

காமாக்ஷியே! பசுபதியென்னும் பரமசிவனுடைய ஆநந்தத்திற்கு, உயிர் நிலைபோன்றவைகளும், வணங்குவோரின் கண்கள் செல்லும் பிரதேசங்களில் சரத்காலத்து நிலாவின் ஆரம்பம் போன்றவைகளும், ஸம்ஸாரமென்ற பெயர்பெற்ற தாமரைத் தடாகத்தை அழிக்கும் விஷயத்தில் கடும்பனி போன்றவைகளும், மன்மதனுடைய கீர்த்தியை விளைப்பிக்கும் வித்துக்கள் போன்றவைகளுமான உன் இளம் புன்னகைகள் எங்களுடைய மனதைக் குளிரச்செய்யட்டும்.

கவி கீழ 4-வது சுலோகத்தில் காமாக்ஷியின் புன்னகையானது தன்னுடைய உள்ளத்தைக் குளிரச்செய்யட்டும் என்று பிரார்த்தித்திருத்தல் காண்க.

**ஆநந்த – ஜீவாதவ:—** தேவியின் இளம் புன்னகை பரமசிவனுக்கு ஆநந்தத்தைக் கொடுப்பதால், அதற்கு இவை உயிர் நிலை என்கிறார்.

**சரத் – சந்த்ர – ஆதப – உபக்ரமா:—** ஆச்ரிதர்களுடைய கண்ணுக்குக் குளிர்ச்சி கொடுப்பனவாக இருத்தலால், சரத் காலத்து நிர்மலமான ஆகாயத்தில் தன் பூர்ண ஒளியோடு திகழும் பூர்ண சந்திரனின் நிலவு என்னலாம்.

**ஸம்ஸார . . . . துஷாரோத்கரா:**—பனி எப்படி மிருதுவாயிருந்தாலும் தாமரைகளைக் கருகச் செய்கிறதோ, அவ்விதம் மந்தஹாஸங்கள் மிருதுவாயினும் ஸம்ஸாரமென்னும் தாமரை ஓடையை அழித்துவிடுகிறது.

**ஸ்மர – கீர்த்தி – பீஜ – நிகரா:—** மன்மதன் பின்னால் தன் கீர்த்தியென்னும் பயிர்களை வளர்த்துப் பயனடைவதற்குக் காரணமான விதைகளைச் சேமித்து வைத்திருப்பதுபோல புன் முறுவல் இருக்கிறது.

कर्मौघाख्यतमःकचाकचिकरान्कामाक्षि संचिन्तये
त्वन्मन्दस्मितरोचिषां त्रिभुवनक्षेमंकरानङ्कुरान् ।
ये वक्त्रं शिशिरश्रियो विकसितं चन्द्रातपाम्भोरुह-
द्वेषोद्घोषणचातुरीमिव तिरस्कर्तुं परिष्कुर्वते ॥ ३२ ॥

கர்மௌகாக்ய-தம:-கசா-கசிகராந் காமாக்ஷி ஸம்சிந்தயே
த்வந்-மந்தஸ்மித-ரோசிஷாம் த்ரிபுவந-க்ஷேமம்-கராநங்குராந்1
யே வக்த்ரம் சிசிர-ச்ரியோ விகஸிதம் சந்த்ராத பாம்போருஹ
த்வேஷோத்கோஷண-சாதுரீமிவ திரஸ்கர்த்தும் பரிஷ்குர்வதே11
(32)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| யே | எந்த புன்சிரிப்புக்கள் |
| சிசிர-ச்ரிய: | குளிர்ந்த காந்தியை அடைந்தவைகளாய் |
| சந்த்ர ஆதப அம்போருஹ த்வேஷ உத்கோஷண சாதுரீம் | நிலாவுக்கும் தாமரைப்பூவுக்குமுள்ள விரோதத்தைப் பறை சாற்றும் முறையை |
| திரஸ்கர்த்துமிவ | மறைப்பதற்குப்போல் |
| விகஸிதம் வக்த்ரம் | மலர்ந்துள்ள முகத்தை |
| பரிஷ்குர்வதே | அழகுபடுத்துகின்றனவோ, |
| (தாந் | அப்படிப்பட்ட) |
| கர்ம ஓக ஆக்யதம: கசாகசி-கராந் | கர்மக்கூட்டமென்கிற இருளை நாசம் செய்கிறவைகளும் |

| | |
|---|---|
| த்ரி-புவந-க்ஷேமங்கராந் | மூன்று உலகங்களுக்கும் க்ஷேமத்தைக்கொடுக்கிறவைகளாயுமிருக்கிற |
| த்வத்-மந்தஹாஸ-த்விஷாம் | உனது மந்தஹாஸ காந்தியின் |
| அங்குராந் | முளைகளை |
| சிந்தயே | தியானம் செய்கிறேன். |

காமாக்ஷி! குளிர்ச்சியுள்ள எந்தப் புன்சிரிப்பின் அங்குரங்கள், நிலவு தாமரைகள் மீது த்வேஷத்தைப் பறைசாற்றும் திறத்தை மறைப்பவைகள் போல் மலர்ந்த உனது முகத்தைச் சிறப்பிக்கின்றனவோ; கர்மக்கூட்டமெனும் இருளோடு போர் புரிகின்றதும், மூவுலகிற்குப் நன்மை விளைவிப்பதுமான அந்த உனது மந்தஸ்மித காந்திகளின் முளைகளை நான் தியானிக்கின்றேன்.

கசாகசி—தலைமயிரை இழுத்துச் சண்டை போடுதல். சந்திரிகை வெளிப்பட்டால் தாமரை மூடிவிடுகிறது. அதனால் அவ்விரண்டுக்கும் துவேஷமுண்டென்று உலகில் பறைசாற்றுகிறார்கள். அதை மறைப்பதற்காகப் போலவே, காமாக்ஷியின் சந்திரிகை போன்ற மந்தஹாஸங்கள், அவளது முகமாகிற சந்திரனை விகஸிக்கும்படி பரிஷ்காரம் செய்கின்றனவோ — என்று கவி உத்ப்ரேக்ஷிக்கிறார்.

कुर्युर्नः कुलशैलराजतनये कूलंकषं मङ्गलं
कुन्दस्पर्धनचुञ्चवस्तव शिवे मन्दस्मितप्रक्रमाः ।
ये कामाक्षि समस्तसाक्षिनयनं *संतोषयन्तीश्वरं
कर्पूरप्रकरा इव प्रसृमराः पुंसामसाधारणाः ॥ ३३ ॥

குர்யுர் ந: குலசைல-ராஜதநயே! கூலங்கஷம் மங்களம்
குந்த-ஸ்பர்த்தந-சுஞ்சவ: தவ சிவே மந்தஸ்மித-ப்ரக்ரமா: |
யே காமாக்ஷி! ஸமஸ்த-ஸாக்ஷி-நயநம் *ஸந்தோஷயந்தீச்வரம்
கர்ப்பூர-ப்ரகரா இவ ப்ரஸ்ருமரா: பும்ஸாமஸாதாரணா: ll (33)

* सन्तोषयन्त्यान्तरम् ஸந்தோஷயந்தி ஆந்தரம்-என்றும் பாடம்.

| | |
|---|---|
| குலசைலராஜ தநயே! | பர்வத அரசனாகிய ஹிமவானின் புத்திரியும் |
| சிவே! | சிவனது பத்நியுமான |

| | |
|---|---|
| காமாக்ஷி! | ஏ காமாக்ஷியே! |
| பும்ஸாம் | புருஷர்களுக்கு |
| அஸாதாரணா: | கிடைக்கக்கூடாதவைகளான |
| யே | எந்த புன்சிரிப்புக்கள் |
| ப்ரஸ்ருமரா: | பரவுகின்ற |
| கர்ப்பூர-ப்ரகரா: இவ | கர்ப்பூரப்பொடி போல் |
| ஸமஸ்த-ஸாக்ஷி-நயநம் | ஸமஸ்தங்களுக்கும் ஸாக்ஷியா யிருக்கிற ஸூர்யனைக் கண்ணாக வுடைய |
| ஈச்வரம் | பரமசிவனை |
| ஸந்தோஷயந்தி | ஸந்தோஷப்படுத்துகின்றன |
| தே | அந்த |
| தவ | உன்னுடைய |
| குந்த-ஸ்பர்த்தந-சுஞ்சவ: | ஆம்பல் புஷ்பத்தைப் பகைக்கும் ஸாமர்த்தியமுள்ள [வே |
| மந்தஸ்மித-ப்ரக்ரமா: | புன்சிரிப்புக்களின் ரீதிகள் |
| ந: | நமக்கு |
| கூலங்கஷம் | கரைபுரண்டு போகும்படியான அதாவது அளவு கடந்த |
| மங்களம் | க்ஷேமத்தை |
| குர்யு: | செய்யட்டும். |

குலபர்வத ராஜனான இமையவன் மகளே! பரமசிவன் காதலியாகிய காமாக்ஷி! புருஷர்களுக்கு இயலாததும் பர கின்றதும் குந்தமலரை எதிர்ப்பதில் திறமையுள்ளவைகளுமான எவை, எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியான ஸூரியனைக் கண்ணாக கொண்ட பரமசிவனைப் பச்சைக்கர்ப்பூரப் பொடிபோல் களி புறச்செய்கின்றனவோ! அந்த உனது மந்தஸ்மித வரிசைக நமக்கு நிறைந்த மங்களத்தை விளைவிக்கவேண்டும்.

**ஸந்தோஷயந்தி ஆந்தரம்** — என்ற பாடத்தில், ஸமஸ்த, தையும் ஸாக்ஷாத்கரிக்கிற பரமசிவனுடைய ஆந்தரமா கண்ணை (உட்கண்ணை) என்பது பொருள். 'ஸமஸ்தஸாக் நயநம் ஈச்வரம்' என்பதற்கு எல்லாவற்றையும் ஸாக்ஷியாக பார்க்கும் சந்திரன், ஸூரியன், அக்னி இவைகளைக் கண்ணு வுடைய பரமசிவனை என்றும் பொருள் சொல்லலாம்.

"**பும்ஸாம் அஸாதாரணா:**" — என்பதை "கர்ப்பூரப் கரா:" என்பதற்கு விசேஷணமாக்கி ஸாதாரணமாய் எ

ாப் புருஷர்களுக்கும் கிடைக்க அருமையான கர்ப்பூரப் பொடிகள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

“ தனந்தரும், கல்விதரும், ஒருநாளும் தளர்வறியா
மனந்தரும், தெய்வவடிவும் தரும், நெஞ்சில் வஞ்சம் இல்லா
இனந்தரும் நல்லனவெல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே ”

என்று தேவி திருவருள் பெற்ற அபிராமிபட்டர், அம்பாள் திருவருளினால் கிடைக்கும் அளவுகடந்த மங்களங்களைப் பற்றிக் கூறியிருத்தலும் காண்க.

कम्रेण स्नपयस्व कर्मकुहनाचोरेण मारागम-
व्याख्याशिक्षणदीक्षितेन विदुषामक्षीणलक्ष्मीपुषा ।
कामाक्षि स्मितकन्दलेन कलुषस्फोटक्रियाचुञ्चुना
कारुण्यामृतवीचिकाविहरणप्राचुर्यधुर्येण माम् ॥ ३४ ॥

கம்ரேண ஸ்நபயஸ்வ கர்ம-குஹநா-சோரேண மாராகம-
வ்யாக்யா-சிக்ஷண-தீக்ஷிதேந விதுஷாமக்ஷீண-லக்ஷ்மீ-புஷா |
காமாக்ஷி! ஸ்மித-கந்தளேந கலுஷ-ஸ்போடக்ரியா-சுஞ்சுநா
காருண்யா ம்ருத-வீசிகா-விஹரண-ப்ராசுர்ய-துர்யேண மாம் ||
(34)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| கம்ரேண | அழகுபொருந்தியதாயும் |
| கர்ம-குஹநா-சோரேண | கர்மத்தின் மாயையைத் திருடுவதாயும் |
| மார-ஆகம-வ்யாக்யா-சிக்ஷண-தீக்ஷிதேந | மன்மத சாஸ்திரத்தை விஸ்தரித்துக் கூறுவதில் தீக்ஷை பெற்றதாயும் |
| விதுஷாம் | வித்வான்களுக்கு |
| அக்ஷீண-லக்ஷ்மீ-புஷா | குறைவற்றஸம்பத்தை விருத்தி செய்வதாயும் |
| கலுஷ-ஸ்போடக்ரியா-சுஞ்சுநா | பாபத்தை நாசமாக்கும் கார்யத்தில் ஸாமர்த்தியமுள்ளதாயும் |
| காருண்ய-அம்ருத-வீசிகா-விஹரண-ப்ராசுர்ய-துர்யேண | காருண்யம் என்கிற அமிருதத்தின் அலைகளில் அதிகமாய் விளையாடுகிறதையே முக்கிய காரியமாய் உடையதாயுமிருக்கிற |

| | |
|---|---|
| தவ | உன்னுடைய |
| ஸ்மிதகந்தளோ | புன்சிரிப்புக்கூட்டத்தால் |
| மாம் | என்னை |
| ஸ்நபயஸ்வ | முழுக்காட்டுவாயாக (பரிசுத்தமாக்கு). |

காமாக்ஷி! வணப்புள்ளதும் கர்மங்களின் சூதைப் போக்குவதும், மதனை நூலை விரித்துப் போதிப்பதில் தீக்ஷை பூண்டதும், அறிஞர்களுக்குக் குறைவற்ற செல்வத்தை வளர்ப்பதும், பாபங்களைப் பேதிப்பதில் திறமையுள்ளதும்,கருணையெனும் அமிருத ப்ரவாஹத்தில் அதிகமாக விளையாடும் பொறுப்புள்ளதுமான உனது புன்சிரிப்பால் என்னை நினைப்பாயாக.

"கலுஷஸ்போடக்ரியாசுஞ்சுந" என்பதற்கு பாபங்களைக் கை தட்டி விரட்டும் செய்கையில் திறமை வாய்ந்த—என்பது பொருள்.

கடாக்ஷசதகம் 4-வது சுலோகத்தில்"காமாக்ஷியின் கருணை மிருதம் ததும்புவதால் மிகவும் பொங்கி மேன்மேல் எழுவதும், மனோகரமான புன்சிரிப்பால் கருமையும் வெண்மையும் கலந்த விசித்திர வர்ணமுள்ளதாகக் காணப்பெறுவதும்,கீர்த்தியடைந்ததும், சற்று வளைந்ததும் ஆன உன் பார்வையால் என்னைக் குளிரச்செய்யவேண்டும்" என்ற கருத்தில் பிரார்த்தனை செய்திருத்தல் காண்க.

त्वन्मन्दस्मितकन्दलस्य नियतं कामाक्षि शङ्कामहे
बिम्बः कश्चन नूतनः प्रचलितो नैशाकरः शी(श्री)करः ।
किं च क्षीरपयोनिधिः प्रतिनिधिः स्वर्वाहिनीवीचिका-
बिब्वोकोऽपि विडम्ब एव कुहना मल्लीमतल्लीरुचः ॥ ३५ ॥

த்வந்மந்த ஸ்மித-கந்தளஸ்ய நியதம் காமாக்ஷி! சங்காமஹே
பிம்ப: கச்சந நூதந: ப்ரசலிதோ நைசாகர: சீ(ஸ்ரீ)கர: I
கிஞ்ச க்ஷீரபயோ நிதி: ப்ரதிநிதி: ஸ்வர்வாஹிநீ-வீசிகா-
பிப்வோகோऽபி விடம்ப ஏவ குஹநா மல்லீ-மதல்லீ-ருச: II(35)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| நைசாகர: | சந்திரனுடைய |
| பிம்ப: | உருவமானது |
| த்வத்மந்தஸ்மித-கந்தளஸ்ய | உனது புன்சிரிப்பின் ஸமூஹத்தினுடைய |

| | |
|---|---|
| : ச | ஒரு |
| தந: | புதிய |
| கா: | திவியாக |
| ப்ரசவித: | வெளிவந்திருக்கிறது என்று |
| யதம் சங்காமஹே | நிச்சயமாக நினைக்கிறோம். |
| கிஞ்ச | மேலும் |
| க்ஷீர பயோநிதி: | பால் ஸமுத்ரம் |
| ப்ரதிநிதி: | (உனது புன்சிரிப்புக்கு) பதில் உருவம் |
| ஸ்வர்வாஹினீ-வீசிகா ஸப்வோக: அபி | ஸ்வர்க்கத்திலுள்ள நதியான கங்கையின் அலையின் அழகும் |
| விடம்ப: ஏவ | பரிஹாஸ்யமானதே |
| மல்லீ—மதல்லீ—ருச: | உயர்ந்த மல்லிகைப்பூவின் காந்திகளும் |
| குஹநா: | கபடம் (ஏமாற்றமே) |

காமாக்ஷி! உனது மந்தஹாஸ காந்தியின் வெளிப்பட்ட திவலையே புதிய சந்திரபிம்பமென்றும், பாற்கடல் அதற்குப் பதிலியென்றும், கங்கையின் அலைகளின் அழகு பரிஹஸிக்கத் தகுந்ததென்றும், சிறந்த மல்லிகை மலர்களின் ஒளிகளும் ஏமாற்றம் தாக்கூடியவையென்றும் நாம் நிச்சயமாக எண்ணுகிறோம்.

உலகத்தில் வெண்மையாகச் சொல்லப்படும் பாற்கடல் கங்கையின் அலை, மல்லிகைமலர், இவையெல்லாம் அம்பாளின் மந்தஸ்மிதத்தின் வெண்மைக்கு ஒப்பிடுவதற்கில்லை என்பது தாத்பர்யம். ஸ்ரீகர: என்ற பாடத்தில், அழகை அல்லது லக்ஷ்மியைக் கொடுக்கின்ற சந்திரனுகை என்பது பொருள்.

दुष्कर्मार्कनिसर्गकर्कशमहःसंपर्कतप्तं मिल-
त्पङ्कं शंकरवल्लभे मम मनः *कामाक्षि काञ्चीश्वरि ।
अम्ब त्वन्मृदुलस्मितामृतरसे मङ्क्त्वा विधूय व्यथा-
मानन्दोदयसौधशृङ्गपदवीमारोढुमाकाङ्क्षति ॥ ३६ ॥

துஷ்கர்மார்க்க-நிஸர்க்க-கர்க்கச-மஹ:-ஸம்பர்க்க-தப்தம் மிளத்-
பங்கம் சங்கர-வல்லபே மம மந: *காமாக்ஷி காஞ்சீச்வரி |
அம்ப! தவந் ம்ருதுள-ஸ்மிதாம்ருத-ரஸே மங்க்த்வா விதூய [வ்யதாம்
ஆநந்தோதய-ஸௌத-ச்ருங்க-பதவீமாரோடுமா
காங்க்ஷதி ॥ (36)

* काञ्चीपुरालङ्क्रिये காஞ்சீபுராலங்க்ரியே என்றும் பாடம்.

| | |
|---|---|
| சங்கர வல்லபே! | சங்கர பத்நியும் |
| காஞ்சீச்வரி! | காஞ்சீ நகர யஜமானியும் |
| அம்ப! | தாயுமான |
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| துஷ்கர்ம-அர்க்க-நிஸர்க்க-கர்க்கச-மஹ:-ஸம்பர்க்க-தப்தம் | தீவினையென்னும் ஸூர்யனின் ஸ்வபாவத்திலேயே க்ரூரமுள்ள கிரணங்களின் ஸம்பந்தத்தால் தாபத்தை அடைந்ததாயும் |
| மிளத்-பங்கம் | பாபம் என்கிற சேறுபடிந்ததாயும் இருக்கிற |
| மம மந: | என்னுடைய மனதானது |
| த்வந்-ம்ருதுள-ஸ்மித அம்ருத-ரஸே | உனது புன்சிரிப்பென்ற அம்ருத ரஸத்தில் |
| மங்க்த்வா | முழுகி |
| வ்யதாம் | சிரமத்தை |
| விதூய | உதறியெறிந்து |
| ஆநந்த-உதய-ஸௌத-ச்ருங்க-பதவீம் | பிரம்மானந்தமாகிற மாடியில் உயர்ந்த ஸ்தானத்தை |
| ஆரோடும் | ஏறுவதற்கு |
| ஆகாங்க்ஷதி | ஆசைப்படுகிறது. |

காஞ்சீபுரத்திற்கு ஈச்வரியாக விளங்கும் சங்கரன் காதலியாகிய தாயே! தகாத கர்மங்களெனும் கதிரவனின் இயற்கையிலேயே கொடுமை வாய்ந்த கிரணங்களின் சேர்க்கையால் தாபமுற்றதும், சேறு பூசியதும் (பாபமுள்ளதும்) ஆன எனது மனது, உனது இளம் நகையாகிய அமுத ரஸத்தில் மூழ்கி, களைப்பைப் போக்கிக்கொண்டு ஆனந்தத் தோற்றமெனும் மாளிகையின் உச்சியில் ஏறி உலாவ விரும்புகிறது.

வெயிலினால் தபிக்கப்பெற்று சேறு பூசிய ஒருவன் குளிர்ந்த ஜலத்தில் மூழ்கிச் சேற்றை அலம்பி, தாபத்தைப் போக்கி, தாபமும் சேறும் ஸம்பந்திக்கமுடியாத மாளிகையின் மேல்மாடிக்குச் செல்ல எப்படி விரும்புவானோ; அதுபோல துஷ்கர்மங்களால் தபிக்கப்பெற்றுப் பாபமாகிய சேறு பூசிய என் மனதும் உன் புன்னகையாகிய அமுத ரஸத்தில் மூழ்கி

தாபங்களும், பாபங்களுமற்று, பேரானந்தமாகிய மாளிகை யின் மேல்மாடியை ஏற விரும்புகிறது.

பாதாரவிந்தசதகம் 48-வது ச்லோகத்தில் "என்னுடைய மனதானது, தேவியின் நகங்களின் புன்சிரிப்புக் காந்தி என்கிற கங்கையின் ஜலத்தில் ஸுகமாக ஸ்நானம் செய்து, ஞானம் என்னும் அமிருதத்தையுண்டு, சிலம்புகளின் ஒளிகளான இரத் தின விளக்குள்ள தேவியின் திருவடிகள் என்கிற உயர்ந்த உப்பரிகையின் மேல் விளையாடவேண்டும்" என்ற கருத்தில் வருதல் காண்க.

नम्राणां नगराजशेखरसुते नाकालयानां पुरः
कामाक्षि त्वरया विपत्प्रशमने कारुण्यधाराः किरन् ।
आगच्छन्तमनुग्रहं प्रकटयन्नानन्दबीजानि ते
नासीरे मृदुहास एव तनुते नाथे सुधाशीतलः ॥ ३७ ॥

நம்ராணம் நகராஜ-சேகர-ஸுதே நாகாலயாநாம் புர:
காமாக்ஷி த்வரயா விபத்-ப்ரசமநே காருண்யதாரா: கிரந் |
ஆகச்சந்த மநுக்ரஹம் ப்ரகடயந் ஆனந்த பீஜாநி தே
நாஸீரே ம்ருதுஹாஸ ஏவ தநுதே நாதே! ஸுதா சீதள: ll (37)

| | |
|---|---|
| நகராஜ-சேகர-ஸுதே | பர்வத சிரேஷ்டனை ஹிமவானின் குமாரியும் |
| நாதே | உலகத்திற்கு யஜமானியுமான |
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| புர: | உன் முன்னால் |
| நம்ராணாம் | நமஸ்கரித்து நிற்கிற |
| நாகாலயாநாம் | தேவர்களுடைய |
| விபத்-ப்ரசமநே | ஆபத்தை நீக்குவதில் |
| த்வரயா | வேகமாக |
| காருண்ய-தாரா: | கருணாரஸப்பெருக்கை |
| கிரந் | வர்ஷித்துக்கொண்டு |
| ஆகச்சந்தம் | ஏற்படப்போகிற |
| அநுக்ரஹம் | அநுக்ரஹத்தை |
| ப்ரகடயந் | வெளிப்படுத்துகிற |
| தே | உனது |

| | |
|---|---|
| [illegible]தாபிதஸ: | அம்ருதம் போல் குளிர்ந்த |
| ம்ருதுஹாஸ: ஏவ | அழகிய புன் சிரிப்பே |
| நாஸீரே | முன்னணியில் |
| ஆனந்த பீஜாநி | பிரமானந்தத்தின் வித்துக்களை |
| தநுதே | விதைக்கின்றது. |

மலைச்சக்ரவர்த்தியின் மகளும் உலகைக்காப்பவளுமான காமாக்ஷி! உனது ஸேநாக்ரத்தின் முன் வணங்கிநிற்கும் தேவர்களின் துன்பங்களை அகற்றுவதில் கருணைமாரியை வேகமாகச் சொரிகின்றதும், வரப்போகும் அருளை வெளிப் படுத்துகின்றதும், அமுதுபோல் குளிர்ந்ததுமான உனது இளநகையே ஆனந்த விதைகளை விதைக்கின்றது.

காமாக்ஷி கருணையை உருவமாக உடையவள். தன்னை அடைந்த பக்தர்களின் பிறவித் துக்கத்தை உடனே நாசம் செய்து மோக்ஷ ஸாகத்தைத் தருவள் என்பதாம்.

कामाक्षि प्रथमानविभ्रमनिधिः कन्दर्पदर्पप्रसू-
र्मुग्धस्ते मृदुहास एव गिरिजे मुष्णातु मे किल्बिषम् ।
यं द्रष्टुं विहिते करग्रह उमे शंभुस्त्रपामीलितं
स्मेरं कारयति स्म ताण्डवविनोदानन्दिना तण्डुना ॥ ३८ ॥

காமாக்ஷி! ப்ரதமாந-விப்ரம-நிதி: கந்தர்ப்ப-தர்ப்ப-ப்ரஸூ:
முக்தஸ்தே ம்ருதுஹாஸ ஏவ கிரிஜே முஷ்ணாது மே கில்பிஷம் 1
யம் த்ரஷ்டும் விஹிதே கரக்ரஹ உமே! சம்புஸ்த்ரபா-மீலிதம்
ஸ்மேரம் காரயதி ஸ்ம தாண்டவ-விநோதாநந்திநா தண்டுநா11
(38)

| | |
|---|---|
| கிரிஜே | பர்வதராஜகுமாரியான |
| உமே | உமாதேவியென்ற பெயருள்ள |
| காமாக்ஷி | காமாக்ஷியே! |
| கர-க்ரஹே விஹிதே | } கல்யாணம் நிச்சயிக்கப்பட்டபோது |
| த்ரபா-மீலிதம் | வெட்கத்தால் மூடியிருந்த |
| யம் | எந்த |
| ஸ்மேரம் | மனோஞ்ஞமான புன்சிரிப்பை |
| த்ரஷ்டும் | } பார்ப்பதற்கு (பார்க்க எண்ணத்துடன்) |
| சம்பு: | ஈச்வரன் |

தாண்டவ-விநோத-ஆநந்திநா — நடனமாடுவதில் மிகவும் பிரியமுள்ளவனால்
தண்டுநா — நந்திகேச்வரனைக்கொண்டு
காரயிதம் — உண்டாக்கினாரோ
தே — உனது
ப்ரதமாந-விப்ரம-நிதி: — புகழ்பெற்ற விலாஸங்களுக்கு நிதியும்
கந்தர்ப்ப-தர்ப்ப-ப்ரஸூ: — மன்மதனுக்குக் கொழுப்பை யுண்டுபண்ணுவதும்
முக்த: — அழகியதுமான
ம்ருதுஹாஸ: — (அந்த) புன்சிரிப்பானது
மே — என்னுடைய
கில்பிஷம் — பாபத்தை
முஷ்ணாது — போக்கடிக்கட்டும்.

மலைமகளும் உமையுமாகிய காமாக்ஷி! பாணிக்ரஹண காலத்தில் வெட்கத்தால் வெளிவராத எதைக்காணச் சிவன், கூத்தாடுவதால் சந்தோஷமடையும் நந்தியைக் கொண்டு, தானே வெளிவரச் செய்தாரோ, மன்மதனுக்குத் திமிரை யுண்டாக்குவதும் சிறந்த விலாஸங்களுக்கிருப்பிடமுமாகிய அழகிய உனது அந்தப் புன்னகை எனது பாபத்தையகற்றட்டும்.

**ताण्डवविनोदं दण्डिना दण्डुना** தாண்டவவினோதம் தண்டிநா தண்டுநா-என்று ஒரு பாடம். அப்பாடத்திற்கு, கையில் தண்டம்பிடித்திருந்த நந்தியைக்கொண்டு தாண்டவம் என்னும் வேடிக்கையை யதேச்சமாகச் செய்வித்தாரோ—என்பது பொருள்.

தேவியின் கருணை கிடைத்தால் வினை கெடும் என்பதாம்.

क्षुण्णं केनचिदेव धीरमनसा कुत्रापि नानाजनैः
कर्मग्रन्थिनियन्त्रितैरसुगमं कामाक्षि सामान्यतः ।
मुग्धैर्द्रष्टुमशक्यमेव मनसा मूढस्य मे चक्षुषो
मार्गं दर्शयतु प्रदीप इव ते मन्दस्मितश्रीरियम् ॥ ३९ ॥

க்ஷுண்ணம் கேந சிதேவ தீர-மநஸா குத்ராபி நாநா ஜநை:
கர்ம-க்ரந்தி-நியந்த்ரிதைர ஸுகமம் காமாக்ஷி! ஸாமாந்யத: !
முக்தைர் த்ருஷ்டுமசக்யமேவ மநஸா மூடஸ்ய மே சக்ஷுஷோ
மார்க்கம் தர்சயது ப்ரதீப இவ தே மந்தஸ்மித ஸ்ரீரியம்II (39)

मूढस्य मे मौक्तिकम् மூடஸ்ய மே மௌக்திகம் என்று பாடாந்தரம்.

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| குத்ர அபி | ஏதோ ஒரு இடத்தில் |
| கேந சித் | யாரோ ஒரு |
| தீர-மநஸா | தைர்யசாலியான புருஷனால் |
| க்ஷுண்ணம் | பரிசயம் செய்யப்பட்டதாயும் |
| கர்ம-க்ரந்தி-நியந்த்ரிதை: | கர்மமென்ற பாசத்தினால் கட்டப்பட்ட |
| நாநா ஜநை: | பல ஜனங்களால் |
| ஸாமாந்யத: | ஸுலபமாக |
| அஸுகமம் | போகமுடியாததும் |
| முக்தை: | மூடர்களால் |
| மநஸா | மனதினாலும் |
| த்ரஷ்டும் | அறிவதற்கு முடியாததாயுமிருக்கிற |
| மார்க்கம் | மார்க்கத்தை |
| தே | உனது |
| இயம் | இந்த |
| மந்தஸ்மித-ச்ரீ: | புன்சிரிப்பின் காந்தியானது |
| ப்ரதீப: இவ | பெரிய தீபம்போல் |
| மூடஸ்ய | மூடனான |
| மே | எனது |
| சக்ஷுஷ: | கண்களுக்கு |
| தர்சயது | காண்பிக்கட்டும். |

ஏ காமாக்ஷி! எந்த முக்தி மார்க்கம், எங்கோ ஓரிடத்தில் மனதைக் கட்டி அடக்கின யாரோ ஒருவனால் மட்டும் போய் பழகியதோ; பொதுவாகக் கர்ம பந்தத்தால் கட்டுண்ட பல ஜனங்களால் எளிதில் செல்ல இயலாததோ; அறிவற்ற மனிதர்களால் மனதால் நினைக்கவும் முடியாததோ; அம்முக்தி மார்க்கத்தை உன் புன்சிரிப்பின் ஒளியானது பெரிய தீபம் போல் என் கண்ணுக்குக் காட்டியருள வேண்டும்.

அறிவிலிகளால் அறியப்படாததும், கட்டுண்ட பலரால் செல்ல முடியாததும், யரோ ஒரு தைர்யசாலியால் செல்லப் பட்டதுமான மார்க்கத்தில் செல்ல பெரிய விளக்கு உதவும். அதுபோல், விளக்கு போன்ற உன் புன்சிரிப்பின் ஒளியானது எனது கண்ணுக்கு முக்தி மார்க்கத்தைக் காண்பிக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறார் கவி.

புருஷோத்தமனை பரமேசுவரன் ஒருவனால் மாத்திரம் ஞான மார்க்கம் பரிசயம் செய்யப்பட்டிருக்கிறதென்பதும், அம்மார்க்கம், ஈசுவரன் ஈசுவரி இவர்கள் அருள் ஏற்பட்டால் தான் கிட்டும் என்பதும் இந்த சுலோகத்தின் கருத்து.

"சிவஜ்ஞானப்ரதாயினீ" என்று ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தில், சிவ விஷயமான ஞானத்தை அம்பாள் தன் பக்தர்களுக்குக் கொடுக்கிறாள் என்று சொல்லியிருப்பதையும், ஆர்யா சதகத்தின் 77-வது "ப்ரத்யங்முக்யா த்ருஷ்ட்யா .... பரசிவோல்லாஸாம்" என்ற சுலோகத்தின் கருத்தையும் இந்த சுலோகத்தின் தாத்பர்யத்தோடு உற்று நோக்குக.

"மௌக்திகம்—" என்ற பாடத்தில், மௌக்திகம் மார்க்கம்-முக்தி மார்க்கத்தை—என்பது பொருள். தீரமநஸா—மனதைக் கட்டி அடக்கிய ஒருவனால்—என்பது பொருள்.

ज्योत्स्नाकान्तिभिरेव निर्मलतरं नैशाकरं मण्डलं
हंसैरेव शरद्विका(ला)ससमये (य) व्याकोचमम्भोरुहम् ।
स्वच्छैरेव विकस्वरैरुडुगणैः कामाक्षि बिम्बं दिवः
पुण्यैरेव मृदुस्मितैस्तव मुखं पुष्णाति शोभाभरम् ॥ ४० ॥

ஜ்யோத்ஸ்நா-காந்திபிரேவ நிர்மலதரம் நைசாகரம் மண்டலம்
ஹம்ஸைரேவ சரத்விகா(லா)ஸ ஸமயே(ய) வ்யாகோசம்
[அம்போருஹம் |
ஸ்வச்சைரேவ விகஸ்வரை: உடுகணை: காமாக்ஷி! பிம்பம் திவ:
புண்யைரேவ ம்ருதுஸ்மிதை ஸ்தவ முகம் புஷ்ணாதி
[சோபாபரம்॥ (40)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| நிர்மலதரம் | மிகவும் பரிசுத்தமான |
| நைசாகரம் மண்டலம் | சந்த்திர மண்டலமானது |
| ஜ்யோத்ஸ்நா-காந்திபி: ஏவ | நிலா வெளிச்சத்தால் மாத்திரம் (சோபிக்கும்) |

| சரத்-விலாஸ-ஸமயே | சரத்ருதுவின் விலாஸமுள்ள காலத்தில் |
|---|---|
| வ்யாகோசம் | மலர்ந்த |
| அம்போருஹம் | தாமரைப்பூவானது |
| ஹம்ஸை: ஏவ | ஹம்ஸங்களாலேயே (அழகுடையதாக ஆகிறது) |
| திவ: | ஆகாசத்தின் |
| பிம்பம் | மண்டலமானது |
| ஸ்வச்சை: | நிர்மலமான |
| விகஸ்வரை: | பிரகாசிக்கிற |
| உடுகணை: ஏவ | நக்ஷத்திரக் கூட்டங்களாலேயே (சோபிக்கும்) |
| தவ | உன்னுடைய |
| முகம் | முகமானது |
| புண்யை: | பரிசுத்தமான |
| ம்ருது ஸ்மிதை: ஏவ | மந்தஹாஸத்தினால்மாத்திரமே |
| சோபாபரம் | அதிக காந்தியை |
| புஷ்ணாதி | விருத்தி செய்கிறது (அடைகிறது). |

காமாக்ஷி! மாசற்ற மதியின் மண்டலம் நிலவின் ஒளிகளாலேயே அழகு பெறுகிறது. மலர்ந்த தாமரை மலரும் சரத் ருது விளங்குங்கால் அன்னங்களாலேயே வனப்பை அடைகிறது. மாசற்று விளங்கும் வான்மீன்களாலேயே ஆகாயமும் ஒளி பெறுகிறது. அவ்விதமே தூய்மைப்படுத்தும் உனது மந்தஹாஸங்களாலேயே உனது முகமும் மிகுந்த சோபையை அடைகின்றது.

தாமரையின் அழகே அழகு. சரத்காலத்தில் உண்டாகும் தாமரையின் அழகோ பன்மடங்கு. அந்தத் தாமரையில் அன்னபட்சியும் தங்கி விளையாடுகிறதானால் அப்போது உள்ள அழகை என்னென்று சொல்வது:? இவ்விதமே சந்திரமண்டலம், ஆகாசத்தின் உருவம் முறையே சந்திரிகை, நட்சத்திரக் கூட்டங்கள் இவைகளால் விலாஸம் அடைகிறதைக்கூறி, அவைபோல் தேவியின்முகமும், புன்சிரிப்பினால் சோபையைப் பெறுகிறதெனக் கவி குறிப்பிடுகிறார்.

मानग्रन्थिविधुंतुदेन रभसादास्वाद्यमाने नव-
प्रेमाडम्बरपूर्णिमाहिमकरे कामाक्षि ते तत्क्षणम् ।
आलोक्य स्मितचन्द्रिकां मुहुरिमामुन्मीलनं जग्मुषीं
चेतः शीलयते चकोरचरितं चन्द्रार्धचूडामणेः ॥ ४१ ॥

நு-க்ரந்தி-விதுந்துதேந ரபஸாதாஸ்வாத்யமாநே நவ—
ரமாடம்பர-பூர்ணிமா-ஹிமகரே காமாக்ஷி! தே தத்க்ஷணம் |
லோக்ய ஸ்மித சந்த்ரிகாம் முஹுரிமாமுந் மீலநம் ஜக்முஷீம்
த:சீலயதே சகோர-சரிதம் சந்த்ரார்த்த-சூடாமணே: ‖ (41)

மாக்ஷி! — காமாக்ஷியே!
-ப்ரேம-ஆடம்பர-பூர்ணி மா-ஹிமகரே — புதிய அன்பின் ஆடம்பரம் என்கிற பூர்ணமான சந்திரனைவன்
ந-க்ரந்தி-விதுந்துதேந — அபிமான முடிச்சு என்கிற ராகுவால்
பஸாத் — வேகமாக
ஸ்வாத்யமாநே — விழுங்கப்படும் போது
த்க்ஷணம் — உடனே
ஹு: — அடிக்கடி
ந்மீலநம் — வெளிக்கிளம்புதலே
க்முஷீம் — அடைகிற
த — உனது
மாம் — இந்த
மித சந்த்ரிகாம் — புன்சிரிப்பு என்ற நிலாவை
லோக்ய — பார்த்து
ந்த்ரார்த்த-சூடாமணே: — அர்த்த சந்திரனைச் சூடாமணியாகக்கொண்ட பரமசிவனுடைய
சத: — மனமானது
கோர-சரிதம் — சகோர பக்ஷியின் காரியத்தை
லயதே — பரிசயம் செய்துகொள்கிறது.

ஏ காமாக்ஷி! புதிய காதலின் பூரிப்பென்னும் பூர்ணிமைச் ந்திரன் மானமென்னும் ராகுவினால் விழுங்கப்படும் பாழுது, சந்திரகலையைச் சூடாமணியாகச் சூடிக்கொண் ருக்கிற பரமசிவனுடைய மனது, மறுபடியும் மலர்ச்சி டைந்துகொண்டிருக்கிற உனது இந்தப் புன்முறுவலாகிய

வெண்ணிலாவைக் கண்டு சகோரப் பறவையின் செய்கையை
செய்து களிக்கின்றது.

சகோரப் பறவைக்கு நிலவு ஆஹாரம் என்று கவிகள் கூறுவது வழக்கம். சந்திரனைக் கண்டதும் சகோரப்பறவை இன்புறுவது ஊஹ்யம். அதுபோல், தேவியின் புன்சிரிப் பென்னும் சந்திரிகையைக் கண்டு பரமசிவன் ஆனந்திப்பதால் பரமசிவனது மனது சகோரத்தின் செய்கையைத் தழுவுகிறது என்று கவி கூறுகிறார்.

**விதுந்துதன் :—** சந்திரனை மறைக்கும் கிரஹம்; ராகு. பூர்ணிமைச் சந்திரன் ராகுவால் விழுங்குப்படுவான். அதைத் தான் சந்திரக்கிரஹணம் என்பார்கள். அது கொஞ்சகால மிருந்து விட்டு விடும். பிறகு கொஞ்சம் கொஞ்சமாகச் சந்திரிகை வெளிப்படும். அதுபோல, தேவிக்குப் பரமசிவன் மீது காதல் பூர்ணமாயிருந்தும், மாநமானது அதைத் தடுத்து விட்டது. கொஞ்ச காலம் கழித்து தேவிக்குக் கோபம் தணிந்த வுடன் புன்முறுவலுண்டாயிற்று. அதைக் கண்டு பரமசிவ னுடைய மனது ஸந்தோஷமடைந்து என்பது கருத்து.

मानश्चित्त समुन्नतिः- என்பது அமரம். நான் உயர்ந்தவன் என்கிற மனதின் எண்ணம் மாநம்.

कामाक्षि स्मितमञ्जरीं तव भजे यस्यास्त्विषामङ्कुरा-
नापीनस्तनपानलालसतया निःशङ्कमङ्कशयः ।
ऊर्ध्वं वीक्ष्य विकर्षति प्रसुमरानुद्दामया शुण्डया
सूनुस्ते बिसशङ्कयाशु कुहनादन्तावलग्रामणीः ॥ ४२ ॥

காமாக்ஷி ஸ்மித மஞ்ஜரீம் தவ பஜே யஸ்யாஸ்த்விஷாமங்குராந்
ஆபீந-ஸ்தந-பாந-லாலஸதயா நிःசங்கமங்கேசய: |
ஊர்த்வம் வீக்ஷ்ய விகர்ஷதி ப்ரஸ்ருமராநுத்தாமயா சுண்டயா
ஸூநுஸ்தே பிஸ-சங்கயாசு குஹநா-தந்தாவல-க்ராமணீ:। (42)

காமாக்ஷி! — காமாக்ஷியே!

ஆபீந-ஸ்தந-பாந-லாலஸ தயா — பெருத்த ஸ்தனங்களைப் பானம் செய்ய வேண்டுமென்கிற ஆசையால்

| | |
|---|---|
| ..ங்கம் | ஸங்கோசமில்லாமல் |
| ..கேசய: | மடியில் படுத்துக்கொண்டிருக்கிற |
| | [illegible] |
| ..: | குழந்தையான |
| ..கா-தந்தாவல-க்ரா..ணீ: | மாயா கஜமுகனன விக்னேச்வரன் |
| ..த்வம் வீக்ஷ்ய | மேலே அண்ணாந்து பார்த்து |
| ..ருமாராங் | பரவிகிற்கிற |
| ..யா: | எந்தப் புன்சிரிப்பின் |
| ..ஷாம் அங்குராங் | காந்தி கிரணங்களை |
| ..சங்கயா | தாமரைத்தண்டு என்கிற ஸந்தேஹத்தினுல் |
| ..தண்டயா சண்டயா | நீண்ட தும்பிக்கையினுல் |
| | வேகமாக |
| ..ர்ஷதி | இழுக்க விரும்புகிருனே |
| ..ம் | அத்தகைய |
| | உன்னுடைய |
| ..தமஞ்ஜரீம் | புன்சிரிப்பு எனும் பூங்கொத்தை |
| ..ஜ | ஸேவிக்கிறேன். |

காமாக்ஷி! பருத்த ஸ்தனங்களைப் பருக ஆசை கொண்டு ..சமின்றி மடியில் படுத்திருக்கும் மாயா கஜேந்திரனுகிய ..து புதல்வன், பரவுகின்ற எந்தப் புன்சிரிப்பின் ஒளிக் ..ர்களைத் தாமரைத் தண்டென்றெண்ணி அண்ணாந்து ..க்கித்தனது நீண்ட துதிக்கையால் சிக்கிரமிழுக்கின்ருனே, ..த உனது புன்னகைப் பூங்கொத்தை நான் வழிபடு..றேன்.

..யானைக்குத் தாமரைத் தண்டில் அதிக விருப்பம் உண்டு. ..னமுகனன தேவியின் புத்திரன், தான் அம்பாளிடம் ..ன்யபானம் பண்ணுகிறபோது, அம்பாளின் வெளுப்பான ..சிரிப்பின் காந்தி மேலெழுந்து விளங்குவதை, தாமரைத் ..டென்று ஸந்தேஹித்துத் தன் துதிக்கையால் அதை ..ப்பதாய் வர்ணித்திருக்கிருர்.

गाढाश्लेषविमर्दसंभ्रमवशादुद्दाममुक्तागुण-
प्रालम्बे कुचकुम्भयोर्विगलिते दक्षद्विषो वक्षसि
या सख्येन पिनह्यति प्रचुरया भासा तदीयां दशां
सा कामाक्षि तवास्य चेतसि कनत्वच्छा स्मितांशुच्छटा ॥

காடாச்லேஷ-விமர்த்த-ஸம்ப்ரம-வசாத் உத்தாம முக்தா குண-
ப்ராலம்பே குச கும்பயோர் விகளிதே தக்ஷத்விஷோ வக்ஷஸி |
யா ஸக்யேந பிநஹ்யதி ப்ரசுரயா பாஸா ததீயாம் தசாம்
ஸா காமாக்ஷி! தவாஸ்ய சேதஸி கநத்வச்சா
[ஸ்மிதாம்சு ச்சடா | (43)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தக்ஷ-த்விஷ: | தக்ஷ சத்ருவான பரமசிவனுடைய |
| வக்ஷஸி | மார்பில் |
| குசகும்பயோ: | கும்பங்கள் போன்ற ஸ்தனங்களில் |
| காட-ஆச்லேஷ-விமர்த்த-ஸம்ப்ரமவசாத் | இறுக ஆலிங்கனம் செய்யும் போது ஏற்பட்ட பரபரப்பினால் |
| உத்தாம-முக்தாகுண-ப்ராலம்பே | கம்பீரமான முத்துமாலையானது |
| விகளிதே | அறுந்து பெருகும்போது |
| யா | எந்தப் புன்சிரிப்பானது |
| ஸக்யேந | ஸ்நேஹக்கட்டுப்பாட்டைக் கொண்டு |
| ப்ரசுரயா-பாஸா | தனது உயர்ந்த காந்தியினால் |
| ததீயாம் தசாம் | அந்த முத்து மாலையினுடைய நிலைமையை |
| பிநஹ்யதி | மீண்டும் உண்டாக்குகிறதோ, |
| ஸா | அப்படிப்பட்ட |
| அச்சா | பரிசுத்தமான |
| தவ | உனது |
| ஸ்மித-அம்சுச்-சடா | வெண்மையான புன்சிரிப்புக் காந்தி ஸமூஹமானது |
| அஸ்ய | இந்த என்னுடைய |
| சேதஸி | மனதில் |
| கநது | விளங்கட்டும். |

ஏ காமாக்ஷி! தக்ஷனது எதிரியாகிய பரமசிவனது மார்பில் இருகத் தழுவும் ஸமயத்தில் நெருக்கத்தினால் கொங்கைகளில் நீண்டு தொங்கும் முத்துமாலை அறுந்து பெருகும் பொழுது, எந்தப் புன்னகை அதிக ஒளியைக்கொண்டு ஈட்பினால் அந்த முத்துமாலையின் நிலையைச் சேர்த்து வைக்கின்றதோ, அந்தப் பரிசுத்தம் வாய்ந்த புன்னகையின் கிரணக் கூட்டம் இந்த எனது உள்ளத்தில் விளங்க வேண்டும்.

सा मे खेलतु कामकोटि हृदये स्वच्छा ஸா மே கேலது காமகோடி ஹ்ருதயே ஸ்வச்சா-என்று பாடாந்தரம். காமகோடி-காமகோடியே! சக்கிர ரூபிணியாகிய காமாக்ஷியே! ஸா-அந்த, ஸ்வச்சா - வெளுப்பான, ஸ்மிதாம்சுச்சடா - புன்சிரிப்பின் ஸமூஹமானது, மே ஹ்ருதயே-எனது மனதில், கேலது-விளையாடட்டும். ஸாந்த்ர ஸ்மிதாம்சுச்சடா-என்றும் பாடம்; நெருங்கிய நகையின் கூட்டம்-என்பது பொருள்.

मन्दारे तव मन्थरस्मितरुचो (चां)मात्सर्यमालोक्यते
कामाक्षि स्मरशासने च नियतं रागोदयो लक्ष्यते ।
चान्द्रीषु द्युतिमञ्जरीषु च महान्द्वेषाङ्कुरो दृश्यते
शुद्धानां कथमीदृशी गिरिसुतेऽशुद्धा दशा कथ्यताम् ॥४४॥

மந்தாரே தவ மந்தர-ஸ்மித ருசோ(சாம்) மாத்ஸர்ய [மாலோக்யதே
காமாக்ஷி! ஸ்மர-சாஸநே ச நியதம் ராகோதயோ லக்ஷ்யதே |
சாந்த்ரீஷு த்யுதி-மஞ்ஜரீஷு ச மஹான் த்வேஷாங்குரோ [த்ருச்யதே
சுத்தாநாம் கதமீத்ருசீ கிரிஸுதேऽசுத்தா தசா கத்யதாம் ॥ (44)

| | |
|---|---|
| கிரிஸுதே | பர்வத ராஜபுத்திரியான |
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தவ | உனது |
| மந்தஸ்மித ருச: | அழகிய புன்சிரிப்பின் காந்திக்கு |
| மந்தாரே | மந்தார புஷ்பத்தினிடம் |
| மாத்ஸர்யம் | பொறாமையானது |
| ஆலோக்யதே | இருக்கிறதாகக் காணப்படுகிறது |

| | |
|---|---|
| ஸ்மர சாஸநே ச | மன்மதனை எரித்த பரமசிவனிடத்தில் |
| நியதம் | எப்போதும் |
| ராகோதய: | பிரீதியின் தோற்றமானது |
| லக்ஷ்யதே | காணப்படுகிறது |
| சாந்த்ரீஷு | சந்திரனுடைய தான |
| த்யுதி-மஞ்ஜரீஷு—ச | காந்திகளின் மூலங்களிலோ வென்றால் |
| மஹான் | பெருத்த |
| த்வேஷாங்குர: | பகையின் முளையும் |
| த்ருச்யதே | காணப்படுகிறது |
| சுத்தாநாம் | பரிசுத்தியுள்ளவர்களுக்கு |
| ஈத்ருசீ | இப்பேர்பட்ட |
| அசுத்தா தசா | சுத்தமில்லாத நிலைமையானது |
| கதம் | எப்படி (யுண்டாயிற்று) |
| கத்யதாம் | சொல்லப்படட்டும் |

சுத்தாநாம்—வெண்மையாய் இருப்பவர்களுக்கு, களங்க மற்றவர்களுக்கு.

அசுத்தா தசா—மாத்ஸர்யம், ராகம், த்வேஷம் என்கிற நிலைகள் அசுத்தமானவை.

காமாக்ஷி, உனது புன்சிரிப்பின் ஒளிகளுக்கு மந்தார மலர்களில் பொறாமை காணப்படுகிறது. மதனனை அடக்கிய பரமசிவனிடம் மாறாத ஆசையின் தோற்றமும் புலப்படுகிறது. புஷ்கொத்துக்கு ஒப்பான சந்திரகிரணங்களில் பெரும் பகையின் முளையும் தோற்றுகிறது. மலைமகளே! மாசற்ற உனது புன்முறுவலின் ஒளிகளுக்கு இம்மாதிரியான மாசுள்ள நிலை எப்படி வந்ததென்பதைக் கூற வேண்டும். ராகத்வேஷமாத்ஸர்யங்கள் தீயோரின் குணங்கள், அவை சுத்தமானவருக்கு வரக்காரணம் என்ன? என்று கேட்கிறார் கவி. மந்தாரம், நிலா இவைகளைக்காட்டிலும் மேலான வெளுப்பாயிருக்கிறது புன்னகையென்பது கருத்து.

पीयूषं खलु पीयते सुरजनैर्दुग्धाम्बुधिर्मथ्यते
माहेशैश्च जटाकलापनिगडैर्मन्दाकिनी नह्यते ।
शीतांशुः परिभूयते च तमसा तस्मादनेतादृशी
कामाक्षि स्मितमञ्जरी तव वचोवैदग्ध्यमुल्लङ्घते ॥ ४५ ॥

**பீயூஷம் கலு பீயதே ஸுரஜனை: துக்தாம்புதிர் மத்யதே**
**மாஹேசைச்ச ஜடா-கலாப-நிகடை: மந்தாகிநீ நஹ்யதே |**
**சீதாம்சு: பரிபூயதே ச தமஸா தஸ்மாதநேதாத்ருசீ**
**காமாக்ஷி ஸ்மிதமஞ்ஜரீ தவ வசோ வைதக்த்ய முல்லங்கதே||(45**

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ஸுரஜனை: | தேவர்களால் |
| பீயூஷம்கலு | அமிர்தமானது |
| பீயதே | பானம் செய்யப்படுகிறது |
| துக்தாம்புதி: | பால் ஸமுத்ரமானது |
| மத்யதே | கடையப்படுகிறது. |
| மந்தாகிநீ | கங்கையானது |
| மாஹேசை: | பரமசிவனுடையதான |
| ஜடா-கலாப-நிகடை: | சடைகளென்ற விலங்குகளால் |
| நஹ்யதே | கட்டப்படுகிறது. |
| சீதாம்சு: | சந்திரனும் |
| தமஸா | இருட்டினால் |
| பரிபூயதே | அவமதிக்கப்படுகிறான். |
| தஸ்மாத் | ஆதலால் |
| அநேதாத்ருசீ | அப்படியில்லாததான |
| இயம் | இந்த |
| தவ | உனது |
| ஸ்மிதமஞ்ஜரீ | புன்சிரிப்போவென்றால் |
| வசோவைதக்த்யம் | வாக்கின் ஸாமார்த்தியத்தை |
| உல்லங்கதே | தாண்டி நிற்கிறது. |

தமஸ் என்பதற்கு இருள், ராகு என்று பொருள்.

காமாக்ஷி, தேவர்களால் அமுதம் பருகப்படுகின்றது. பாற்கடல் கடையப்படுகின்றது. மஹேச்வரனுடைய சடைக் கூட்டமாகிற விலங்குகளால் கங்கையும் கட்டப்படுகின்றது. ராகுவால் சந்திரனும் அவமதிக்கப்படுகிறான். ஆகவே இவ்வித மித்தன்மைகள் இல்லாத உனது புன்சிரிப்புக்கொத்து வார்த்தையின் திறமையும் கடந்திருக்கிறது.

தேவி, உனது புன்சிரிப்புக்கு ஸமமாகச் சொல்லப்படும் அமுதம் முதலியவைகளுக்கு ஏதாவது துன்பமிருந்து கொண்டேயிருக்கிறது; உன் முறுவலோ யாதொரு துன்பமுமின்றி விளங்குகிறது. ஆதலால் அதன் மஹிமை வாக்கினால் சொல்ல முடியாமலிருக்கிறது.

आशङ्के तव मन्दहासलहरीमन्यादृशीं चन्द्रिका-
मेकाम्रेशकुटुम्बिनि प्रतिपदं यस्याः प्रभासंगमे ।
वक्षोजाम्बुरुहे न ते रह(च)यतः काञ्चिद्दशां कौट्मलीं-
मास्याम्भोरुहमम्ब किं च शनकैरालम्बते फुल्लताम् ॥४६॥

ஆசங்கே தவ மந்தஹாஸ-லஹரீ மந்யாத்ருசீம் சந்த்ரிகாம்
ஏகாம்ரேச-குடும்பினி! ப்ரதிபதம் யஸ்யா: ப்ரபா-ஸங்கமே!
வக்ஷோஜாம்புருஹோ ந தே ரஹ(ச)யத: காஞ்சித் தசாம்
கௌட்மலீம் |
ஆஸ்யாம்போருஹமம்ப! கிஞ்ச சநகைராலம்பதே
[புல்லதாம்II (46)

| | |
|---|---|
| ஏகாம்ரேச-குடும்பினி! | ஏகாம்பரநாதனுக்குப் பத்னியான |
| அம்ப! | தாயான காமாக்ஷியே |
| தவ | உன்னுடைய |
| மந்தஹாஸ-லஹரீம் | புன்சிரிப்பின் பெருக்கை |
| ப்ரதிபதம் | அடிக்கடி |
| அந்யாத்ருசீம் | தனிப்பட்ட |
| சந்த்ரிகாம் | நிலாவாக |
| ஆசங்கே | நினைக்கிறேன். |
| யஸ்யா: | எந்த மந்தஹாஸத்தினுடைய |
| ப்ரபா-ஸங்கமே | காந்தியின் சேர்க்கையில் |
| தே | உனது |
| வக்ஷோஜ-அம்புருஹே | ஸ்தனங்களாகிற இரு தாமரைப்பூக்கள் |
| கௌட்மலீம் காஞ்சித் தசாம் | மொட்டாக இருக்கும் ஒரு அநிர்வசநீயமான நிலைமையை |
| ந ரஹயத: | விடுகிறதில்லை. |
| கிஞ்ச | மேலும் |
| தே | உனது |
| ஆஸ்ய-அம்போருஹம் | முகமெனும் தாமரையும் |
| சநகை: | மெள்ள மெள்ள |
| புல்லதாம் | மலருவதை |
| ஆலம்பதே | அடைகின்றதோ. |

20-வது ச்லோகத்தில், இந்தப் புன்சிரிப்பான சந்திரிகை அல்லும் பகலும் அதிகமான காந்தியை அடைந்திருக்கிறது

என்றும், கோவைக் கனி போன்ற உதடுகள் என்கிற சூரிய ஒளி பிரகாசித்துக்கொண்டிருக்கையிலும் விலாஸத்தைப் பெற்றிருக்கிறது என்றும் வர்ணித்திருப்பது இங்கே கவனிக்கத்தக்கது.

ஏகாம்பர நாதரின் மனைவியே! உனது புன்னகைப் பெருக்கைத் தனிமை வாய்ந்த (ஒப்பற்ற) வெண்ணிலவு என்று அடிக்கடி நான் நினைக்கிறேன். ஏனெனில், இதன் ஒளி அடிக்கடி கலந்தவுடன் கொங்கைகளாகிற தாமரைகள் மொட்டாக இருக்கும் நிலையை விடாதிருக்கின்றன. தாயே, முகமெனும் தாமரையும் மெதுவாக மலர்ச்சியை அடைகிறது.

'ஸ்தநகுட்மளம்'—என்று ஸ்தநங்களை மொட்டாக வர்ணிப்பது கவிகளின் வழக்கம். தேவியின் சிரிப்பாகிய அதிசயமான சந்திரிகையானது ஸ்தனங்களாகிற தாமரைகளை மொட்டாயிருப்பதை விடச் செய்வதில்லை; ஆனால் திருமுக மண்டலமாகிற தாமரையையோ மலரச் செய்கிறது. இது என்ன ஆச்சரியம் என்று கவி கூறுகிறார்.

"ந தே ரசயத:" என்று ஒரு பாடம். அப்போது, இப் புன்சிரிப்பாகிய சந்திரிகை ஸ்தனங்களாகிய தாமரைகளை மொட்டாகும்படி செய்வதில்லை. அதாவது, சந்திரிகை உண்டானவுடன் மலர்ந்த தாமரை மூடி சோபையையிழந்துவிடும். இப்புன்முறுவலானது ஸ்தனங்களுக்குப் புதிய சோபையை உண்டுபண்ணுகிறதேயொழிய, சோபையை மங்கச் செய்வதில்லை என்பது பொருள்.

आस्तीर्णाधरकान्तिपल्लवचये पातं मुहुर्जग्मुषी
कामद्रोहिणि मांसलस्मरशरज्वालावलिं व्यञ्जती ।
निन्दन्ती घनसारहारवलयज्योत्स्नामृणालानि ते
कामाक्षि स्मितचातुरी विरहिणीरीतिं जगाहेतराम् ॥४७॥

ஆஸ்தீர்ணாதர-காந்தி-பல்லவ-சயே பாதம் முஹுர் ஜக்முஷீ
காமத்ரோஹிணி மாம்ஸல-ஸ்மர-சர-ஜ்வாலாவலிம் வ்யஞ்ஜதீ।
நிந்தந்தீ கநஸார-ஹார-வலய-ஜ்யோத்ஸ்நா-ம்ருணாளாநிதே
காமாக்ஷி ஸ்மித-சாதுரீ விரஹிணீ-ரீதிம் ஜகாஹேதராம் ॥ (47)

காமாக்ஷி! — காமாக்ஷியே!

ஆஸ்தீர்ண-அதர-காந்தி-பல்லவ-சயே — பரவியிருக்கிற கீழ் உதட்டின் காந்தியாகிய தளிர்க்கூட்டத்தில்

| மூலம்: | அடிக்கடி |
|---|---|
| பாதம் ஜக்முஷீ | விழுந்து எழுந்திருப்பதாயும் |
| காம-த்ரோஹிணி | பரமசிவன் விஷயத்தில் |
| மாம்ஸல-ஸ்மர சர-ஜ்வாலா -ஆவலிர் | அதிகமான மன்மத பாணத்தின் ஜ்வாலைகளின் வரிசையை |
| வ்யஞ்ஜதி | வெளிப்படுத்துகிறதாயும் |
| கநஸார-ஹார-வலய ஜ்யோத்ஸ்நா-ம்ருணாலி | கற்பூரத்தையும், முத்துமாலையையும், நிலாவையும் தாமரைத் தண்டையும் |
| நிந்தந்தி | இகழ்கிறதாயுமிருக்கிற |
| தே | உனது |
| ஸ்மித-சாதுரீ | புன்சிரிப்பின் சாதுர்யமானது |
| விரஹிணீ-ரீதிம் | விரஹமடைந்த ஸ்திரீயின் நிலைமையை |
| ஜாகாஹதாராம் | அதிகமாய் அடைந்திருக்கிறது. |

परां गाहते - பராம்காஹதே - என்றும் பாடம். பொருளில் மாறுதலில்லை.

कन्दलत् स्मरशर - கந்தளத் ஸ்மரசர - என்றும் பாடம். கந்தளத்-கொழுந்துவிடும் மன்மதபாணத்தின் என்பது பொருள்.

காமாக்ஷி, கீழ் உதட்டின் ஒளியெனும் விரித்த தளிர் படுக்கையில் அடிக்கடி விழுகின்றதும், மன்மதத் துரோகியாகிய பரமசிவனிடம் கொழுந்துவிடும் மதன பாணங்களின் சுடர்த்தொகுதிகளை வெளிக்காட்டுகின்றதும், பச்சைக்கர்ப்பூரம், முத்துமாலை, நிலவு, தாமரைக்கிழங்கு இவைகளை இகழ்கின்றதுமான உனது புன்சிரிப்பின் திறமையானது கணவனைப் பிரிந்து தவிக்கும் தலைவியின் நிலையை நன்றாய் அடைந்து விட்டது.

பாதாரவிந்த சதகம் 53-வது சுலோகத்தில் தேவியினுடைய திருவடிகள் விரஹிணியான பாட்டைசாரியின் பத்தினியோடு ஒற்றுமையை அடைந்ததாய் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. அது இவ்விடத்தில் கருதத்தக்கது.

கணவனைவிட்டுப் பரிதவிக்கும் தலைவி தளிர்மயமான படுக்கையில் விழுந்து புரளுவாள்; கணவன் விஷயமான மன்மத

தாபத்தின் ஜ்வாலைகளை வெளியிடுவான். குளிர்ச்சியுள்ள பச்சைக்கர்ப்பூரம், முத்துமாலை முதலியவைகளால் தனது மன்மத தாபம் ஆறுததால் அதை வெறுப்பாள். அதுபோல் உனது மந்தஸ்மிதமானது விரஹிணியின் தசையை அடைந்திருக்கிறது என்கிறார் கவி. தளிர்போன்ற கீழ் உதட்டில் மந்தஸ்மிதம் தவழ்கிறதை, தளிர்மயமான படுக்கையில் புரளுவதாகச் சொல்லுகிறார் கவி. மந்தஸ்மிதம் கதிர்விட்டு வெளிவருவதை பரமசிவனிடம் கொழுந்துவிடும் மன்மத பாணங்களின் ஜ்வாலைகள் என்கிறார். பச்சைக்கர்ப்பூரம், முத்துமாலை முதலியவைகளை மந்தஸ்மிதம் தனது காந்தியால் நிந்திக்கிறது. அதாவது அவைகளைக்காட்டிலும் மேலான வெண்மை நிறம் பெற்றிருக்கிறது. இதைப்பற்றி தாமரைத்தண்டு முதலியவைகளை மந்தஸ்மிதம் இகழ்கின்றது என்றார்.

सूर्यालोकविधौ विकासमधिकं यान्ती हरन्ती तमः-
संदोहं नमतां निजस्मरणतो दोषाकरद्वेषिणी ।
निर्यान्ती वदनारविन्दकुहरान्निर्धूतजाड्या नृणां
श्रीकामाक्षि तव स्मितद्युतिमयी चित्रीयते चन्द्रिका ॥४८॥

ஸூர்யாலோகவிதௌ விகாஸமதிகம் யாந்தீ ஹரந்தீ தம:-
ஸந்தோஹம் நமதாம் நிஜஸ்மரணத: தோஷாகர-த்வேஷிணீ |
நிர்யாந்தீ வதநாரவிந்த-குஹராத் நிர்த்தூத-ஜாட்யா ந்ருணாம்
ஸ்ரீ காமாக்ஷி! தவ ஸ்மித-த்யுதிமயீ சித்ரீயதே சந்த்ரிகா | (48)

| | |
|---|---|
| ஸ்ரீ காமாக்ஷி! | காமாக்ஷியே |
| தவ | உனது |
| ஸ்மித-த்யுதிமயீ | புன்சிரிப்பு காந்தியாகிற |
| சந்த்ரிகா | நிலாவானது |
| ஸூர்ய-ஆலோக-விதௌ | ஸூர்யனைக் காணும்பொழுது |
| (ஸூரி-ஆலோகவிதௌ | வித்வான்களைக் காணும்போது) |
| அதிகம் விகாஸம் யாந்தீ | அதிகமான காந்தியை அடைகிறதாயும் |
| நிஜ-ஸ்மரணத: | தன்னை நினைத்தமாத்திரத்திலேயே |
| நமதாம் | நமஸ்கரிப்பவர்களுக்கு |
| தமஸ் ஸந்தோஹம் | அஞ்ஞானக் கூட்டத்தை |
| ஹரந்தீ | போக்கடிக்கிறதாயும் |

| | |
|---|---|
| தோஷாகர-த்வேஷிணீ | சந்திரனை இகழ்கிறதாயும் |
| வதந-அரவிந்த-குஹராத் | முகமென்கிற தாமரைப்பூவின் மத்தியிலிருந்து |
| நிர்யாந்தீ | வெளியாகிறதாயும் |
| ந்ருணாம் | ஜனங்களுடைய |
| நிர்தூத-ஜாட்யா | ஜடத்தன்மையைப் போக்குகிறதாயுமிருந்து |
| சித்ரீயதே | விசித்திரமாயிருக்கிறது. |

ஸூர்யாலோக என்பதை ஸூரி + ஆலோக என்றும், ஸூர்ய + ஆலோக என்றும் பிரித்து, முன்னதற்கு வித்வான்களின் காட்சி என்றும், பின்னதற்கு சூரியனுடைய வெளிச்சமென்றும் பொருள் கொள்ளவேண்டும். சூரியனுக்கு வெளிச்சம் கொடுப்பதும், வித்வான்களுக்கு விளக்கம் தருவதும் அம்பாளுடைய திருவருளே. தமஸ் என்பதற்கு அஞ்ஞானம் என்றும், இருள் என்றும் பொருள். தோஷாகரன் என்பதற்கு இரவை உண்டுபண்ணுகிறவனை சந்திரன் என்றும், தோஷத்துக்கு இருப்பிடமான துஷ்டன் என்றும் பொருள்.

காமாக்ஷி, சூரியனைக்காணுகையில் (அறிஞர்களைக்காணும் போது) அதிக மலர்ச்சியையடைகின்றதும், வணங்குவோரின் இருள் கூட்டத்தைத் (அஞ்ஞானத்திரளை) தன்னை நினைப்பதால் அகற்றுகின்றதும், சந்திரனைப் பகைக்கின்றதும் (குற்றமுள்ளோரைப் பகைக்கின்றதும்) முகத் தாமரையிலிருந்து வெளிவருகின்றதும், மனிதர்களின் குளிர்ச்சியை (அறிவீனத்தை)ப் போக்குகின்றதுமான உனது சிரிப்பின் ஒளியாகிய நிலவு வியப்பையளிக்கின்றது.

சந்திரிகை, ஸூரியனைக்கண்டால் மங்கிவிடும். சந்திரனைப் பகைக்காது; நினைத்த மாத்ரத்தில் இருளைப்போக்காது; தாமரையின் நடுவிலிருந்து வெளிவராது; குளிர்ச்சியையுண்டு பண்ணும். காமாக்ஷியே! உனது புன்சிரிப்பின் ஒளியாகிய நிலவு இவற்றுக்கு மாறுதலாக இருக்கிறது என்று சப்தச்லேஷத்தைக்கொண்டு கூறுகிறார் கவி.

कुण्डीकुर्युरमी कुबोधघटनामसन्मनोमाथिनीं
श्रीकामाक्षि शिवंकरास्तव शिवे श्रीमन्दहासाङ्कुराः ।
ये तन्वन्ती निरन्तरं तरुणिमस्तम्बेरमग्रामणी-
कुम्भद्वन्द्वविडम्बिनि स्तनतटे मुक्ताकुथाडम्बरम् ॥ ४९ ॥

ண்டகுர்யுரமீ குபோத-கடநாம் அஸ்மந்மநோ-மாதிநீம்
காமாக்ஷி! சிவம் கரா: தவ சிவே! ஸ்ரீமந்தஹாஸாங்குரா: |
ப தந்வந்தி நிரந்தரம் தருணிம-ஸ்தம்பேரம-க்ராமணீ-
ம்ப-த்வந்த-விடம்பிநி ஸ்தநதடே முக்தா-குதாடம்பரம் (49)

| | |
|---|---|
| வே! | மங்களமூர்த்தியாகிய |
| காமாக்ஷி! | காமாக்ஷியே |
| ய | எந்தப் புன்சிரிப்புகளானவை |
| ந்தரம் | எப்போதும் |
| ருணிம-ஸ்தம்பேரம-க்ராமணீ-கும்ப-த்வந்த-விடம்பிநி | யௌவனமாகிற யானை ச்ரேஷ்டத்தின் இரண்டு கும்பங்களைப்போன்ற |
| தநதடே | ஸ்தன பிரதேசத்தில் |
| க்தா-குதா-ஆடம்பரம் | முத்துக்களால் செய்யப்பட்ட அம்பாரி விரிப்பின் நிலைமையை |
| ந்வந்தி | செய்கின்றனவோ, |
| த | அப்படிப்பட்ட |
| மீ | இந்த |
| ங்கரா: | மங்களகரங்களான |
| வ | உன்னுடைய |
| ீமந்தஹாஸ-அங்குரா: | புன்சிரிப்புக் கொழுந்துகள் |
| ஸ்மந்-மநோ-மாதிநீம் | எமது மனதைக் கெடுக்கிற |
| போத-கடநாம் | அக்ஞானத்தின் ஸம்பந்தத்தை |
| ண்டகுர்யு: | நாசம் செய்யட்டும். |

சிவனது நாயகியாகிய காமாக்ஷி! எவை யௌவனமெனும் றந்த கஜராஜனது மத்தகமிரண்டையுமொத்த ஸ்தனங்களில் த்துக் கோர்த்த விரிப்பின் அழகை எப்பொழுதும் உண்டு ண்ணுகின்றனவோ; அந்த மங்களங்களைவிளைவிக்கும் உனது ந்தச் சிறந்த புன்னகையின் அங்குரங்கள் நமது மனதை ாட்டும் கெட்ட அறிவின் தொடர்பைக் குலைக்கவேண்டும்.

தேவியை வழிபடுபவர்க்கு அஞ்ஞானம் முதலிய விக்னங் ள் சூழ்வகையால் உளவாயினும், அவை திருவருளால் நாச ற்று அவர்களைத் தடை செயற்பாலனவாகா என்பதாம்.

प्रेङ्खन्तः शरदम्बुदा इव शनैः प्रेमानिलैः प्रेरिता
मज्जन्तो मदनारिकण्ठसुषमासिन्धौ मुहुर्मन्थरम् (राः) ।
श्रीकामाक्षि तव स्मितांशुनिकराः श्यामायमानश्रियो
नीलाम्बोधरनैपुणीं तत इतो निर्निद्रयन्त्यञ्जसा ॥ ५० ॥

ப்ரேங்கந்த: சரதம்புதா இவ சநை: ப்ரேமா நிலை: ப்ரேரிதா:
மஜ்ஜந்தோ மதநாரி-கண்ட-ஸுஷமா-ஸிந்தௌ முஹு:
மந்தரம் (ரா:) |
ஸ்ரீ காமாக்ஷி! தவ ஸ்மிதாம்சு-நிகரா: ச்யாமாயமாந-ச்ரிய:
நீலாம்போதர-நைபுணீம் தத இதோ நிர்நித்ரயந்
த்யஞ்ஜஸா || (50)

| | |
|---|---|
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| சரத்-அம்புதா: இவ | சரத்காலத்திய மேகம் போல் |
| ப்ரேங்கந்த: | விளங்குகிற |
| தவ | உனது |
| ஸ்மித-அம்சு-நிகரா: | புன்சிரிப்புக் காந்தியின் படலங்கள் |
| சநை: | மெள்ள |
| ப்ரேம-அநிலை: | அன்பெனும் காற்றினால் |
| ப்ரேரிதா: | தள்ளப்பட்டவைகளாய் |
| முஹு: | அடிக்கடி |
| மதந-அரி-கண்ட-ஸுஷமா: ஸிந்தௌ | மன்மத சத்ருவான சிவனுடைய கழுத்தின் காந்தியாகிற ஸமுத்திரத்தில் |
| மந்தரம் | மெதுவாக |
| மஜ்ஜந்த: | முழுகினவைகளாய்க்கொண்டு |
| ச்யாமாயமாந-ச்ரிய: | கறுத்த நிறமுள்ளவைகளாகி |
| அஞ்ஜஸா | உடனே |
| தத: இத: | அங்குமிங்கும் |
| நீல-அம்போதர-நைபுணீம் | நீருண்ட கருத்த மேகத்தின் கௌரவத்தை |
| நிர்நித்ரயந்தி | விளங்கச்செய்கின்றன. |

ஸ்ரீ காமாக்ஷி! உனது புன்சிரிப்பின் கிரணக் கூட்டங்கள், சரத்காலத்திய மேகங்களைப்போல் அன்பெனும் காற்றுக் களால் தள்ளப்பட்டு மெதுவாக நகர்ந்து சென்று, மன்மதன்

கைவரான பரமசிவனின் கழுத்தழகு என்னும் கடலில் அடிக்டி மெதுவாக மூழ்கிக் கருத்தநிறத்தை யடைந்து கார்மேகஙளின் நிறத்தைத் தாமதமின்றி இங்குமங்கும் வெளிப்படுத்துன்றன.

மேலே 22-வது சுலோகத்தில் மந்தஸ்மிதத்தை ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற சரத்கால மேகத்தினுடைய துணைக்குவின் சோபையையுடையதாய் வர்ணித்திருப்பது இங்கே சிந்திக்கத்தகுந்தது.

व्यापारं चतुराननैकविहृतौ व्याकुर्वती कुर्वती
रुद्राक्षग्रहणं करेण सततं वागूर्मिकल्लोलिता ।
उत्फुल्लं धवलारविन्दमधरीकृत्य स्फुरन्ती सदा
श्रीकामाक्षि सरस्वती विजयते त्वन्मन्दहासप्रभा ॥५१॥

யாபாரம் சதுராநநைக-விஹ்ருதௌ வ்யாகுர்வதீ குர்வதீ
த்ராக்ஷ-க்ரஹணம் கரேண ஸததம் வாகூர்மி-கல்லோலிதா |
த்புல்லம் தவளாரவிந்த மதரீக்ருத்ய ஸ்புரந்தீ ஸதா
ந காமாக்ஷி! ஸ்ரஸ்வதீ விஜயதே த்வந்மந்தஹாஸ-ப்ரபா II (51)

| | |
|---|---|
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| துர-ஆநந-ஏக-விஹ்ருதௌ | பிரம்மதேவனொருவனிடத்திலேயே விளையாட்டில் (அழகிய முகமொன்றில் விளையாடுவதில்) |
| யாபாரம் | தனது கார்யத்தை |
| யாகுர்வதீ | காட்டுகிறதாயும் |
| ரேண | கையினால் |
| த்ராக்ஷ-க்ரஹணம் குர்வதீ | த்ராக்ஷத்தை வைத்துக் கொண்டிருப்பதாயும் (சிவனுடைய இந்திரியங்களை வசப்படுத்துகிறதாயும்) |
| ஸததம் | எப்போதும் |
| வாக்-ஊர்மி-கல்லோலிதா | வாக் என்னும் அலையால் அலைக்கப்பட்டதாயும் |
| ஸதா | எப்போதும் |
| த்புல்லம் | நன்கு மலர்ந்ததான |
| தவள-அரவிந்தம் | வெண்டாமரைப் பூவை |

| | |
|---|---|
| அதரீக்ருத்ய | தாழ்த்தியாகச்செய்துகொண்டு (ஆஸனமாக்கிக்கொண்டு) |
| ஸ்புரந்தி | விளங்குகிற |
| த்வந்-மந்தஹாஸ-ப்ரபா | உன் புன்சிரிப்புக்காந்தியானது |
| ஸாரஸ்வதீ | ஸரஸ்வதியாக |
| விஜயதே | விளங்குகிறது. |

रुद्राक्षग्रहणं महेशि-ருத்ராக்ஷக்ரஹணம் மஹேசி; என்றும் सरस्वतीव जयति — ஸரஸ்வதீவ ஜயதி என்றும் பாடம்.

ஸ்ரீ காமாக்ஷி! பிரமன் ஒருவனிடமே களியாடுகின்றதும் (அழகிய முகத்திலேயே உலாவுகின்றதும்) ருத்ராக்ஷத்தைக் கையில்கொண்டும் (சிவனது கண்களைக் கவருகின்றதும்) எப்பொழுதும் சொற்களின் அழகுகளோடு கூடியதும், மலர்ந்த வெண்தாமரையை ஆஸனமகக்கொண்டும் (வெண்தாமரையைப் புறக்கணித்துக்கொண்டும்) எப்பொழுதும் விளங்கும் உனது புன்சிரிப்பொளி கலைமகளாக விளங்குகின்றது.

சதுர ஆநந - அழகிய முகம் என்றும், சதுர் ஆநந - நான்கு முகத்தையுடைய என்றும், ருத்ராக்ஷ - ருத்ராக்ஷ மாலை, ருத்ர-அக்ஷ - ருத்திரனுடைய புலன் என்றும் பொருள் கொள்ளல் வேண்டும். இவ்வாறு பொருள்கொண்டு இந்த சுலோகத்தில் அமைந்திருக்கும் சிலேடை அலங்காரத்தை உணர்க.

மஹேசி—என்ற பாடத்தில் மஹேசனின் மனைவியாகிய காமாக்ஷியே என்பது பொருள். ஸரஸ்வதீவ-ஜயதி—என்ற பாடத்தில் ஸரஸ்வதிபோல் விளங்குகிறது என்பது பொருள்.

कर्पूरद्युतितस्करेण महसा कल्माषयत्याननं
श्रीकामाक्षि शिवप्रिये पतिरिव श्रीमन्दहासोऽपि ते ।
आलिङ्गत्यतिपीवरां स्तनतटीं बिम्बाधरं चुम्बति
प्रौढं रागभरं व्यनक्ति मनसो धैर्यं धुनीतेतराम् ॥ ५२ ॥

கர்ப்பூர-த்யுதி-தஸ்கரேண மஹஸா கல்மாஷயத்யாநநம்
ஸ்ரீகாமாக்ஷி! சிவப்ரியே! பதிரிவ ஸ்ரீமந்தஹாஸோऽபி தே ।
ஆலிங்கத்யதிபீவராம் ஸ்தந-தடீம் பிம்பாதரம் சும்பதி
ப்ரௌடம் ராக-பரம் வ்யநக்தி மநஸோ தைர்யம்
துநீதே தராம் ॥ (52)

| | |
|---|---|
| ஶிவப்ரியே | ஶிவபத்னியான |
| ஸ்ரீ காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தே | உனது |
| ஸ்ரீ மந்தஹாஸ: அபி | புன்சிரிப்பும் |
| பதி: இவ | உன் பர்த்தாவைப்போலவே |
| கர்ப்பூர-த்யுதி-தஸ்கரேண | கர்ப்பூரக்காந்தியைக் கவர்கிற |
| மஹஸா | ஒளியினால் |
| ஆநநம் | முகத்தை |
| கல்மாஷயதி | விசித்ர நிறமுள்ளதாகச் செய்கிறது. |
| அதிபீவராம் | மிகவும் பெருத்த |
| ஸ்தநதடம் | ஸ்தனப்பிரதேசத்தை |
| ஆலிங்கதி | ஆலிங்கனம் பண்ணிக்கொள்ளுகிறது |
| பிம்பாதரம் | கோவைப்பழம் போன்ற உதட்டை |
| சும்பதி | முத்தமிடுகிறது |
| ப்ரௌடம் | முதிர்ந்த |
| ராகபரம் | அதிக ஆசையை |
| வ்யநக்தி | வெளியிடுகிறது. |
| மனஸ: | மனதினுடைய |
| தைர்யம் | தைர்யத்தை |
| துநோதிதராம் | மிகவும் உலுக்கிக்குலைக்கிறது. |

श्रीकाञ्चीपुरनायिके पतिः-ஸ்ரீகாஞ்சிபுரநாயிகே பதி:- என்றும் பாடம்

சிவனது காதலியாகிய ஸ்ரீ காமாக்ஷி! உனது நாயகனைப் போல் உனது அழகிய புன்சிரிப்பும் கற்பூரத்தின் ஒளியைக் கவரும் தனது ஒளியால் முகத்தைக் கொஞ்சம் வெளிர்நிற முள்ளதாக்குகிறது. மிகப் பருத்த கொங்கைகளை யணைத்துக் கொள்கிறது. கோவைக்கனிபோன்ற இதழை முத்தமிடுகிறது. ஆழ்ந்த உவகைப் பெருக்கை வெறியிடுகிறது. மனதின் திடத்தையும் உலுக்கிக்கொலைக்கின்றது.

புன்சிரிப்பை காமாக்ஷியின் பதிக்கு ஒப்பிட்டு இரண்டின் செயல்களையும் ஒத்துக் காண்பித்திருப்பது அதிசயிக்கத்தகுந்தது. நாயகன் எத்திறம் நாயகி அத்திறம் என்னும் உலக மொழியின் உண்மையையும் இதில் காண்க.

वैशद्येन च विश्वतापहरणक्रीडापटीयस्तया
पण्डित्येन पचेलिमेन जगतां नेत्रोत्सवोत्पादने ।
कामाक्षि सितकन्दलैस्तव तुलामारोढुमुद्योगिनी
ज्योत्स्नासौ जलराशिपोषणतया दूष्यां प्रपन्ना दशाम् ॥

வைசத்யேந ச விச்வ-தாப-ஹரண-க்ரீடா-படீயஸ்தயா
பாண்டித்யேந பசேளிமேந ஜகதாம் நேத்ரோத்ஸவோத்பாதநே ।
காமாக்ஷி! ஸ்மித-கந்தளைஸ்தவ துலாமாரோடுமுத்யோகிநீ
ஜ்யோத்ஸ்நாஸௌ ஜலராசி-போஷணதயா தூஷ்யாம் ப்ரபந்நா தசாம் ॥ (53)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| வைசத்யேந ச | வெளுமையினாலும் |
| விச்வ-தாப-ஹரண-க்ரீடா படீயஸ்தயா | உலகத்தின் தாபத்தை நீக்கும் கேளியில் ஸாமர்த்தியத்தினாலும் |
| ஜகதாம் | ஜகத்திற்கும் |
| நேத்ர-உத்ஸவ-உத்பாதநே | நேத்திரானந்தத்தை உண்டு பண்ணும் விஷயத்தில் |
| பசேளிமேந பாண்டித்யேந | பழுத்ததான ஸாமர்த்தியத்தினாலும் |
| தவ | உனது |
| ஸ்மித கந்தளை: | புன்சிரிப்புக்களோடு |
| துலாம் | ஸமதையை |
| ஆரோடும் உத்யோகிநீ | அடைவதற்கு முயற்சி செய்கிற |
| அஸௌ ஜ்யோத்ஸ்நா | அந்த நிலாவானது |
| ஜலராசி போஷணதயா | ஜலராசியென்கிற ஜடராசியைப் பொங்கும்படி செய்வதாலே |
| தூஷ்யாம் | இழிவான |
| தசாம் | நிலைமையை |
| ப்ரபந்நா | அடைந்து விட்டது. |

காமாக்ஷி! வெண்மையாலும் உலகின் தாபத்தையகற்றும் விளையாட்டில் கைதேர்ந்திருப்பதாலும், உலகத்தார் கண்களுக்கு இன்பந்தருவதில் பக்குவமானதிறமையாலும், உனது புன்னகையின் ஒற்றுமையைப் பெற முயலும் இந்த வெண்

ணிலவு அறிவிலிகளின் கூட்டத்தை வளர்ப்பதால் (ஸமுத்திரத்தைப் பொங்கி எழச் செய்வதால்) இகழத்தக்க நிலையை அடைந்துவிட்டது.

வைசத்யம் - வெண்மை, சுத்தம்; விச்வதாபஹாரணம் - உலகங்களினுடைய உஷ்ணத்தை நீக்குதல்; ஜலராசிபோஷணம் - ஸமுத்திரம் பொங்கும்படி செய்தல்; ஜடராசிபோஷணம்-ஜடர்களின் ராசியைப்போஷிக்கும்படி செய்தல், அல்லது ஜலராசியான ஸமுத்திரத்திலிருந்து விருத்தியடைதல். ஒன்றிடைவிட்ட மேல் சுலோகத்தில் உள்ளதுபோல் இதிலும் அமைந்துள்ள சிலேடையைக் காண்க.

लावण्याम्बुजिनीमृणालवलयैः शृङ्गार(गन्ध)गर्जद्द्विप-
ग्रामण्यः श्रुतिचामरैस्तरुणिमस्वाराज्यबीजाङ्कुरैः ।
आनन्दामृतसिन्धुवीचिपृषतैरास्याब्जहंसैस्तव
श्रीकामाक्षि मथान मन्दहसितैर्मत्कं मनःकल्मषम् ॥५४॥

லாவண்யாம்புஜிநீ-ம்ருணாள-வலயை: ச்ருங்கார-கர்ஜத் (கந்த)த்விப-
க்ராமண்ய: ச்ருதிசாமரைஸ்தருணிம-ஸ்வாராஜ்ய-பீஜாங்குரை: ।
ஆனந்தாம்ருத-ஸிந்து-வீசி-ப்ருஷதை: ஆஸ்யாப்ஜ-ஹம்ஸைஸ்தவ
ஸ்ரீகாமாக்ஷி! மதாந மந்தஹஸிதை: மத்கம் மந:கல்மஷம்॥ (54)

| | |
|---|---|
| ஸ்ரீ காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| லாவண்ய- அம்புஜிநீ-ம்ருணாள-வலயை: | அழகென்னும் தாமரைப்பூவின் தண்டுகளாயும் |
| ச்ருங்கார-கர்ஜத்-த்விப-க்ராமண்ய: | சிருங்காரமென்னும் கர்ஜிக்கிற சிறந்த யானையின் |
| ச்ருதி-சாமரை: | காதில் கட்டிய வெண்சாமரங்களாயும் |
| தருணிம-ஸ்வாராஜ்ய-பீஜ-அங்குரை: | யௌவனமென்னும் ஸ்வாராஜ்யத்தின் வித்துக்களின் முளைகளாயும் |
| ஆனந்த-அம்ருத-ஸிந்து-வீசி-ப்ருஷதை: | ஆனந்தமென்னும் அம்ருத ஸாகரத்தின் சிறிய அலைகளாயும் |
| ஆஸ்ய-அப்ஜ-ஹம்ஸை: | முகமென்னும் தாமரைப் பூவிலிருக்கும் ஹம்ஸங்களாயுமிருக்கிற |

| | |
|---|---|
| தவ | உனது |
| மந்தஹஸிதை: | புன்சிரிப்புகளால் |
| மத்கம் | எனது |
| மன: கல்மஷம் | மனதிலிருக்கும அழுக்கை |
| மதாந | போக்கடிப்பாயாக. |

கந்தத்விப - என்ற பாடத்திற்கு மதம் பிடித்த யானை என்பது பொருள்.

ஸ்ரீ காமாக்ஷி! அழகெனும் தாமரைத் தடாகத்திலுள்ள தாமரைத் தண்டுகளும், சிங்காரமென்னும் மதித்த கஜேந்திரனின் காதில் கட்டிய வெண்சாமரங்களும், யௌவனத்தின் ஏகாதிபத்ய ஒளிக்கதிர்களும், ஆனந்தமாகிற பாற்கடலின் அலைகளின் திவலைகளும், முகத்தாமரையில் உலாவும் அன்னங்களுமாகிய உனது மந்தஹாஸங்களால் எனது மனதின் அழுக்கை அகற்றுவாயாக.

புன்சிரிப்பை இங்கே ஆனந்தார்ணவ ஸாகரத்தின் சிறிய அலைகள் என்று சொல்லியிருக்கிறதை நினைத்தால், அவர் அன்பு மிகுதியோடு உறைப்பத் தியானிக்குந் தியானப்பயிற்சி வயத்தால் உளதாகிய அம்மையின் அநுக்ரஹபூர்வமான புன்முறுவலைத்தாம் கண்டு தம்மனுபவம் கூறியவாறு தெற்றென விளங்குகிறது. ஏனையோரையும் அவ்வாறு செய்து மோக்ஷானந்தமடையக்கடவீர் என்று தந்துணிபுரைத்து வற்புறுத்திய வாறும் உணர்க.

उत्तुङ्गस्तनमण्डलीपरिचलन्माणिक्यहारच्छटा-
चञ्चच्छोणिमपुञ्जमध्यसरणिं मातः परिष्कुर्वती ।
या वैदग्ध्यमुपैति शङ्करजटाकान्तारवाटीपतत्
स्वर्वापीपयसः स्मितद्युतिरसौ कामाक्षि ते मञ्जुला ॥५५॥

உத்துங்க-ஸ்தந-மண்டலீ-பரிசலந்-மாணிக்ய-ஹார-ச்சடா-
சஞ்சத்-சோணிம-புஞ்ஜ-மத்ய-ஸரணிம் மாத: பரிஷ்குர்வதீ |
யா வைதக்த்ய முபைதி சங்கர-ஜடா-காந்தார-வாடீ பதத்-
ஸ்வர்வாபீ-பயஸ: ஸ்மித த்யுதிரஸௌ காமாக்ஷி! தே
மஞ்ஜுளா || (55)

| | |
|---|---|
| மாத: | தாயாரான |
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| உத்துங்க-ஸ்தந-மண்டலீ-பரிசலந்-மாணிக்ய-ஹாரச்-சடா-சஞ்சச்-சோணிம-புஞ்ஜ-மத்ய-ஸரணிம் | பெருத்த ஸ்தன பாரங்களில் அசைந்திடா நிற்கும் மாணிக்ய ஹாரத்திலிருந்து வெளிவரும் சிவந்த காந்திக்கொடியினுடைய புதரின் மத்தியில் தோன்றும் இடங்களை |
| பரிஷ்குர்வதீ | நிரப்புகின்ற |
| யா | எந்தபுன்சிரிப்பின்காந்தியானது |
| சங்கர-ஜடா-காந்தார-வாடீ-பதத்-ஸ்வர்வாபீ-பயஸ: | சங்கரனுடைய ஜடையென்னும் காடுகளில் பாய்கிற கங்கையின் ஜலத்தின் |
| வைத்க்யம் | நிலைமையை |
| உபைதி | அடைகிறதோ |
| அஸெள | இந்த |
| தே | உனது |
| ஸ்மித-த்யுதி: | புன்சிரிப்பின் ஒளியானது |
| மஞ்ஜுளா | அழகுவாய்ந்ததாகும். |

தாயே காமாக்ஷி! எது உயர்ந்த ஸ்தனமண்டலத்தில் அசைந்தாடும் மாணிக்க மாலையின் கொத்துபோல் திகழும் சிவப்பு நிறக்குவியலின் நடுவை அழகுபடுத்துகின்ற உனது மந்தஹாஸம், சிவனது சடைவரிசையாகிற காட்டின் நடுவே விழும் தேவ கங்கையின் ஸாம்யத்தையடைகின்றதோ, அந்த உனது சிரிப்பின் ஒளி ஒன்றே வனப்பு வாய்ந்தது.

தேவியின் திருமேனித் தோற்றத்தினை கவி தன் மனத்தில் பதித்துவைத்துத் தியானித்து வழிபட்டுத் தோத்திரம் செய்யும் அழகு இதில் ஆழ்ந்து உணரத்தக்கது.

सन्नामैकजुषा जनेन सुलभं संसूचयन्ती शनै-
रुत्तुङ्गस्य चिरादनुग्रहतरोरुत्पत्स्यमानं फलम् ।
प्राथम्येन विकस्वरा कुसुमवत्प्रागल्भ्यमभ्येयुषी
कामाक्षि स्मितचातुरी तव मम क्षेमंकरी कल्पताम् ॥ ५६ ॥

ஸந்நாமைகஜுஷா ஜநேந ஸுலபம் ஸம்ஸூசயந்தீ சனை:
உத்துங்கஸ்ய சிராதநுக்ரஹதரோருத்பத்ஸ்யமாநம் பலம் |
ப்ராதம்யேந விகஸ்வரா குஸுமவத் ப்ராகல்ப்யமப்யேயுஷீ
காமாக்ஷி! ஸ்மித சாதுரீ தவ மம க்ஷேமங்கரீ கல்பதாம் || (56)

| | |
|---|---|
| *காமாக்ஷி!* | *காமாக்ஷியே!* |
| *ஸந்நாம-ஏக-ஜுஷா* | *ஸாது என்ற ஒரே பெயரை யடைந்த* |
| *ஜநேந* | *மனிதனுல்* |
| *ஸுலபம்* | *அடையக்கூடிய* |
| *உத்துங்கஸ்ய* | *உயர்ந்த* |
| *அநுக்ரஹதரோ:* | *அநுக்ரஹமாகிற விருக்ஷத்திலிருந்து* |
| *சிராத்* | *வெகுநாள் கழித்து* |
| *உத்பத்ஸ்யமாநம்* | *உண்டாகப்போகிற* |
| *பலம்* | *பலத்தை* |
| *சனை:* | *மெதுவாக* |
| *ஸம்ஸூசயந்தீ* | *ஸூசனை செய்கிறதாயும்* |
| *ப்ராதம்யேந* | *முதல் முதலாக* |
| *விகஸ்வரா* | *மலர்ந்தும்* |
| *குஸுமவத்* | *புஷ்பம் போல்* |
| *ப்ராகல்ப்யம்* | *பெருமிதத்தை* |
| *அப்யேயுஷீ* | *அடைந்தன்ன* |
| *தவ* | *உன்னுடைய* |
| *ஸ்மிதசாதுரீ* | *புன் சிரிப்பின் திறம்* |
| *மம* | *எனக்கு* |
| *க்ஷேமங்கரீ* | *க்ஷேமத்தைச் செய்கிறதாக* |
| *கல்பதாம்* | *ஆகட்டும்* |

*காமாக்ஷியே! நல்ல பெயரையடைந்த ஜனங்களாலேயே எளிதில் அடையக்கூடியதும், மிகவுமுயர்ந்த அருளென்னும் மரத்தின் வெகுநாட்களுக்குப் பிறகு உண்டாகப்போகும் பழத்தை மெதுவாக முன்பே ஸூசனம் செய்கின்றதும், மலரைப்போல்முதலில் மலர்ந்து, பெருமிதத்தையடைகின்றதுமான உனது புன்னகையின் திறம் எனக்கு க்ஷேமத்தைச் செய்யவேண்டும்.*

*தேவி தாமே வலியவந்து தம் அடியார்களைப் பலதிறத் தாலும் ஆட்கொண்டருளும் முறை இங்கே ஆசிரியர் குறிப் பித்த விதம் காண்க.*

धानुष्काग्रसरस्य लोलकुटिलभ्रूलेखया बिभ्रतो
लीलालोकशिलीमुखं नववयःसाम्राज्यलक्ष्मीपुषः ।
जेतुं मन्मथमर्दिनं जननि ते कामाक्षि हासाङ्कुरो
वल्गुर्विभ्रमभूभृतो वितनुते सेनापतिप्रक्रियाम् ॥ ५७ ॥

தானுஷ்காக்ர-ஸரஸ்ய லோல-குடில-ப்ரூ-லேகயா பிப்ரதோ
லீலாலோக-சிலீமுகம் நவ-வயஸ்ஸாம்ராஜ்ய-லக்ஷ்மீபுஷ: |
ஜேதும் மன்மத-மர்த்திநம் ஜநநி தே காமாக்ஷி! ஹாஸாங்குர:
வல்குர் விப்ரம-பூப்ருதோ விதநுதே ஸேநாபதி ப்ரக்ரியாம்||(57)

| | |
|---|---|
| ஜநநி! | தாயாரான |
| காமாக்ஷி! | காமாக்ஷியே |
| தானுஷ்க-அக்ர-ஸரஸ்ய | பெரிய வில்லாளியாயும் |
| லோல-குடில-ப்ரூ-லேகயா | அசைந்து வளைந்து கொண்டிருக்கிற புருவக்கொடியால் |
| லீலா-ஆலோக-சிலீமுகம் | விளையாட்டுப் பார்வையென்கிற பாணத்தை |
| பிப்ரத: | வைத்துக்கொண்டிருப்பவனும் |
| நவ-வயஸ்-ஸாம்ராஜ்ய-லக்ஷ்மீ-புஷ: | புதிய யௌவனமென்னும் ராஜ்யலக்ஷ்மியை அடைந்தவனுமிருக்கிற |
| விப்ரம-பூப்ருத: | விலாஸமென்கிற அரசனுக்கு |
| மன்மத-மர்த்திநம் | மன்மதனை வென்ற சிவனை |
| ஜேதும் | ஜெயிக்கவேண்டிய விஷயத்தில் |
| தே | உனது |
| வல்கு: | அழகிய |
| ஹாஸ-அங்குர: | புன்சிரிப்புக்கள் |
| ஸேநாபதி-ப்ரக்ரியாம் | ஸேனாதிபதியின் தொழிலை |
| விதநுதே | செய்கிறது. |

* जननि ते मन्दस्मितप्रक्रमः ஜநநி தே மந்தஸ்மித ப்ரக்ரம:-என்றும், जननि ते कामाक्षि हासः स्वयम् ஜநநி தே காமாக்ஷி ஹாஸ:

ஸ்வயம்-என்றும் பாடாந்தரங்கள். தேவல்கு: மந்தஸ்மித ப்ர க்ரம: - உனது அழகிய புன்சிரிப்பின் ரீதி என்பது பொருள்' ஜநநி காமாக்ஷி தேவல்கு: ஹாஸ: - தாயாகிய காமாக்ஷியே! உனது அழகிய புன்சிரிப்பானது, ஸ்வயம் - தானகவே என் பது பொருள்.

அன்னையே! காமாக்ஷி! வில்லாளிகளில் முதல்வனும், அசைகின்ற வளைந்த புருவக்கொடியால் அழகிய விளையாட்டுப் பார்வையெனும் அம்பைத் தொடுப்பவனும், யௌவநத்தின் அரசாக்ஷியையடைந்தவனுமான அழகிய விப்ரமம் (சேஷ்டை) என்னும் அரசனுக்கு உனது அழகிய புன்முறுவல் மன்மதனை வென்ற பரமசிவனை வெல்வதற்காக ஸேனுதிபதியின் செயலைத் தானே செய்கின்றது.

"स्त्रीणां विलासविव्वोकविभ्रमा ललितं तथा। हेलालीलेत्यमीभावाः क्रियाः शृङ्गारभावजाः" என்று அமரம். ஸ்திரீகளுடைய ச்ருங்காரபாவ மாகிற ரதியிலிருந்து பிறந்த கிரியைகள் விலாஸம், விப்ரமம் முதலியன. காமாக்ஷியின இந்த விப்ரமத்தை ஒரு அரசனாக உருவகப்படுத்தினர் கவி. அவ்வரசனுக்கு வளைந்த புருவக் கொடியே வில்லு. அழகிய பார்வையே அம்பு. இவ்வரசன் புதிய யௌவனமென்னும் ஸாம்ராஜ்ய லக்ஷ்மியை அடைந்து பிரகாசிக்கிறன். இந்த விப்ரமமென்னும் அரசன் மன்மதனை ஜயித்த பரமசிவனை ஜயிக்க எண்ணும் கால், ஏ காமாக்ஷி! உன் புன்சிரிப்பானது ஸேநாபதியாகவிருக்கும் தன்மையைத் தானகவே அடைகிறது.

இந்த சுலோகத்தில் கவிசுவரரின் கற்பனை சாலவும் வியக் கற்பாற்று. மேலும் "மன்மதனை ஜெயித்த பரமேசுவரனை ஜெயிப்பதற்கு" என்பதில் பார்வதி பரமேசுவரர் இருவரும் காமத்தை வென்றவர்கள் என்றும், அவர்கள் ஒருவருக்கொரு வர் காமுறுவது என்பது திருவிளையாட்டே என்றும் குறித்த நயம் காண்க.

यन्नाकम्पत कालकूटकवलीकारे चुचुम्बे न यत्
ग्लान्या चक्षुषि रूषितानलशिखे रुद्रस्य तत्तादृशम्।
चेतो यत्प्रसभं स्मरज्वरशिखिज्वालेन लेलिह्यते
तत्कामाक्षि तव स्मितांशुकणिकाहेलाभवं प्राभवम् ॥ ५८ ॥

யந்நாகம்பத காலகூட—கபளீகாரே—சுசும்பே ந யத்
க்லாந்யா சக்ஷுஷி—ருஷிதாநல-சிகே ருத்ரஸ்ய தத்தாத்ருசம் |
சேதோ யத் ப்ரஸபம் ஸ்மர-ஜ்வர-சிகி-ஜ்வாலேந லேலிஹ்யதே
தத் காமாக்ஷி தவ ஸ்மிதாம்சு-கணிகா-ஹேலாபவம் ப்ராபவம் ||

| | |
|---|---|
| யத் | எந்த மனதானது |
| காலகூட-கபளீகாரே | காலகூடவிஷத்தைச் சாப்பிடும் காலத்திலும் |
| ந-அகம்பத | நடுக்கமுறவில்லையோ |
| யத் | எந்த மனதானது |
| சக்ஷுஷி | கண்கள் |
| ருஷித-அநல-சிகே | அக்னியின் ஜ்வாலையால் அலைக்கப்பட்டபொழுதும் |
| க்லாந்யா | களைப்பினால் |
| ந சுசும்பே | வாட்டமுறவில்லையோ |
| தத் தாத்ருசம் | அப்படிப்பட்ட |
| ருத்ரஸ்ய | ருத்ரனுடைய |
| சேத: | மனஸும் |
| ஸ்மரஜ்வர-சிகா-ஜ்வாலேந | மன்மதஜ்வரம் என்னும் அக்னி ஜ்வாலையினால் |
| ப்ரஸபம் | பலாத்காரமாக |
| லேலிஹ்யதே-(இதி) யத் | ஆக்ரமிக்கப்படுகிறதென்பது யாதொன்று உண்டோ |
| தத் | அது |
| காமாக்ஷி | காமாக்ஷியே! |
| தவ | உனது |
| ஸ்மிதாம்சு-கணிகா-ஹேலாபவம் | புன்சிரிப்பின் கிரணங்களின் திவலையின் விளையாட்டால் ஏற்பட்ட |
| ப்ராபவம் | மஹிமையே. |

ஏ காமாக்ஷி!, கால கூடத்தை விழுங்கும் பொழுது எது நடிக்கவில்லையோ, நேத்ரம் அக்னியின் ஜ்வாலையால் அலைக்கப் படுகையிலும் எது வாட்டமுறவில்லையோ, அத்தகைய ருத்ர னுடைய மனதும் மன்மதாக்னி ஜ்வாலையால் பலவந்தமாய் கவரப்படுவதென்பது உனது மந்தஹாஸத்தின் கிரணத் திவலை யின் விளையாட்டால் ஏற்படும் மஹிமையே.

संभिन्नेव सुपर्वलोकतटिनी वीचीचयैर्यामुनैः
संमिश्रेव शशाङ्कदीप्तिलहरी नीलैर्महानीरदैः ।
कामाक्षि स्फुरिता तव स्मितरुचिः कालाञ्जनस्पर्धिना
कालिम्ना कचरोचिषां व्यतिकरे कांचिद्दशामश्नुते ॥ ५९ ॥

ஸம்பிந்நேவ-ஸுபர்வ-லோக-தடிநீ வீசிசயைர் யாமுநை:
ஸம்மிச்ரேவ சசாங்க-தீப்தி-லஹரீ-நீலைர்மஹாநீரதை: |
காமாக்ஷி! ஸ்புரிதா தவ ஸ்மிதருசி: காலாஞ்ஜந-ஸ்பர்த்திநா
காளிம்நா கசரோசிஷாம் வ்யதிகரே காஞ்சித் தசாமச்நுதே|| 59

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தவ | உனது |
| ஸ்புரிதா | விளங்கிக்கொண்டிருக்கிற |
| ஸ்மிதருசி: | புன்சிரிப்பின் ஒளியானது |
| கால-அஞ்ஜந-ஸ்பர்த்திநா | கருத்த மையோடு பகைக்கும் |
| கச-ரோசிஷாம் | கூந்தல் காந்திகளின் |
| காளிம்நா | கருநிறத்துடன் |
| வ்யதிகரே | ஸம்பந்திக்கும்போது |
| யாமுநை: | யமுனா நதியினுடையவையான |
| வீசிசயை: | அலைகளோடு |
| ஸம்பிந்நா | சேர்ந்த |
| ஸுபர்வ-லோக-தடிநீ-இவ | தேவலோக நதியான கங்கா நதி போலவும் |
| நீலை: | கருத்த |
| மஹாநீரதை: | பெரிய மேகங்களோடு |
| ஸம்மிச்ரா | சேர்ந்த |
| சசாங்க-தீப்தி-லஹரீ இவ | சந்திரகாந்தியின் பெருக்கு போலவும் |
| காஞ்சித் | ஒரு மாதிரியான |
| தசாம் | நிலைமையை |
| அச்நுதே | அடைகிறது |

காமாக்ஷி! கறுத்த யமுனையின் அலைக் கூட்டங்களுடன் கலந்த தேவலோக நதியாகிய கங்கை போலும், கரும் பெரும் முகில்களுடன் சேர்ந்த சந்திரனது ஒளிப்பெருக்குப்போலும், வெளிப்படும் உனது இளம் நகையின் ஒளி, காலாஞ்ஜனத்துடன் போட்டியிடும் உனது குழல்களின் கிரணங்களின் கருமையுடன் சேருகையில் இன்னதென்று சொல்லவொண்ணாத நிலையையடைகிறது.

जानीमो जगदीश्वरप्रणयिनि त्वन्मन्दहासप्रभां
श्रीकामाक्षि सरोजिनीमभिनवामेषा यतः सर्वदा ।
आस्येन्दोरवलोकने पशुपतेरभ्येति संफुल्लतां
तन्द्रालुस्तदभाव एव तनुते तद्वैपरीत्यक्रमम् ॥ ६० ॥

ஜாநீமோ ஜகதீச்வர-ப்ரணயிநி! த்வந்-மந்தஹாஸ-ப்ரபாம்
ஸ்ரீ காமாக்ஷி! ஸரோஜிநீமபிநவாமேஷாயதஸ் ஸர்வதா |
ஆஸ்யேந்தோரவலோகநே பசுபதேரப்யேதி ஸம்புல்லதாம்
தந்த்ராளு: ததபாவஏவ தநுதே தத்வைபரீத்யக்ரமம் || (60)

| | |
|---|---|
| ஜகத்-ஈச்வர-ப்ரணயிநி! | ஜகத்துக்கு ஈச்வரனான பரம சிவனது பத்நியான |
| ஸ்ரீ காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| த்வத்-மந்தஹாஸ-ப்ரபாம் | உனது புன்சிரிப்பின் காந்தியை |
| அபிநவாம் | புதிதான |
| ஸரோஜிநீம் | தாமரையோடையாக |
| ஜாநீம: | நினைக்கிறோம் |
| யத: | ஏனென்றால் |
| ஏஷா | இந்த புன்சிரிப்பானது |
| ஸர்வதா | எப்போதும் |
| பசுபதே: | பரமசிவனுடைய |
| ஆஸ்ய-இந்தோ: | முகமான சந்திரனுடைய |
| அவலோகநே | பார்வையில் |
| ஸம்புல்லதாம் | மலர்ச்சியை |
| அப்யேதி | அடைகிறது |
| ததபாவே ஏவ | அதில்லா ஸமயத்தில் |
| தந்த்ராளு: | சோம்பலுள்ளதாயிருந்து கொண்டு |
| தத்-வைபரீத்ய-க்ரமம் | அதற்கு எதிராக இருக்கும் தன்மையை (மலர்ச்சியில்லாததை) |
| தநுதே | அடைகிறது. |

ஜகதீசனாகிய பரமசிவனின் துணைவியான காமாக்ஷி! உனது புன்சிரிப்பெனும் தாமரையோடை பசுபதியின் முகமென்னும் சந்திரனைக் காண்பதாலேயே எப்பொழுதும் மலர்வதாலும் அதில்லாதபொழுது சோம்பலுற்று மலராதநிலையை

யையடைவதாலும் உனது மந்தஹாஸத்தின் ஒளியை புதிய தோர் தாமரைபோலடையென நினைக்கிறோம்.

श्रीकामाक्षि कुमुद्वतीं ஸ்ரீ காமாக்ஷி குமுத்வதீம் - என்று ஓர் பாடம் காண்கிறது. அப்போது, அபிநவாம்-அழகிய, குமுத்வதீம்-ஆம்பலோடையாக- என்பது பொருள். "ஸரோஜிநீம்" என்ற பாடமே சிறந்தது எனப் பெரியோர் கொள்கை.

यान्ती लोहितिमानमभ्रतटिनी धातुच्छटाकर्दमै-
र्भान्ती बालगभस्तिमालिकिरणैर्मेघावली शारदी ।
बिम्बोष्ठद्युतिपुञ्जचुम्बनकलाशोणायमानेन ते
कामाक्षि स्मितरोचिषा समदशामारोढुमाकाङ्क्षते(ति) ॥ ६१ ॥

யாந்தீ—லோஹிதிமாந மப்ரதடிநீ தாதுச்சடா—கர்த்தமை:
பாந்தீ பால—கபஸ்தி-மாலி—கிரணை: மேகாவளீ சாரதீ |
பிம்போஷ்ட—த்யுதி-புஞ்ஜ-சும்பந-கலா-சோணாயமாநேந தே
காமாக்ஷி! ஸ்மிதரோசிஷா ஸமதசாமா ரோடுமா
[காங்க்ஷதே(தி) || (61)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| அப்ர—தடிநீ | ஆகாச கங்கையானது |
| தாதுச்சடா-கர்த்தமை: | } நற்செங்கற் பொடியின் சேற்றால் |
| லோஹிதிமாநம் | சிவப்பு நிறத்தை |
| யாந்தீ | அடைகிறதாயும் |
| சாரதீ | சரத்காலத்தினுடைய |
| மேகவளீ | மேகக்கூட்டமானது |
| பால-கபஸ்திமாலி-கிரணை: | } இளங்கதிரவனின் கிரணங்களோடு சேர்ந்து |
| பாந்தீ | விளங்குகிறதாயும் |
| பிம்போஷ்ட-த்யுதி-புஞ்ஜ-சும்பநகலா-சோணாயமாநேந | } கோவைப்பழம் போன்ற உதட்டின் காந்திகளுமூலங்களோடு சேர்ந்ததால் சிவப்பாகத் தோன்றுகிற |
| தே ஸ்மிதரோசிஷா | உனது புன்சிரிப்புக்காந்தியோடு |
| ஸமதசாம் | ஸமமான நிலைமையை |
| ஆரோடும் | அடைவதற்கு |
| ஆகாங்க்ஷதே | ஆசைப்படுகிறது. |

காமாக்ஷி! காவிக்குவியல்களின் சேறுகளால் செந்நிறம் பெற்ற ஆகாச கங்கையும், இளஞ்சூரியனின் ஒளிகளால் சிவந்து விளங்கும் சரத்காலத்திய மேகக்கூட்டமும், கோவைக் கனிபோன்ற இதழின் ஒளிக்கூட்டத்தோடு சேர்வதால் சிவந்த உனது இளநகையின் ஒளியுடன் ஸம நிலையையடைய விரும்புகின்றன.

श्रीकामाक्षि मुखेन्दुभूषणमिदं मन्दस्मितं तावकं
नेत्रानन्दकरं तथा हिमकरो गच्छेद्यथा तिग्मताम् ।
शीतं देवि तथा यथा हिमजलं संतापमुद्रास्पदं
श्वेतं किं च तथा यथा मलिनतां धत्ते च मुक्तामणिः ॥ ६२ ॥

ஸ்ரீ காமாக்ஷி முகேந்து-பூஷணமிதம்-மந்தஸ்மிதம் தாவகம்
நேத்ராநந்தகரம் ததா ஹிமகரோ கச்சேத் யதா திக்மதாம் |
சீதம் தேவி! ததா யதா ஹிமஜலம் ஸந்தாப-முத்ராஸ்பதம்
ச்வேதம் கிஞ்ச ததா யதா மலிநதாம் தத்தே ச முக்தாமணி:||
(62)

| | |
|---|---|
| தேவி! | ஜகன்மாதாவான |
| ஸ்ரீ காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தாவகம் | உனது |
| முகேந்து பூஷணம் | சந்திரன்போன்ற முகத்திற்கு அலங்காரமான |
| இதம் மந்தஸ்மிதம் | இந்தப் புன்சிரிப்பானது |
| ஹிமகர: | சந்திரன் |
| யதா | எப்படி |
| திக்மதாம் | சூடாயிருக்கும் தன்மையை |
| கச்சேத் | அடைவானோ |
| ததா | அப்படி |
| நேத்ர-ஆநந்த-கரம் | கண்ணுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பதாக |
| [அந்தி | இருக்கிறது] |
| ஹிமஜலம் | பனிஜலமும் |
| யதா | எப்படி |
| ஸந்தாப-முத்ரா-அஸ்பதம் | சுடுமைக்கு இடமாயிருக்குமோ |
| ததா சீதம் | அவ்வளவு குளிர்ந்ததாக இருக்கிறது |

| | |
|---|---|
| கிஞ்ச | மேலும் |
| முக்தாமணி: | நல்லமுத்தானது |
| யதா | எப்படி |
| மலிநதாம் | அழுக்காயிருக்கும் தன்மையை |
| தத்தே | அடையுமோ |
| ததா | அப்படி |
| ச்வேதம்-ச | வெளுப்பாகவும் இருக்கிறது. |

காமாக்ஷி தேவியே! சந்திரன் போன்ற உன் முகத்திற்கு அணியாகவிருக்கும் இந்தப் புன்சிரிப்பு, சந்திரனையும் கூடாகக் கருதுபவரது கண்களுக்கு அவ்வளவு இன்பமளிப்பதாகவும், பனிஜலமும் தாபத்தின் முத்திரைக்குறியதாகும்படி குளிர்ச்சியாயும், அப்படியே உயர்ந்த நல்முத்தும் அழுக்குள்ளது என்று கருதும்படி வெளுப்பாகவுமிருக்கின்றது.

त्वन्मन्दस्मितमञ्जरीं प्रसृमरां कामाक्षि चन्द्रातपं
सन्तः संततमामनन्त्यमलता तल्लक्षणं लक्ष्यते ।
यत्रासौ विधुनोति तापमधिकं नाभ्यन्तरं मानस-
ध्वान्तं तत्खलु दुःखिनो वयममी केनेति जानीमहे ॥ ६३ ॥

த்வந்-மந்தஸ்மித-மஞ்ஜரீம் ப்ரஸ்ருமராம் காமாக்ஷி [சந்த்ராதபம்
ஸந்தஸ்ஸந்ததமாமநந்த்யமலதா தல்லக்ஷணம் லக்ஷ்யதே |
யந்நாஸௌ விதுநோதி தாபமதிகம் நாப்யந்தரம் மாநஸ-
த்வாந்தம் தத்கலு துக்கிநோ வயமமீ கேநேதி ஜாநீமஹே||(63)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ப்ரஸ்ருமராம் | பரவியுள்ள |
| த்வத்-மந்தஸ்மித-மஞ்ஜரீம் | பூங்கொத்துபோன்ற உனது புன்சிரிப்பை |
| சந்த்ராதபம் | நிலாவாக |
| ஸந்த: | பெரியோர்கள் |
| ஸந்ததம் | எப்போதும் |
| ஆமநந்தி | சொல்லுகிறார்கள் |
| தல்லக்ஷணம் | அதற்கு அடையாளமான |
| அமலதா | வெண்மையும் |
| லக்ஷ்யதே | காணப்படுகிறது |

| | |
|---|---|
| அஸௌ | இந்த புன்னகையாகிய நிலா வானது |
| அதிகம்-தாபம் | அதிகதாபத்தை |
| ந விதுநோதி | போக்குகிறதில்லை |
| ஆப்யந்தரம் | உள்ளேயிருக்கிற |
| மாநஸ-த்வாந்தம் | மனதின் இருளையும் |
| ந விதுநோதி | போக்கடிப்பதில்லை யென்பது யாதொன்றுண்டோ |
| தத் | அந்த விஷயமானது |
| கேந இதி | எந்தக்காரணத்தினாலென்று |
| துக்கிந: | துக்கமடைந்துள்ள |
| அமீ வயம் | இந்த நாங்கள் |
| ந ஜாநீமஹே கலு | அறிந்துகொள்ள முடியவில்லை. |

காமாக்ஷி! படருகின்ற பூங்கொத்துபோன்ற உனது புன்னகையைப் பெரியோர்கள் வெண்ணிலவென்று எப்பொழுதும் தும் புகழ்கின்றனர். அதற்கிலக்கணமான வெண்மையும் அங்கு காணப்படுகின்றது. ஆயினும் எமது அதிக தாபத்தையும் அகற்றுவதில்லை. உள்ளத்தின் இருளையும் போக்குவதில்லை. ஆகையால் வருந்துகின்ற நாங்கள் இது ஏன் என்று அறிய இயலாமலிருக்கிறோம்.

"अस्माकं न दुनोति तापमधिकं धूनोति नाप्यन्तरं ध्वान्तं तत्खलु दुःखिनो वयममी केनेति नो विद्महे"

"அஸ்மாகம் ந துநோதி தாபமதிகம் துநோதி நாப்யந்தரம் த்வாந்தம் தத் கலு துக்கிநோ வயமமீ கேநேதி நோவித்மஹே" என்று பாடாந்தரம். அஸ்மாகம் - எங்களுடைய அதிகம் தாபம் ந துநோதி - அதிகமான தாபத்தைப் போக்கடிப்பதில்லை. ஆப்யந்தரம் த்வாந்தம் - உள்ளிருக்கும் இருளையும், ந துநோதி - அகற்றுவதில்லை........நவித்மஹே - அறியவில்லை.

नम्रस्य प्रणयप्ररोहकलहच्छेदाय पादाब्जयो-<br>
र्मन्दं चन्द्रकिशोरशेखरमणेः कामाक्षि रागेण ते ।<br>
बन्धूकप्रसवश्रियं जितवतो बंहीयसीं तादृशीं<br>
बिम्बोष्ठस्य रुचिं निरस्य हसितज्योत्स्ना वयस्यायते ॥ ६४ ॥

நம்ரஸ்ய ப்ரணய-ப்ரரோஹ-கலஹ-ச்சேதாய பாதாப்ஜயோ:
மந்தம் சந்த்ர-கிசோர-சேகரமணே: காமாக்ஷி ராகேண தே |
பந்தூக-ப்ரஸவ-ச்ரியம் ஜிதவதோ பம்ஹீயஸீம் தாத்ருசீம்
பிம்போஷ்டஸ்ய ருசிம் நிரஸ்ய ஹஸித-ஜ்யோத்ஸ்நா
[வயஸ்யாயதே || (64)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ப்ரணய-ப்ரூட-கலகச்-சேதாய | அன்பினால் வளர்ந்த கலஹத்தை அகற்றுவதற்காக |
| தே | உன்னுடைய |
| பாத-அப்ஜயோ: | தாமரைபோன்ற பாதங்களில் |
| மந்தம் | மெதுவாக |
| நம்ரஸ்ய | வணங்கிய |
| சந்த்ர-கிசோர-சேகர மணே: | இளம்பிறையைச் சூடாமணியாக அணிந்த பரமசிவனுக்கு |
| ராகேண | சிவப்பினால் |
| பந்தூக-ப்ரஸவ-ச்ரியம் | செம்பரத்தம் பூவின் ஒளியை |
| ஜிதவத: | ஜயித்த |
| பிம்போஷ்டஸ்ய | கோவைப்பழம் போன்ற இதழின் (உதட்டின்) |
| தாத்ருசீம் | அப்படிப்பட்டதும் |
| பம்ஹீயஸீம் | வளர்ந்துளதுமான |
| ருசிம் | காந்தியை |
| நிரஸ்ய | விலக்கி |
| ஹஸிதஜ்யோத்ஸ்நா | புன்சிரிப்பாகிய நிலாவானது |
| வயஸ்யாயதே | தோழிபோலாகிறது. |

அன்பின் காரணத்தால் வளர்ந்த கலஹத்தைப் போக்கத் தாமரைபோன்ற உனது பாதங்களில் மெதுவாக வணங்கிய இளம் பிறையைத் தலையணியாய் அணிந்துள்ள பரமசிவனுக்கு, ஹே காமாக்ஷி! உனது நகையெனும் வெண்ணிலவு, சிவப்பால் செம்பரத்தம் பூவின் அழகை வென்ற கோவைப்பழம்போன்ற அவ்விதமான இதழின் அதிக ஒளியைப் போக்கித் தோழி போலாகின்றது.

காமாக்ஷியானவள் ப்ரணய கலஹத்தால் மந்தஹாஸம் செய்யாமல் இருக்கும் கால், உதட்டின் காந்தி செம்பரத்தம் பூ போல் சிவந்திருக்கிறது. அதைக் கோபக்குறியாக கவி நினைக்கிறார். கோபத்தினால் முகம் சிவப்பது என்பது

யல்பே. சந்த்ரசேகரன் ப்ரணய கலஹத்தை அகற்ற தேவியின் திருவடித் தாமரைகளில் மெதுவாக வணங்குகிறார். அச்சமயம் தேவியின் புன்னகை வெளிவருகிறது, அதைக்கண்டு ஊடல் தீர்ந்ததாக எண்ணுகிறார் பரமசிவன். புன்னகை ஊடலைத்தீர்ப்பதற்குக் காரணமானதால், அதைத் தோழியாக கவி உத்ப்ரேக்ஷிக்கிறார். வெளுப்பான புன்னகை வெளிவரும்போது மூடியிருந்த இதழ் (உதடு) பிரிந்ததும் சிவப்பு நிறம் கலக்கும். இதை "ருசிம்மிச்ரஸ்ய" என்கிறார் கவி.

मुक्तानां परिमोचनं विदधतस्तत्प्रीतिनिष्पादिनी
भूयो दूरत एव धूतमरुतस्तत्पालनं तन्वती ।
उद्भूतस्य जलान्तरादविरतं तद्दूरतां जग्मुषी
कामाक्षि स्मितमञ्जरी तव कथं कम्बोस्तुलामश्नुते ॥

முக்தாநாம் பரிமோசநம் விதததः தத்ப்ரீதி நிஷ்பாதிநீ
பூயோ தூரத ஏவ தூதமருதஸ்தத் பாலநம் தந்வதீ |
உத்பூதஸ்ய ஜலாந்தராதவிரதம் தத்தூரதாம் ஜக்முஷீ
காமாக்ஷி! ஸ்மிதமஞ்ஜரீ தவ கதம் கம்போः துலாமச்நுதே||(65)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| முக்தாநாம் | முக்தாக்களுக்கு (முக்தர்களுக்கு) |
| பரிமோசநம் | விடுதலையை |
| விததத: | செய்கிறதாயும் |
| பூய: | அடிக்கடி |
| தூரத: ஏவ | தூரத்திலேயே |
| தூதமருத: | தள்ளுகிற காற்றுகளை (தேவதைகளை) யுடையதும் |
| ஜலாந்தராத் | ஜலத்தின்(ஜட)மத்தியிலிருந்து |
| உத்பூதஸ்ய | உண்டானதாயுமிருக்கிற |
| கம்போ: | சங்குக்கு |
| தத்ப்ரீதி நிஷ்பாதிநீ | அந்த முக்தர்களுக்கு ப்ரீதியைக்கொடுப்பதும் |
| தத்பாலநம்-தந்வதீ | அந்த தேவதைகளை ரக்ஷணம் செய்வதாயும் |
| அவிரதம் | எப்போதும |

| | |
|---|---|
| தத்தூரதாம் ஐக்முஷீ | அந்த ஜடர்களுக்கு வெகு தூரத்தில் நிற்பதாயுமுள்ள |
| தவ-ஸ்மித மஞ்ஜரீ | உனது புன்சிரிப்புக்கொத்தானது |
| துலாம் | ஸாம்யத்தை |
| கதம் | எப்படி |
| அச்நுதே | அடையும்? |

குறிப்பு:- முக்தாநாம்-என்பதற்கு, முத்துக்கள் என்றும், மோக்ஷம் அடைந்தவர்கள் என்றும் அர்த்தம். "தூதமருத:" என்பதற்கு. மருத்துக்களை (வாயுவை) அதிக தூரத்தில் தள்ளிவிடுகிறதும், என்று அர்த்தம்கொண்டு, தத்பாலநம் தந்வதீ என்பதற்கு மருத்துக்களின் அதாவது தேவர்களின் பரிபாலனத்தைச் செய்வதாயும் என்றும் பொருள்கொள்ளல் வேண்டும். ஜலாந்தராத் - என்பதற்கு ஜலத்தின் நடுவிலிருந்து என்றும், लडयोरभेदः என்றபடி ஜடர்களின் நடுவிலிருந்து என்றும் பொருள்.

காமாக்ஷி! முத்துக்களை விலக்குவது, காற்றுக்களைவெகு தூரத்தில் தள்ளுகின்றதும், ஜலத்தின் நடுவில் உண்டாகிறதுமான சங்கோடு, முத்துக்களுக்கு இன்பமூட்டுவதும், (மோக்ஷம் பெற்றவற்கு இன்பமளிப்பதும்) காற்றுக்களை (தேவதைகளை)க் காப்பாற்றுவதும் ஜலத்தில் தோன்றியவற்றிற்கு தூரத்தில் நிற்பதும் (அறிவில்லாதவற்கு தூரத்தில் நிற்பதும்) ஆன உனது புன்னகைப் பூக்கொத்து எப்படி ஒப்புள்ளதாகும்?

भूयोदूरत एव धूत मनसः— பூயோதூரத ஏவ தூத மநஸ:— என்ற பாடாந்தரம் சிறந்ததன்று.

श्रीकामाक्षि तव स्मितद्युतिझरीवैदग्ध्यलीलायितं
पश्यन्तोऽपि निरन्तरं सुविमलं मान्या जगन्मण्डले ।
लोकं हासयितुं किमर्थमनिशं प्राकाश्यमातन्वते
मन्दाक्षं विरहय्य वस्तुविभवो मन्दारचन्द्रादयः ॥ ६६ ॥

காமாக்ஷி தவ-ஸ்மித-த்யுதி-ஜ்ஜரீ-வைதக்த்ய-லீலாயிதம்
யந்தோஜபி நிரந்தரம்-ஸுவிமலம் மாந்யா ஜகந்மண்டலே ।
லோகம் ஹாஸயிதும் கிமர்த்தமநிசம் ப்ராகாச்ய மாதந்வதே
ந்தாக்ஷம் விரஹய்ய வஸ்துவிபவோ மந்தார-சந்த்ராதய:॥(66

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ஸுவிமலம் | மிக பரிசுத்தமான |
| தவ | உன்னுடைய |
| ஸ்மித-த்யுதி-ஜ்ஜரீ-வைதக்த்யலீலாயிதம் | உனது புன்சிரிப்புக் காந்திப் பெருக்கின் விலாஸத்தை |
| நிரந்தரம் | எப்போதும் |
| பச்யந்தோஜபி | பார்க்கிறவர்களாயிருந்தும் |
| ஜகந்மண்டலே | பூலோகத்தில் |
| மாந்யா: | கௌரவப்பட்டவைகளும் |
| வஸ்து விபவ: | உயர்ந்தவஸ்துக்களாயுமிருக்கிற |
| மந்தார-சந்த்ராதய: | மந்தாரம் சந்திரன் முதலியவைகள் |
| லோகம் | உலகத்தை |
| ஹாஸயிதும் | சிரிக்கச்செய்வதற்கென்று |
| கிமர்த்தம் | எதற்காக |
| மந்தாக்ஷம் விரஹய்ய | வெட்கத்தைவிட்டு |
| அநிசம் | எப்போதும் |
| ப்ராகாச்யம் ஆதந்வதே | வெளியில் கிளம்புகிறார்கள். |

ஸ்ரீ காமாக்ஷி! உலகின் கண் உயர்ந்த வஸ்துக்கள் என்று கௌரவிக்கப்பட்ட மந்தாரைமலர் சந்திரன் முதலியோர் இடைவிடாது உனது மந்தஹாஸக்கிரணப்பெருக்கின் அழகிய சிறந்த செயல்களைக் கண்ணுற்றுக் கொண்டிருப்பினும் மிகவும் வெட்கத்தைத் துறந்து உலகத்தைச் சிரிக்கச்செய்ய எப்பொழுதும் எதற்காக வெளிப்படவேண்டும்?

सुविमलं मन्या:— ஸுவிமலம் மந்யா:—என்ற பாடத்தில் அழுக்கற்றுத் துலங்குவதாய்த் தன்னை நினைத்துக்கொண்டிருக்கிற மந்தார சந்த்ராதய:—என்பது பொருள். सुविमलं मान्यं— ஸுவிமலம் மாந்யம்—என்ற பாடத்தில் அழுக்கற்றதும், கொண்டாடத் தக்கதுமான ஸ்மித+லீலாயிதம்—என்று பொருள்.

विरहय्य मङ्गलतरम् விரஹய்ய மங்களதரம் — என்ற பாடத்தில் தங்களுக்கு மங்களகரமான வெட்கத்தை விட்டு — என்பது பொருள். இந்தப் பாடமே சிறந்தது என பெரியோரின் கொள்கை.

क्षीराब्धेरपि शैलराजतनये त्वन्मन्दहासस्य च
श्रीकामाक्षि वलक्षिमोदयनिधेः किंचिद्भिदां ब्रूमहे ।
एकस्मै पुरुषाय देवि स ददौ लक्ष्मीं कदाचित्पुरा
सर्वेभ्योऽपि ददात्यसौ तु सततं लक्ष्मीं च वागीश्वरीम् ॥६७॥

க்ஷீராப்தேரபி சைலராஜ தநயே! த்வந்-மந்தஹாஸஸ்ய ச
ஸ்ரீ காமாக்ஷி! வலக்ஷிமோதயநிதே: கிஞ்சித் பிதாம் ப்ரூமஹே |
ஏகஸ்மை புருஷாய தேவி! ஸ ததௌ லக்ஷ்மீம் கதாசித் புரா
ஸர்வேப்யோ஽பி ததாத்யஸௌ து ஸததம் லக்ஷ்மீம் ச
[வாகீச்வரீம் || (67)

| | |
|---|---|
| சைலராஜதநயே! | பர்வதராஜ குமாரியான |
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| வலக்ஷிம-உதய-நிதே: | வெளுப்புக்கு இருப்பிடமான |
| க்ஷீராப்தே: அபி | பால் கடலுக்கும் |
| த்வத் மந்தஹாஸஸ்ய ச | உன் புன்சிரிப்புக்கு முள்ள |
| பிதாம் | பேதத்தை |
| கிஞ்சித் | கொஞ்சம் |
| ப்ரூமஹே | சொல்லுகிறோம் |
| ஸ: | அந்தப் பாற்கடலானது |
| புரா | முன்பு |
| கதாசித் | ஒரு ஸமயம் |
| ஏகஸ்மை புருஷாய | ஒரு புருஷனுக்கு |
| லக்ஷ்மீம் ததௌ | லக்ஷ்மியைக் கொடுத்தது |
| அஸௌ து | இந்தப் புன்சிரிப்போவென்றால் |
| ஸததம் | எப்பொழுதும் |
| ஸர்வேப்ய: அபி | எல்லோருக்கும் |
| லக்ஷ்மீம் | ஐச்வர்யத்தையும் |
| வாகீச்வரீம் ச | வித்யையையும் |
| ததாதி | கொடுக்கிறது. |

மலையாசன் மகளாகிய தேவி காமாக்ஷி! வெண்மையின் தோற்றத்திற்கிருப்பிடமாகிய பாற்கடலுக்கும் உனது புன் முறுவலுக்கும் சிறிது வேற்றுமையைக் கூறுகிறோம். அப்பாற் கடல் முன்பு ஒரு புருஷனுக்கு (விஷ்ணுவுக்கு) லக்ஷ்மியை (பூமகளை) அளித்தது. இப்புன்னகையோவெனில் எல்லோருக்கும் எப்பொழுதும் லக்ஷ்மியையும் (ஸம்பத்தையும்) ஸரஸ்வதியையும் (உயர்ந்த வாக்கையும்) கொடுத்தருளுகிறது.

श्रीकाञ्चीपुररत्नदीपकलिके तान्येव विश्वान्तरे
चाकोराणि चराचरेश्वरि परं धन्यानि मन्यामहे ।
कम्पातीरकुटुम्बचङ्क्रमकलाचुञ्चूनि कामाक्षि ते
नित्यं यानि मृदु स्मितेन्दुमहसामास्वादमातन्वते ॥ ६८ ॥

ஸ்ரீ காஞ்சீபுர-ரத்ந-தீபகலிகே! தாந்யேவ விச்வாந்தரே
சாகோராணி சராசரேச்வரி! பரம் தந்யாநி மந்யாமஹே ।
கம்பாதீர-குடும்ப-சங்க்ரம-கலா-சுஞ்சூநி காமாக்ஷி! தே
நித்யம் யாநி ம்ருது-ஸ்மிதேந்து-மஹஸாமா
ஸ்வாதமாதந்வதே ॥ (68)

| | |
|---|---|
| ஸ்ரீ காஞ்சீபுர-ரத்நதீப கலிகே! | காஞ்சீபட்டணத்தில் ரத்நதீபச் சுடரும் |
| சர-அசர-ஈச்வரி! | ஸ்தாவரஜங்கமமயமான ஜகத்திற்கு ஈச்வரியுமான |
| ஸ்ரீ காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| யாநி | எந்த சகோரபக்ஷிக் கூட்டங்கள் |
| கம்பா-தீர-குடும்ப-சங்க்ரம-கலா-சுஞ்சூநி | கம்பைக் கரையில் குடும்பத்துடன் நடமாடுவதில் ஸமர்த்தங்களாய் |
| தே | உனது |
| ம்ருது-ஸ்மித-இந்து-மஹஸாம் | மிருதுவான புன்சிரிப்பாகிற சந்திரகிரணங்களை |
| ஆஸ்வாதம்-ஆதந்வதே | பருகிக்கொண்டிருக்கின்றனவோ |
| தாநி | அந்த |
| சாகோராணி-ஏவ | சகோரபக்ஷிக்கூட்டங்களே |
| விச்வாந்தரே | இந்த உலகில் |

பரம் தந்யானி } மிகவும் அதிர்ஷ்டமுள்ளவை
மந்யாமஹே } வைகளென்று நினைக்கிறோம்.

குறிப்பு:—சாகோராணி என்று ஸ்ரீ காமாக்ஷியின் பக்கத்தில் எப்போதும் இருந்துகொண்டு தேவியின் மந்தஸ்மிதத்தினுடைய அம்ருத கிரணங்களால் ஸதா நனைக்கப்பெற்று அழியாப் பரமானந்தத்தில் இருக்கும் அம்பிகையின் பக்தர்களைக் குறிப்பிட்டிருத்தல் காண்க.

ஸ்ரீ காஞ்சீபுர மணிவிளக்குச் சுடரே, ஸகல ஜகதீச்வரியாகிய காமாக்ஷியே! கம்பா நதிக்கரையில் குதூகலத்துடன் நடமாடும் திறனுடைய எந்தச் சகோரப் பக்ஷிகள் உனது புன்சிரிப்பென்னும் சந்திரனுடைய ஒளிகளைச் சுவைக்கின்றனவோ, அந்தச் சகோரப் பறவைகளின் கூட்டங்களையே மிகவும் பாக்யம்பெற்றவையெனக் கருதுகிறோம்.

श्रीकाञ्चीपुर रत्नदीप कलिके तान्येव मेनात्मजे चाकोराणि कुलानि देवि सुतरां धन्यानि मन्यामहे । .... चुञ्चूनि चञ्चूपुटैः नित्यम्——

ஸ்ரீகாஞ்சீபுர ரத்நதீப கலிகே தான்யேவ மேனாத்மஜே சாகோராணி குலாநி தேவி ஸுதராம் தந்யாநி மந்யாமஹே | ....சுஞ்சூநி சஞ்சூபுடை: நித்யம்—

என்று பாடாந்தரம். அப்போது மேனாத்மஜே - மேனையின் புதல்வியாகிய, தேவி - தேவியே! ....சஞ்சூபுடை: - அலகுகளால், அருந்துகின்றனவோ. தாநி - அந்த, சாகோராணி குலாநி ஏவ - சகோரபக்ஷிகளின் கூட்டங்களே, ஸுதராம் தந்யாநி - மிகவும் புண்யம் செய்தவையென்று, எண்ணுகிறோம்—என்பது பொருள்.

शैत्यप्रक्रममाश्रितोऽपि नमतां जाड्यप्रथां धूनयन्
रागव्यञ्जनपेशलोऽपि गिरिजे वैमल्यमुल्लासयन् ।
लीलालापपुरःसरोऽपि सततं वाचंयमान्प्रीणयन्
कामाक्षि स्मितरोचिषां तव समुल्लासः कथं वर्ण्यते ॥ ६९ ॥

சைத்ய-ப்ரக்ரம-மாச்ரிதோபி நமதாம் ஜாட்ய-ப்ரதாம் தூநயந்
ராக-வ்யஞ்ஜந-பேசலோபி கிரிஜே! வைமல்ய முல்லாஸயந் |
லீலாலாப-புரஸ்ஸரோபி ஸததம் வாசம்யமாந் ப்ரீணயந்
காமாக்ஷி! ஸ்மிதரோசிஷாம் தவ ஸமுல்லாஸ: கதம்
வர்ண்யதே || (69)

| | |
|---|---|
| கிரிஜே! | பர்வத புத்ரியான |
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| சைத்ய-ப்ரக்ரமம்-ஆச்ரித: அபி | மிகுந்த குளிர்ச்சியை அடைந்ததாயிருப்பினும் |
| நமதாம் | வணங்கினவர்களின் |
| ஜாட்யப்ரதாம் | ஜாட்யத்தின் பெயரை |
| தூநயந் | நிவர்த்தி செய்கிறதாயும் |
| ராக-வ்யஞ்ஜந-பேசல: அபி | அநுராகமென்கிற சிவப்பு நிறக் கலப்பினால் மநோஹரமாயிருப்பினும் |
| வைமல்யம் உல்லாஸயந் | வெளுப்பு நிறத்தை (பரிசுத்தியை)உண்டாக்குகிறதாயும் |
| லீலா-ஆலாப-புரஸ்ஸர:-அபி | விளையாட்டு பேச்சுடன் கூடியிருந்தபோதிலும் |
| ஸததம் | எப்போதும் |
| வாசம்யமாந் | மௌனிகளை |
| ப்ரீணயந் | ஸந்தோஷப்படுத்துகிறதாயுமிருக்கிற |
| தவ | உன்னுடைய |
| ஸ்மித-ரோசிஷாம் | புன்சிரிப்பின் காந்தியினுடைய |
| ஸமுல்லாஸ: | விலாஸமானது |
| கதம் | எப்படி |
| வர்ண்யதே | வர்ணிக்கப்படும். |

பாதாரவிந்த சதகத்தில் "கதம் வாசாலோபி" என்ற சுலோகத்தைக் கவனிக்க.

காமாக்ஷி! குளிர்ந்த நிலையை அடைந்திருப்பினும் வணங்குபவர்களுக்குக் குளிர்ச்சியென்ற பேச்சுக்கூட இல்லாமல் செய்துகொண்டும் (அஞ்ஞானத்தைப் போக்கிக்கொண்டும்) சிவப்பைத் தெரிவிப்பதில் ஸமர்த்தமாயினும், (அநுராகத் தெரிவிப்பதாயினும்) வெளுப்பு நிறத்தை வளர்த்துக்கொண்டி

ருப்பதும், விளையாட்டுப் பேச்சுக்களை (அழகிய பேச்சை) முன்னிட்டுக்கொண்டிருப்பினும் வாக்கெனும் இந்திரியத்தை யடக்கிய முனிவர்களைத் திருப்திசெய்துகொண்டிருக்கும் உனது மந்தஹாஸ கிரணங்களின் அழகிய மலர்ச்சி எவ்விதம் வர்ணிக்கப்படும்.

नैर्मल्यं परमं गतोऽपि गिरिशं रागाकुलं चारयन्–

நைர்மல்யம் பரமம் கதோऽபி கிரிசம் ராகாகுலம் சாரயந் என்று இரண்டாமடிக்குப் பாடாந்தரம். அப்போது பரமம் நைர்மல்யம் - மிகுந்த வெண்மையை, கத: அபி - அடைந்திருப்பினும், கிரிசம் - பரமசிவனை, ராகாகுலம் - சிவப்பு நிறைந்தவராக (ஆசை நிறைந்தவராக), சாரயந் - செய்கின்றதும் என்று பொருள்.

श्रोणीचञ्चलमेखलामुखरितं लीलागतं मन्थरं
भ्रूवल्लीचलनं कटाक्षवलनं मन्दाक्षवीक्षाचणम् ।
यद्वैदग्ध्यमुखेन मन्मथरिपुं संमोहयन्त्यञ्जसा
श्रीकामाक्षि तव स्मिताय सततं तस्मै नमस्कुर्महे ॥ ७० ॥

ச்ரோணீ-சஞ்சல-மேகலா-முகரிதம் லீலாகதம் மந்தரம்
ப்ருவல்லீ-சலனம் கடாக்ஷ-வலநம் மந்தாக்ஷ-வீக்ஷாசணம் |
யத்வைதக்த்ய-முகேந மந்மத-ரிபும் ஸம்மோஹயந்த்யஞ்ஜஸா
ஸ்ரீகாமாக்ஷி! தவ ஸ்மிதாய ஸததம் தஸ்மை நமஸ்குர்மஹே ||
(70)

| | |
|---|---|
| ஸ்ரீ காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ச்ரோணீ-சஞ்சல-மேகலா-முகரிதம் | இடையில் ஆடும் ஒட்டியாணத்தின் சப்தத்தோடு கூடிய |
| லீலாகதம் | அழகான நடையும் |
| மந்தரம் | மனோக்ஞமான |
| ப்ருவல்லீ-சலநம் | புருவக்கொடியின் அசைவும் |
| மந்தாக்ஷ-வீக்ஷாசணம் | வெட்கத்தோடு கூடிய பார்வையில் தேர்ச்சிபெற்ற |
| கடாக்ஷ-வலநம் | கடைக்கண் சுற்றலும் |
| யத்-வைதக்த்ய-முகேந | எந்தப் புன்சிரிப்பின் சாமர்த்தியமடியாக |
| மந்மதரிபும் | மன்மத சத்ருவான பரமசிவனை |

ஞ்ஞனா-ஸம்மோஹயந்தி } எளிதில் மோஹிக்கும்படி செய்கிறதோ
நம்மை — அப்படிப்பட்ட
தவ-ஸ்மிதாய — உனது புன்சிரிப்பின் பொருட்டு
நமஸ்குர்மஹே — நமஸ்கரிக்கின்றோம்.

மேலே 57–58வது சுலோகங்களில் குறிப்பிட்ட நயம் இங்கே "மந்மதரிபும் ஸம்மோஹயந்தி" என்பதிலும் உன்னத்தக்கது.

ஸ்ரீ காமாக்ஷி! இடையில் அசையும் ஒட்டியாண ஒலியுடன் கூடிய மெதுவான அழகிய நடையும், புருவக்கொடியின் அசைவும், நாணத்துடன் பார்ப்பதில் தேர்ச்சிபெற்ற கடைக்கண் வீச்சும் எந்தப் புன்னகைத்திறமை மூலமாக மன்மத விரோதியாகிய பரமசிவனை எளிதில் மயக்குகின்றனவோ; அந்த உனது புன்சிரிப்பிற்கு எப்பொழுதும் நமஸ்காரம் செய்கின்றோம்.

"श्रोणीचञ्चलमेखलामुखरितम्" என்பதை லீலாகதத்துக்கு விசேஷணமாக ஆக்காமல், இடையில் ஆடும் ஒட்டியாணத்தின் ஒலியும், அழகிய நடையும் என்றும் சொல்லலாம்.

श्रीकामाक्षि मनोज्ञमन्दहसितज्योतिष्प्ररोहे तव
स्फीतश्वेतिमसार्वभौमसरणिप्रागल्भ्यमभ्येयुषि ।
चन्द्रोऽयं युवराजतां कलयते चेटीधुरं चन्द्रिका
गङ्गा सा च सुधाझरी सहचरीसाधर्म्यमालम्बते ॥ ७१ ॥

ஸ்ரீகாமாக்ஷி! மநோக்ஞ-மந்தஹஸித-ஜ்யோதிஷ் ப்ரரோஹே தவ
ஸ்பீத-ச்வேதிம-ஸார்வபௌம-ஸரணி-ப்ராகல்ப்ய மப்யேயுஷி!
சந்த்ரோऽயம் யுவராஜதாம் கலயதே சேடீதுரம் சந்த்ரிகா
கங்கா ஸா ச ஸுதாஜ்ஜரீ ஸஹசரீ-ஸாதர்ம்ய மாலம்பதே ॥
(71)

ஸ்ரீ காமாக்ஷி! — ஸ்ரீ காமாக்ஷியே!
தவ — உனது
மநோக்ஞ-மந்தஹஸித-ஜ்யோதிஷ்-ப்ரரோஹே } அழகிய மந்தஹாஸ காந்தியின் கொழுந்தானது

ஸ்மித-ச்வேதிம-ஸார்வபௌம-ஸரணி-ப்ராகல்ப்யம் } கொழுந்து செழித்த வெண்மையின் மேன்மைகொண்ட அரசாட்சியின் காம்பீர்யத்தை
அப்யேயுஷி — அடைந்திருக்கும்போது
அயம் சந்த்ர: — இந்த சந்திரன்
யுவராஜதாம் } இளவரசனாயிருக்கும் தன்மையை
கலயதே — அடைகிறான்.
சந்த்ரிகா — நிலாவானது
சேடதாம் } வேலைக்காரியின் நிலைமையை அடைகிறது.
ஸுதாஜ்ஜரீ — அம்ருத ப்ரவாஹமுள்ள
ஸா-கங்கா ச — அந்த கங்கையும்
ஸஹசரீ-ஸாதர்ம்யம் } பத்தினியாயிருக்கும் ஒற்றுமையை
ஆலம்பதே — அடைகிறது.

ஸ்ரீ காமாக்ஷி! மனதைக்கவரும் உனது மந்தஹாஸம் என்னும் சோதிக்கொழுந்து செழித்த வெண்மையின் சிறந்த ஆட்சித்திறத்தையடைகையில் இந்தச் சந்திரன் இளவரசப் பட்டத்தை அடைகிறான். நிலவு வேலைக்காரியின் பொறுப்பையும், அமுதப்பெருக்குள்ள அந்த கங்கையும் உயிர்த்துணைவியின் முறையையும் கடைப்பிடிக்கின்றது (அடைகிறது).

"शुद्धा सा च सुधाझरी" "சுத்தா ஸா ச ஸுதாஜ்ஜரீ" என்றும் பாடம். மாசற்ற அந்த அமுதப்பெருக்கும் என்பது பொருள். கங்கையும், அந்த அமுதப்பெருக்கும் ஸஹசரிகளான உயிர்த்துணைவிகளின் முறையைக் கடைப்பிடிக்கின்றன என்றும் பொருள் சொல்லலாம்.

ज्योत्स्ना किं तनुते फलं तनुमतामौष्ण्यप्रशान्तिं विना
त्वन्मन्दस्मितरोचिषा तनुमतां कामाक्षि रोचिष्णुना ।
सन्तापोऽपि निवार्यते नववचः(यः)प्राचुर्यमङ्कूर्यते
सौन्दर्यं परिपूर्यते जगति सा कीर्तिश्च सञ्चार्यते ॥ ७२ ॥

ஜ்யோத்ஸ்நா கிம் தநுதே பலம் தநுமதாம் ஔஷ்ண்ய-
[ப்ரசாந்திம் விநா
த்வந்-மந்தஸ்மித-ரோசிஷா தநுமதாம் காமாக்ஷி
[ரோசிஷ்ணுநா |
ஸந்தாபோ(அ)பி நிவார்யதே நவ-வச:(ய:) ப்ராசுர்ய மங்கூர்யதே
ஸௌந்தர்யம் பரிபூர்யதே ஜகதி ஸா கீர்த்திச்ச
[ஸஞ்சார்யதே || (72)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ஜ்யோத்ஸ்நா | நிலவானது |
| தநுமதாம் | மனிதர்களுக்கு |
| ஔஷ்ண்ய-ப்ரசாந்திம் விநா | உஷ்ணத்தைக் குறைப்பதைத் தவிர |
| கிம் பலம் | வேறு என்ன பலனை |
| தநுதே | செய்கிறது |
| ரோசிஷ்ணுநா | விளங்குகிற |
| த்வந்-மந்தஸ்மித-ரோசிஷா | உனது புன்சிரிப்புக் காந்தியால் |
| தநுமதாம் | பிராணிகளுடைய |
| ஸந்தாப: அபி | ஸந்தாபமும் |
| நிவார்யதே | நிவிருத்திக்கப்படுகிறது. |
| நவ-வச:-ப்ராசுர்யம் | புதிய பேச்சு வன்மையும் |
| அங்கூர்யதே | ஆவிர்ப்பவிக்கப்படுகிறது |
| ஸௌந்தர்யம் | அழகும் |
| பரிபூர்யதே | நிரப்பப்படுகிறது |
| ஸா கீர்த்தி: ச | அந்தக் கீர்த்தியும் |
| ஜகதி | உலகில் |
| ஸஞ்சார்யதே | பரப்பப்படுகிறது. |

காமாக்ஷி! நிலவு உஷ்ணத்தைத் தணிப்பதைத் தவிர்த்து வேறு என்ன பயனைப் பிராணிகளுக்கு அளிக்கின்றது. ஜ்வலிக்கும் உனது புன்சிரிப்பின் ஒளியோவெனில் சரீரம் படைத்த மக்களுடைய தாபத்தைத் தணிக்கின்றது; மனிதர்களுக்கு புதிதுபுதிதான வாக்சாதுர்யத்தை உண்டாக்குகின்றது; ஸௌந்தர்யத்தை நிரப்புகின்றது; உயர்ந்த புகழையும் உலகமெங்கும் பரவும்படி செய்கிறது. ஆதலால் உனது மந்தஹாஸம் நிலவைவிட உயர்ந்தது என்பதில் என்னதடையுண்டு என்பது பொருள்.

நவவய: ப்ராசர்யம் - என்ற பாடத்தில், இளம் வயதின் (யௌவனத்தின்) மேன்மை தளிர்கின்றது என்பது பொருள்.

वैमल्यं कुमुदश्रियां हिमरुचः कान्त्यैव सन्धुक्ष्यते
ज्योत्स्नारोचिरपि प्रदोषसमयं प्राप्यैव सम्पद्यते ।
स्वच्छत्वं नवमौक्तिकस्य परमं संस्कारतो दृश्यते
कामाक्ष्याः स्मितदीधितेर्विशदिमा नैसर्गिको भासते ॥ ७३ ॥

வைமல்யம் குமுதச்ரியாம் ஹிமருச: காந்த்யைவ ஸந்துக்ஷ்யதே
ஜ்யோத்ஸ்நா-ரோசிரபி ப்ரதோஷ-ஸமயம் ப்ராப்யைவ [ஸம்பத்யதே |
ஸ்வச்சத்வம் நவ-மௌக்திகஸ்ய பரமம் ஸம்ஸ்காரதோ [த்ருச்யதே
காமாக்ஷ்யா: ஸ்மித-திதிதே: விசதிமா நைஸர்கிகோ பாஸதே ||
(73)

| | |
|---|---|
| குமுத-ச்ரியாம் | ஆம்பல்களுக்கு |
| வைமல்யம் | வெண்மையானது |
| ஹிமருச: | சந்திரனுடைய |
| காந்த்யா ஏவ | காந்தியாலேயே |
| ஸந்துக்ஷ்யதே | வளர்க்கப்படுகிறது |
| ஜ்யோத்ஸ்நா-ரோசி: அபி | நிலாவின் காந்தியும் |
| ப்ரதோஷஸமயம்-ப்ராப்ய ஏவ | ஸாயங்கால வேளையை அடைந்தே தான் |
| ஸம்பத்யதே | ஏற்படுகிறது |
| நவ-மௌக்திகஸ்ய | புதிய முத்துக்கு |
| பரமம் ஸ்வச்சத்வம் | உயர்ந்த வெண்மையும் |
| ஸம்ஸ்காரத: | பாடம் செய்வதினாலேயே |
| த்ருச்யதே | காணப்படுகிறது |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியின் |
| ஸ்மிததீதிதே: | புன்சிரிப்பினுடைய |
| விசதிமா | வெண்மையானது |
| நைஸர்க்கிக: | ஸ்வபாவத்தில் ஏற்பட்டதாகவே |
| பாஸதே | விளங்குகிறது. |

அல்லி மலர்களின் அழகிய வெண்மை மதியின் ஒளியாலேயே வளர்க்கப்படுகின்றது. நிலவின் ஒளியும் இரவையடைவதால் தான் ஏற்படுகிறது. சீர்மைப்படுத்துவதால்

**புதிய முத்திற்கு மேலான தூய்மை காணப்படுகின்றது. காமாக்ஷியின் புன்னகைக் கிரணங்களுக்கு இயற்கையாகவே வெண்மை விளங்குகின்றது.**

*பாதாரவிந்த சதகத்தில் "தூராநம்" என்ற சுலோகத்தில் "அபராதிநம்" என்பதின் கருத்தையும் இங்கே உன்னுக.*

प्राकाश्यं परमेश्वरप्रणयिनि त्वन्मन्दहासश्रियः
श्रीकामाक्षि मम क्षिणोतु ममतावैचक्षणीमक्षयाम् ।
यद्भीत्येव निलीयते हिमकरो मेघोदरे शुक्तिका-
गर्भे मौक्तिकमण्डली च सरसो मध्ये मृणाली च सा ॥७४॥

ப்ராகாச்யம் பரமேச்வர-ப்ரணயிநி! த்வந்-மந்தஹாஸ-ச்ரிய:
ஸ்ரீ காமாக்ஷி! மம க்ஷிணோது மமதா-வைசக்ஷணீ மக்ஷயாம் |
யத்பீத்யேவ நிலீயதே ஹிமகரோ மேகோதரே சுக்திகா-
கர்ப்பே மௌக்திக-மண்டலீ ச ஸ்ரஸோ மத்யே
[ம்ருணாளீ ச ஸா || (74)

| | |
|---|---|
| *பரமேச்வர-ப்ரணயிநி!* | *பரமசிவன் பத்நியான* |
| *ஸ்ரீ காமாக்ஷி!* | *ஸ்ரீ காமாக்ஷியே!* |
| *த்வத்-மந்தஹாஸ-ச்ரிய:* | *உனது புன்சிரிப்புக் காந்தியின்* |
| *ப்ராகாச்யம்* | *வெண்மையானது* |
| *மம* | *என்னுடைய* |
| *அக்ஷயாம்* | *அழியாமலிருக்கிற* |
| *மமதா-வைசக்ஷணீம்* | *அஹங்காரத்தின் திறனை* |
| *க்ஷிணோது* | *நிவர்த்தி செய்யட்டும்* |
| *யத்பீத்யா ஏவ* | *எந்தப் புன்சிரிப்பின் காந்தியின் வெண்மையினின்று பயத்தால்* |
| *ஹிமகர:* | *சந்திரன்* |
| *மேக-உதரே* | *மேகங்களின் மத்தியிலும்* |
| *மௌக்திக-மண்டலீ* | *முத்துக்களின் கூட்டமானது* |
| *சுக்திகா-கர்ப்பே ச* | *முத்துச்சிப்பிகளின் மத்தியிலும்* |
| *ஸா ம்ருணாளீ* | *அந்தத் தாமரைத்தண்டும்* |
| *ஸரஸ: மத்யே* | *குளத்தின் மத்தியிலும்* |
| *நிலீயதே* | *ஒளிந்து கொள்ளுகிறதோ.* |

பரமசிவனின் காதலியாகிய காமாக்ஷி! எதற்குப் பயந்து சந்திரன் மேகத்தின் நடுவிலும், முத்துக்கூட்டம் சிப்பிகளுக் குள்ளும் புகழ்பெற்ற தாமரைக் கிழங்கு குளத்தின் நடுவேயும் மறைந்து கொள்கிறதோ, அந்த உன்னுடைய மந்தஹாஸ ஒளியின் தோற்றம் அழியாத எனது மமகாரத்தின் திறனை ஒழிக்கவேண்டும்.

हेरम्बे च गुहे च हर्षभरितं वात्सल्यमङ्कुरयत्
मारद्रोहिणि पूरुषे सहभुवं प्रेमाङ्कुरं व्यञ्जयत् ।
आनम्रेषु जनेषु पूर्णकरुणावैदग्ध्यमुत्तालयत्
कामाक्षि स्मितमञ्जसा तव कथंकारं मया कथ्यते ॥ ७५ ॥

ஹேரம்பே ச குஹே ச ஹர்ஷ-பரிதம் வாத்ஸல்ய மங்கூரயத்
மார-த்ரோஹிணி பூருஷே ஸஹ-புவம் ப்ரேமாங்குரம் [வ்யஞ்ஜயத் |
ஆநம்ரேஷு ஜநேஷு பூர்ண-கருணா-வைதக்த்யமுத்தாளயத்
காமாக்ஷி! ஸ்மிதமஞ்ஜஸா-தவ கதம் காரம் மயா கத்யதே||
(75)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ஹேரம்பே ச | விநாயகரிடத்திலும் |
| குஹே ச | ஸுப்ரமண்யரிடத்திலும் |
| ஹர்ஷ பரிதம் | ஸந்தோஷம் நிரம்பிய |
| வாத்ஸல்யம் | அன்பை |
| அங்கூரயத் | வளர்த்துக் கொண்டும் |
| மார-த்ரோஹிணி | மன்மத சத்ருவான |
| பூருஷே | பரம புருஷனை பரமசிவனிடம் |
| ஸஹபுவம் | இயற்கையிலுண்டான |
| ப்ரேம-அங்குரம் | பிரீதியின் அங்குரத்தை |
| வ்யஞ்ஜயத் | வெளிப்படுத்திக்கொண்டும் |
| ஆநம்ரேஷு | நமஸ்கரிக்கிற |
| ஜநேஷு | ஜனங்களிடம் |
| பூர்ண-கருணா-வைதக்த்யம் | பரிபூர்ணமான கருணையின் மஹிமையை |
| உத்தாலயத் | அதிகப்படுத்திக்கொண்டிருக்கிற |
| தவ | உன்னுடைய |
| ஸ்மிதம் | புன்சிரிப்பானது |

| | |
|---|---|
| கதம்காரம் | எவ்விதமாக |
| மயா | என்னால் |
| அஞ்ஜஸா | சீக்கிரம் |
| கத்யதே | வர்ணிக்க முடியும். |

காமாக்ஷி! கணபதியிடமும் கந்தனிடத்திலும் ஆனந்தம் நிறைந்த அன்பை வளர்க்கின்றதும், மன்மதனை வென்ற சிறந்த புருஷனை பரமசிவனிடம் இயற்கையான அன்பின் அங்குரத்தை வெளிப்படுத்துகின்றதும், தன்னை வணங்கிய ஜனங்களிடம் குன்றாத கருணைத்திறனைத் கொந்தளிக்கச் செய்கின்றதுமான உனது புன்னகை எவ்விதம் தான் என்னால் வர்ணிக்க இயலும்.

**स्मितमञ्जिमा** ஸ்மிதமஞ்ஜிமா-என்ற சிறந்த பாடாந்தரம். புன்சிரிப்பின் அழகு என்ற பொருள். இப்பாடத்தில் **अङ्कुरयन्, व्यञ्जयन्, उत्तालयन्,** அங்கூரயந், வ்யஞ்சயந், உத்தாளயந்—என்று பாடங்கொள்ளவேண்டும். "**स्मितमञ्जरी**" "ஸ்மித மஞ்ஜரீ" என்ற பாடம் சிறந்ததன்று.

संक्रुद्धद्विजराजकोऽप्यविरतं कुर्वन्द्विजैः सङ्गमं
वाणीपद्धतिदूरगो(को)ऽपि सततं तत्साहचर्यं वहन्।
अश्रान्तं पशुदुर्लभोऽपि कलयन्पत्यौ पशूनां रतिं
श्रीकामाक्षि तव स्मितामृतरसस्यन्दो मयि स्यन्दताम् ॥७६॥

ஸம்க்ருத்த-த்விஜ-ராஜகோzபி அவிரதம் குர்வந்
த்விஜை; ஸங்கமம்
வாணீ-பத்ததி-தூரகோz பி-ஸததம் தத்ஸாஹசர்யம் வஹந் |
அச்ராந்தம் பசு-துர்லபோzபி கலயந் பத்யௌ பசூநாம் ரதிம்
ஸ்ரீ காமாக்ஷி! தவ ஸ்மிதாம்ருத-ரஸ-ஸ்யந்தோ மயி
ஸ்யந்ததாம் || (76)

| | |
|---|---|
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| ஸம்க்ருத்த-த்விஜ-ராஜ-க: அபி | த்விஜராஜனோடு (சந்திரனோடு) கோபமுள்ளதாயிருப்பினும் |
| அவிரதம் | எப்போதும் |
| த்விஜை: | த்விஜர்களோடு (பற்களோடு) |
| ஸங்கமம் | சேர்க்கையை |
| குர்வந் | செய்கிறதாயும் |

| | |
|---|---|
| வாணீ பத்ததி தூரக: அபி | வாக்கின் வழிக்குத் தூரத்திலிருந்த போதிலும் |
| ஸததம் | எப்போதும் |
| தத்ஸாஹசர்யம் | அந்த வாணியின் அதாவது ஸரஸ்வதியின் ஸஹவாஸத்தை |
| வஹந் | வஹிப்பதாயும் |
| அச்ராந்தம் | எப்போதும் |
| பசுதுர்லப: அபி | பசுக்களுக்கு (அக்ஞானிக்கு) துர்லபமாயிருந்தபோதிலும் |
| பசூநாம் பத்யௌ | பசுபதியான பரமசிவனிடத்தில் |
| ரதிம் கலயந் | ப்ரீதியைச்செய்வதாயுமிருக்கிற |
| தவ | உன்னுடைய |
| ஸ்மித-அம்ருத-ரஸ-ஸ்யந்த: | புன்சிரிப்பாகிற அம்ருதத்தின் ரஸப்பெருக்கானது |
| மயி | என்பேரில் |
| ஸ்யந்ததாம் | வருஷிக்கட்டும். |

ஸ்ரீகாமாக்ஷி, த்வஜராஜனிடம் (சந்திரனிடம்) சினங்கொண்டிருப்பினும், த்விஜர்களுடன் (பற்களுடன்) சேர்ந்திருக்கின்றதும், வாணியின் வழிக்கு அப்பாலிருந்தாலும் (வார்த்தைகளால் குறிப்பிடமுடியாவிடினும்) வாணியோடு சேர்ந்து வாஸம் செய்கின்றதும் (வார்த்தையோடு முகத்தில் வாஸம் செய்கின்றதும்) பசுக்களுக்கு அடையமுடியாவிடினும் (அறிவிலிகளால் அடையமுடியாவிடினும்) பசுபதியிடம் (பரமேச்வரனிடம்) ஓயாது அன்பைச் செலுத்துகின்றதுமான உனது புன்னகையெனுமமுதப்பெருக்கு என்மீது பெருகவேண்டும்.

பிராம்மணராஜனிடம் சினங்கொண்டிருப்பது பிராம்மணர்களோடு ஸர்வதா சேர்ந்திருக்கிறது என்று விரோதம். த்விஜம் பற்கள், த்விஜராஜன் — நக்ஷத்திரங்களுக்கு அரசன் சந்திரன். அவனைவிட மிகுந்த வெண்மையுடையது என்று ஸமாதாநம்,

श्रीकामाक्षि महेश्वरे निरुपमप्रेमाङ्कुरप्रक्रमं
नित्यं यः प्रकटीकरोति सहजामुन्निद्रयन्माधुरीम् ।
तत्तादृक्तव मन्दहाससुष(महि)मा मातः कथं मानितां
तन्मूर्ध्ना सुरनिम्नगां च कलिकामिन्दोश्च तां निन्दति ॥७७॥

**ஸ்ரீ காமாக்ஷி! மஹேச்வரே நிருபம-ப்ரேமாங்குர-ப்ரக்ரமம்**
**நித்யம் ய: ப்ரகடீகரோதி ஸஹஜா முந்நித்ரயந் மாதுரீம் ।**
**தத்தாத்ருக் தவ மந்தஹாஸ (மஹிமா) ஸுஷமா மாத:**
**கதம் மாநிதாம்**
**தந்மூர்த்நா ஸுர-நிம்நகாம் ச கலிகா மிந்தோச்ச தாம்**
**நிந்ததி ॥ (77)**

| | |
|---|---|
| *மாத:* | *தாயாரான* |
| *ஸ்ரீ காமாக்ஷி!* | *ஸ்ரீ காமாக்ஷியே!* |
| *ஸஹஜாம்* | *ஸ்வபாவத்திலுள்ள* |
| *மாதுரீம்* | *இனிப்பை* |
| *உந்நித்ரயந்* | *வெளிப்படுத்துகிற* |
| *ய:* | *யாதொரு மந்தஹாஸமானது* |
| *நித்யம்* | *எப்போதும்* |
| *மஹேச்வரே* | *மஹேச்வரனிடத்தில்* |
| *நிருபம-ப்ரேம-அங்குர-ப்ரக்ரமம்* | *நிகரற்ற அன்பின் அங்குரத்தின வளர்ச்சியை* |
| *ப்ரகடீகரோதி* | *வெளிப்படுத்துகிறதோ* |
| *தத்தாத்ருக்* | *அப்பேர்ப்பட்ட* |
| *தவ* | *உனது* |
| *மந்தஹாஸ-ஸுஷமா* | *புன்சிரிப்பின் காந்தியானது* |
| *தத்-மூர்த்நா* | *அந்த பரமசிவனின் சிரஸ்ஸால்* |
| *மாநிதாம்* | *வெகுமானிக்கப்பட்ட* |
| *ஸுர-நிம்நகாம் ச* | *தேவநதியான கங்கையையும்* |
| *இந்தோ:* | *சந்திரனுடைய* |
| *தாம் கலிகாம் ச* | *அந்தக் கலையையும்* |
| *கதம்-நிந்ததி* | *ஏன் நிந்திக்கிறது.* |

*தாயே ஸ்ரீகாமாக்ஷி! எது இயற்கையான இனிமையைப் புலப்படுத்திக்கொண்டு மஹேச்வரனிடத்தில் ஒப்பற்ற அன்பின் முளையின் வளர்ச்சியைத் தினமும் வெளிப்படுத்துகின்றதோ; அத்தகைய உன் புன்சிரிப்பின் காந்தி அந்தப் பரமசிவனால் தலையால் கௌரவிக்கப்பட்ட தேவகங்கையையும் அந்தச் சந்திரனது கலையையும் ஏன் இகழுகின்றது?*

**मन्दहास महिमा** *மந்தஹாஸ மஹிமா—என்ற பாடத்தில் மந்தஹாஸத்தின் மஹிமையென்பது பொருள்.*

ये माधुर्यविहारमण्डपभुवो ये शैत्यमुद्राकरा
ये वैशद्यदशाविशेषसुभगास्ते मन्दहासाङ्कुराः ।
कामाक्ष्याः सहजं गुणत्रयमिदं पर्यायतः कुर्वतां
वाणीगुम्भनडम्बरे च हृदये कीर्तिप्ररोहे च मे ॥ ७८ ॥

யே மாதுர்ய-விஹார-மண்டப-புவோ யே சைத்ய முத்ரா
யே வைசத்ய-தசா-விசேஷ-ஸுபகாஸ்தே [கரா:
மந்தஹாஸாங்குரா: |
காமாக்ஷ்யா: ஸஹஜம் குணத்ரயமிதம் பர்யாயத: குர்வதாம்
வாணீ-கும்பந-டம்பரே ச ஹ்ருதயே கீர்த்தி-
ப்ரரோஹே ச மே || (78)

| | |
|---|---|
| யே | எந்த புன்சிரிப்புக்கள் |
| மாதுர்ய-விஹார-மண்டப-புவ: | மாதுர்யத்தின் விளையாடும் மண்டப ஸ்தானங்களோ |
| யே | எவைகள் |
| சைத்ய-முத்ராகரா: | குளிர்மையின் முத்ரைக்கு இருப்பிடங்களோ |
| யே | எந்த புன்சிரிப்புக்கள் |
| வைசத்ய-தசா-விசேஷ-ஸுபகா: | நிர்மலமாயிருப்பதாகிய நிலைமையால் மிக மனோக்ஞங்களாயிருக்கின்றனவோ |
| தே | அந்த |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| மந்தஹாஸ-அங்குரா: | புன்சிரிப்பின் அங்குரங்கள் |
| ஸஹஜம் | ஸ்வபாவத்திலேற்பட்ட |
| இதம் குண-த்ரயம் | இனிமை, குளிமை, பரிசுத்தி என்ற இந்த மூன்று குணத்தையும் |
| பர்யாயத: | வரிசையாக |
| மே | எனது |
| வாணீ-கும்பந-டம்பரே ச | வாக்குக்களைத் தொடுத்து அமைக்க |
| ஹ்ருதயே ச | மனதிலும் |
| கீர்த்தி-ப்ரரோஹே ச | யசஸ்ஸின் அபிவிருத்தியிலும் |
| குர்வதாம் | ஏற்படும்படி செய்யட்டும். |

னவை இனிமையின் விளையாட்டு மண்டபங்களோ, மாருத குளிர்ச்சிக்கு இருப்பிடங்களோ, வெண்மை நிலையால் அதிக அழகுபெற்றவைகளோ, அந்தக் காமாக்ஷியின் மந்தஹாஸாங்குரங்கள் தமக்கு இயற்கையிலேற்பட்ட இனிமை, தண்மை, வெண்மை என்ற இம் மூன்று குணங்களையும் முறையே எனது கவிதையிலும் (வார்த்தைகளைத் தொடுத்து அமைப்பதிலும்), உள்ளத்திலும், புகழின் வளர்ச்சியிலும் இருக்கச் செய்யவேண்டும்.

"ये शैत्य रत्नाकराः" "யே சைத்ய ரத்நாகராः" என்ற பாடத்தில், குளிர்மைக்கு ஸமுத்திரமாயிருக்கின்றனவோ-என்பது பொருள்.

कामाक्ष्या मृदुलस्मितांशुनिकरा (द)दाक्षान्तके वीक्षणे
मन्दाक्षग्रहिला हिमद्युतिमयूखाक्षेपदीक्षाङ्कुराः ।
दाक्ष्यं पक्ष्मलयन्तु माक्षिकगुडद्राक्षाभवं (समं) वाक्षु मे
सूक्ष्मं मोक्षपथं निरीक्षितुमपि प्रक्षालयेयुर्मनः ॥ ७९ ॥

காமாக்ஷ்யா ம்ருதுள-ஸ்மிதாம்சு-நிகரா: தா(த)க்ஷாந்தகே வீக்ஷணே
மந்தாக்ஷ-க்ரஹிலா ஹிமத்யுதி-மயூகாக்ஷேப-தீக்ஷாங்குரா:।
தாக்ஷ்யம் பக்ஷ்மளயந்து மாக்ஷிக-குட-த்ராக்ஷா-பவம் (ஸமம்) வாக்ஷு மே
ஸூக்ஷ்மம் மோக்ஷபதம் நிரீக்ஷிதுமபி ப்ரக்ஷாளயேயுர்மந: ॥ (79)

| | |
|---|---|
| தாக்ஷாந்தகே | தக்ஷசத்ருவான பரமசிவனுடைய |
| வீக்ஷணே | பார்வை ஏற்படும்போது |
| மந்தாக்ஷ-க்ரஹிளா: | வெட்கத்தை அடையக்கூடியவைகளாயும் |
| ஹிம-த்யுதி-மயூக-ஆக்ஷேப தீக்ஷா-அங்குரா: | சந்திரனுடைய காந்தியைப் பழிப்பதில் தீக்ஷைகொண்டவைகளுமான |
| காமாக்ஷ்யா: | காமாக்ஷியினுடைய |
| ம்ருதுள-ஸ்மிதாம்சு-நிகரா: | மேன்மையான புன்சிரிப்புக் காந்தியின் கூட்டங்கள் |
| மே | எனது |

| | |
|---|---|
| வாக்ஷு | வாக்குகளில் |
| மாக்ஷிக-குட-த்ராக்ஷா-பவம் | தேன், வெல்லம், திராக்ஷை இவைகளிலிருந்து உண்டாகக்கூடிய |
| தாக்ஷ்யம் | மேன்மையை |
| பக்ஷ்மளயந்து | அதிகரிக்கச்செய்யட்டும் |
| அபி | மேலும் |
| ஸௌக்ஷ்மம் | ஸௌக்ஷ்மமான |
| மோக்ஷபதம் | மோக்ஷமார்க்கத்தை |
| நிரீக்ஷிதுமபி | பார்ப்பதற்குங்கூட |
| மந: | மனதை |
| ப்ரக்ஷாளயேயு: | சுத்தப்படுத்தவேணும். |

தக்ஷனது பகைவராகிய பரமசிவனது பார்வை ஏற்படுகையில் வெட்கத்தை ஏற்கின்றவைகளும், சந்திரனின் கிரணங்களைத் திரஸ்கரிப்பதில் தீக்ஷை பூண்டவைகளுமான காமாக்ஷியின் இளநகை ஒளிக்கதிர் கூட்டங்கள், எனது சொற்களில் தேன், வெல்லம், திராக்ஷை இவைகளின் திறனைத் தளிர்க்கச் செய்யவேண்டும். நுண்ணிய மோக்ஷ வழியைப் பார்ப்பதற்குத் தகுந்தபடி என் மனத்தைச் சுத்தப்படுத்தவும்வேண்டும்.

'த்ராக்ஷாஸமம்' என்ற பாடத்தில், தேன் வெல்லம் த்ராக்ஷை-வைகளுக்கு ஒப்பான—என்பது பொருள்.

जात्या शीतलशीतलानि मधुराण्येतानि पूतानि ते
गाङ्गानीव पयांसि देवि पटलान्यल्पस्मितज्योतिषाम् ।
एनःपङ्कपरम्परामलिनितामेकाम्रनाथप्रिये
श्रीकामाक्षि परं मदीयधिषणां प्रक्षालयन्तु क्षणात् ॥ ८० ॥

ஜாத்யா சீதளசீதளாநி மதுராண்யேதாநி பூதாநி தே
காங்காநீவ பயாம்ஸி தேவி! படலாந்யல்ப-ஸ்மித-ஜ்யோதிஷாம் |
ஏந:-பங்க-பரம்பரா-மலிநிதாம் ஏகாம்ரநாத-ப்ரியே!
ஸ்ரீ காமாக்ஷி! பரம் மதீய திஷணாம் ப்ரக்ஷாளயந்து க்ஷணாத் || (80)

| | |
|---|---|
| ரகாம்ரசாத-ப்ரியே! | ஏகாம்ரேச்வர பத்நியும் |
| தவி! | விளங்குகிறவளுமான |
| ஸ்ரீகாமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ாங்காஇ பயாம்ஸி இவ | கங்கை ஜலம்போல் |
| ாத்யா | ஸ்வபாவத்திலேயே |
| தனசீதளாநி | மிகக் குளிர்ந்தவைகளாயும் |
| மதுராணி | இனியவைகளாயும் |
| த்தாநி | பரிசுத்தமானவைகளாயுமுள்ள |
| ரதாநி | இந்த |
| தே | உன்னுடைய |
| ல்ப-ஸ்மித-ஜ்யோதிஷாம் | மந்தஸ்மித காந்திகளுடைய |
| படலாநி | ஸமூஹங்கள் |
| ஏந:-பங்க-பரம்பரா-மலினிதாம் | பாபஸமூஹமாகிற சேற்றால் அழுக்கடைந்துள்ள |
| மதீய-திஷணாம் | எனது புத்தியை |
| க்ஷணாத் | சீக்கிரத்தில் |
| பரம் | நன்றாக |
| ப்ரக்ஷாளயந்து | அலம்பவேண்டும் (பரிசுத்தப் படுத்தட்டும்.) |

ஏகாம்ரநாதரின் காதலியாக விளங்குபவளே! கங்கையின் ஜலங்கள்போல் இயற்கையிலேயே மிகக் குளிர்ந்தவைகளும், இனிமைபொருந்தியவைகளும், தூயவைகளுமான உனது புன்முறுவலின் காந்திக்கூட்டங்கள் பாபமென்றும் சேற்றுத் தொகுதியால் அழுக்கடைந்திருக்கும் எனது புத்தியைத் தூய அறிவையளித்துத் தாமதமின்றி நன்றாய்ச் சுத்தம் செய்ய வேண்டும்.

प्रज्ञानात् सुतरां मदीय धिषणाम् ப்ரஜ்ஞாநாத் ஸுதராம் மதீயதிஷணாம் - என்ற பாடத்தில், ப்ரஜ்ஞாநாத் - தூய அறிவை கொடுத்து, ஸுதராம் - மிகவும் என்பது பொருள்.

अश्रान्तं परतन्त्रितः पशुपतिस्त्वन्मन्दहासाङ्कुरैः
श्रीकामाक्षि तदीयवर्णसमतासङ्गेन शङ्कामहे ।
इन्दुं नाकधुनीं च शेखरयते मालां च धत्ते नवै-
र्वैकुण्ठैरवकुण्ठनं च कुरुते धूलीचयैर्भास्मनैः ॥ ८१ ॥

அச்ராந்தம் பரதந்த்ரித: பசுபதி: த்வந்-மந்தஹாஸாங்குரை:
ஸ்ரீ காமாக்ஷி! ததிய-வர்ண-ஸமதா-ஸங்கேந சங்காமஹே |
இந்தும் நாகதுநீம் ச சேகரயதே மாலாம் ச தத்தே நவை:
வைகுண்டை ரவகுண்டநம் ச குருதே தூளீசயை:
பாஸ்மநை: || (81)

| | |
|---|---|
| ஸ்ரீகாமாக்ஷி! | காமாக்ஷியே! |
| அச்ராந்தம் | எப்போதும் |
| த்வத்-மந்தஹாஸ-அங்குரை: | உனது புன்சிரிப்பின் கொழுந்துகளால் |
| பரதந்த்ரித: | பரவசனுக்கப்பட்ட |
| பசுபதி: | பரமசிவனுனவர் |
| ததீய-வர்ண-ஸமதா-ஸங்கேந | அந்தச்சிரிப்பின் நிறத்துக்கு ஸமமான நிறத்தை அடைந்திருக்கிறது என்கிற எண்ணத்தால் |
| இந்தும் | சந்திரனையும் |
| நாகதுநீம் ச | கங்கையையும் |
| சேகரயதே | சூடிக்கொண்டிருக்கிறுன் |
| நவை: | புதிதான |
| வைகுண்டை: | (பிரமனின்) கபாலங்களால் |
| மாலாம் ச | மாலையையும் |
| தத்தே | தரித்துக்கொள்ளுகிறுன் |
| பாஸ்மநை: | விபூதியினுடையதான |
| தூளீசயை: | தூளி ஸமூஹங்களால் |
| அவகுண்டநம் ச | பூசிக்கொள்வதையும் |
| குருதே | செய்துகொள்ளுகிறுரென்று |
| சங்காமஹே | நினைக்கிறோம். |

ஸ்ரீகாமாக்ஷி! உனது புன்சிரிப்பு முனைகளால் அடிமைப் படுத்தப்பட்ட பசுபதியானவர், சோர்வின்றி அவைகளுக்குச் சமமான நிறத்தைப் பெற்றிருப்பதால் சந்திரனையும், தேவ கங்கையையும் தலையணியாகக் கொள்கிறுர். பிரமனது புதிய தலையோடுகளாலான மாலையையணிகின்றுர். சாம்பற் புழுதிக் கூட்டங்களால் தனது சரீரத்தைப் பூசிக்கொள்கிறுர் என்று நினைக்கிறோம்.

श्रीकामाक्षि भवप्रिये मृदुवचःसौरभ्यमुद्रास्पदं
प्रौढप्रेमलतानवीनकुसुमं मन्दस्मितं तावकम् ।
मन्दं कन्दलति प्रियस्य वदनालोके समाभाषणे
श्लक्ष्णे कुड्मलति प्ररूढपुलके चाश्लेषणे फुल्लति ॥८२॥

ஸ்ரீ காமாக்ஷி! பவப்ரியே! ம்ருதுவசஸ்-ஸௌரப்ய-முத்ராஸ்பதம்
ப்ரௌட-ப்ரேம-லதா-நவீந-குஸுமம் மந்தஸ்மிதம் தாவகம்!
மந்தம் கந்தளதி ப்ரியஸ்ய வதநாலோகே ஸமாபாஷணே
ச்லக்ஷ்ணே குட்மலதி ப்ரரூட-புளகே சாச்லேஷணே புல்லதி!!
(82)

| | |
|---|---|
| பவ-ப்ரியே | சிவபத்நியான |
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| ம்ருது-வசஸ்-ஸௌரப்ய-முத்ரா-ஆஸ்பதம் | ம்ருதுவான வார்த்தையின் வாஸனைக்கு இருப்பிடமாயும் |
| ப்ரௌட-ப்ரேம-லதா-நவீந குஸுமம் | வளர்ந்து முற்றிய அன்பெனும் கொடியின் புதிய புஷ்பமாயுமுள்ள |
| தாவகம் | உனது |
| மந்தஸ்மிதம் | புன்சிரிப்பானது |
| ப்ரியஸ்ய | பர்த்தாவினுடைய |
| வதந-ஆலோகே | முகத்தைப் பார்க்கும்போது |
| மந்தம் | மெதுவாக |
| கந்தளதி | அங்குரிக்கிறது |
| ச்லக்ஷ்ணே ஸமாபாஷணே | மனோஹரமான பேச்சு ஆரம்பிக்கும்போது |
| குட்மலதி | மொட்டுவிடுகிறது |
| ப்ரரூட-புளகே | மயிர் கூச்சல் மேலிட்ட |
| ஆச்லேஷணே ஸதி | ஆலிங்கனம் நேரும்போது |
| புல்லதி | மலர்ந்துவிடுகிறது. |

சிவனுடைய காதலியாகிய காமாக்ஷி! மெல்லிய சொற்களின் நறுமணத்திற்கு இருப்பிடமும், முற்றிய அன்பு என்னும் கொடிக்குப் புதுமலரான உனது புன்னகை, காதலனை பரமசிவனின் முகத்தைக் காணுகையில் மெதுவாகத் தளிர்க்கின்றது. இனிய பேச்சு நிகழ்கையில் அரும்பு விடுகின்றது. மயிர் சிலுக்குமாறு அணைத்துக்கொள்கையில் மலர்கின்றது.

ஸ்ரீகாமாக்ஷி பவப்ரியே—என்ற இடத்தில் "ஸ்ரீகாஞ்சிபுர தேவதே"—என்று பாடாந்தரம். ஸ்ரீகாஞ்சிபுரியின் தேவதை யாகிய காமாக்ஷியே—என்று பொருள்.

किं त्रैस्रोतसमम्बिके परिणतं स्रोतश्चतुर्थं नवं
पीयूषस्य समस्ततापहरणं किं वा द्वितीयं वपुः ।
किंस्विन्नैकटिकं गिरो मधुरिमाभ्यासाय (ग)नव्यं पयः
कामाक्षि स्मरशासनप्रियतमे मन्दस्मितं तावकम् ॥ ८३ ॥

கிம் த்ரைஸ்ரோதஸமம்பிகே பரிணதம் ஸ்ரோதச்சதுர்த்தம் [நவம்
பீயூஷஸ்ய ஸமஸ்த-தாப-ஹரணம் கிம் வா த்விதீயம் வபு: |
கிம்ஸ்விந்நைகடிகம் கிரோ மதுரிமாப்யாஸாய ந(க)வ்யம் பய:
காமாக்ஷி! ஸ்மர-சாஸந-ப்ரியதமே மந்தஸ்மிதம் தாவகம்||(83)

| | |
|---|---|
| அம்பிகே | தாயாராயும் |
| ஸ்மர-சாஸந-ப்ரியதமே | மன்மத சத்ருவான பரமசிவ பத்நியுமான |
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தாவகம் | உனது |
| மந்தஸ்மிதம் | புன்சிரிப்பானது |
| நவம் | புதிதாக |
| பரிணதம் | ஏற்பட்ட |
| த்ரைஸ்ரோதஸம் | மூன்று வழியில் பிரவஹிக்கும் கங்கையின் |
| சதுர்த்தம் | நாலாவதான |
| ஸ்ரோத: கிம் | பிரவாஹமா என்ன? |
| கிம் வா | அல்லது |
| ஸமஸ்த-தாப-ஹரணம் | ஸர்வதாபங்களையும் நிவர்த்தி செய்யக்கூடியதான |
| பீயூஷஸ்ய | அம்ருதத்தினுடைய |
| த்விதீயம் வபு: | இரண்டாவது உருவமோ? |
| கிம்ஸ்வித் | அல்லது |
| கிர: | உனது வாக்கின் |
| மதுரிம-அப்யாஸாய | இனிமையைப் பழகிக்கொள்ளுவதற்காக |
| நைகடிகம் | ஸமீபத்தில் உள்ள |
| நவ்யம் பய: | புதிய பாலோ? |

மன்மதனையடக்கியவரின் காதலியாகிய காமாக்ஷியே! உனது புன்னகை மூன்றாகப் பிரிந்த கங்கையின் புதிய நான்காவது நீர்பெருக்கோ? அல்லது எல்லாத் தாபங்களையும் தவிர்க்கும் அமுதின் இரண்டாவது உருவமோ? அன்றி இனிமையைக் கற்றுக்கொள்ள உனதருகாமையையடைந்த புதிய பாலோ?

நவ்யம் என்ற பாடத்தில புதிய என்றும், கவ்யம் என்ற பாடத்தில் பசுவினுடைய என்றும் பொருள். "ஸ்ரீ காஞ்சிபுர நாயக ப்ரியதமே மந்த...." என்று பாடாந்தரம். ஸ்ரீ காஞ்சிபுரத்தின் அதிபதியான ஏகாம்ரநாதனின் மனதிற்கிசைந்த மனைவியான காமாக்ஷியே-என்று பொருள்.

मूषा वक्त्रसरोरुहस्य सहजा वाचां सखी शाश्वती
नीवी विभ्रमसन्ततेः पशुपतेः सौधी दृशां पारणा ।
जीवातुर्मदनश्रियः शशिरुचेरुच्चाटनी देवता
श्रीकामाक्षि गिरामभूमिमयते हासप्रभामञ्जरी ॥ ८४ ॥

பூஷா வக்த்ர-ஸரோருஹஸ்ய ஸஹஜா வாசாம் ஸகீ சாச்வதீ
நீவீ விப்ரம-ஸந்ததே: பசுபதே: ஸௌதீ த்ருசாம் பாரணா |
ஜீவாது: மதந-ச்ரிய: சசிருசே ருச்சாடநீ தேவதா
ஸ்ரீ காமாக்ஷி! கிராமபூமிமயதே ஹாஸ-ப்ரபா-மஞ்ஜரீ || (84)

| | |
|---|---|
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| வக்த்ர-ஸரோருஹஸ்ய | தாமரைப்பூபோன்ற முகத்திற்கு |
| ஸஹஜா | ஸ்வபாவமாக ஏற்பட்ட |
| பூஷா | அலங்காரமாயும் |
| வாசாம் | வாக்குகளுக்கு |
| சாச்வதீ | விட்டுப்பிரியாத |
| ஸகீ | தோழியாயும் |
| விப்ரம-ஸந்ததே: | விலாஸராசிகளுக்கு |
| நீவீ | மத்யமஸ்தானமாயும் |
| பசுபதே: | பரமசிவனின் |
| த்ருசாம் | கண்களுக்கு |
| ஸௌதீ-பாரணா | அமிருதபாரணையாயும் |
| மதநச்ரிய: | மன்மதசோபைக்கு |
| ஜீவாது: | உயிர்நாடியாயும் |
| சசிருசே: | சந்திரகிரணத்திற்கு |

| | |
|---|---|
| உச்சாடநீ தேவதா | துரத்துகிற தேவதையாயுமிருக்கிற |
| ஹாஸ-ப்ரபா-மஞ்ஜரீ | புன்சிரிப்புக்காந்தியென்னும் பூங்கொத்து |
| கிராம் | வாக்குக்களுக்கு |
| அபூமிம் | எட்டாத நிலைமையை |
| அயதே | அடைகிறது. |

ஸ்ரீ காமாக்ஷி! தாமரைபோன்ற முகத்திற்கு இயற்கையலங்காரமாயும், சொற்களுக்கு எப்பொழுதுமுள்ள தோழியாகவும், அழகிய செஞ்சடைத் தொடர்பிற்கு நடுமுடிச்சாகவும் (மத்ய ஸ்தானமாயும்), பரமசிவன் கண்களுக்கு அமிருதத்தாலான உணவாகவும், மன்மதனுடைய செல்வத்திற்கு உயிரளிக்கும் ரஸாயனமாகவும், சந்திரனுடைய ஒளியை விரட்டும் தேவதையாகவும் இருந்துவரும் உனது மந்தஹாஸத்தின் ஒளிக்கூட்டமாகிய பூங்கொத்து வார்த்தைகளுக்கு எட்டாத நிலையை யடைகின்றது.

सूतिः श्वेतिमकन्दलस्य वसतिः शृङ्गारसारश्रियः
पूर्तिः सूक्तिझरीरसस्य लहरी कारुण्यपाथोनिधेः ।
वाटी काचन कौसुमी मधुरिमस्वाराज्यलक्ष्म्यास्तव
श्रीकामाक्षि ममास्तु मङ्गलकरी हासप्रभाचातुरी ॥ ८५ ॥

ஸூதி: ச்வேதிம கந்தளஸ்ய வஸதி: ச்ருங்கார ஸாரச்ரிய:
பூர்த்தி: ஸூக்தி-ஜரீ-ரஸஸ்ய லஹரீ காருண்ய-பாதோநிதே: |
வாடீ காசந கௌஸுமீ மதுரிம-ஸ்வாராஜ்ய-லக்ஷ்ம்யாஸ்தவ
ஸ்ரீ காமாக்ஷி மமாஸ்து மங்களகரீ ஹாஸ-ப்ரபா-சாதுரீ || (85)

| | |
|---|---|
| ஸ்ரீ காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| ச்வேதிம-கந்தளஸ்ய | வெண்மை நிறத்தின் தளிருக்கு |
| ஸூதி: | உத்பத்தி ஸ்தானமாயும் |
| ச்ருங்கார ஸாரச்ரிய: | ச்ருங்கார ஸாராம்சத்தின் சோபைக்கு |
| வஸதி: | இருப்பிடமாயும் |
| ஸூக்தி-ஜரீ-ரஸஸ்ய | உயர்ந்த கவிதாரஸப் பெருக்குக்கு |
| பூர்த்தி: | பூர்த்தியைக் கொடுப்பதும் |
| காருண்ய-பாதோ நிதே: | தயையாகிற ஸமுத்திரத்திற்கு |

| | |
|---|---|
| ஸஹரீ | அலேபோன்றதாயும் |
| மதுரிம-ஸ்வாராஜ்ய-லக்ஷ்ம்யா: | இனிமையெனும் ஸ்வாராஜ்ய லக்ஷ்மிக்கு |
| காசந | ஓர் உயர்ந்த |
| கௌஸூமீ, வாடீ | புஷ்பச் சோலையாயுமிருக்கிற |
| தவ | உன்னுடைய |
| ஹாஸ-ப்ரபா-சாதுரீ | புன்சிரிப்பின் பொலிவின் திறமை |
| மம | எனக்கு |
| மங்களகரீ | க்ஷேமத்தைச் செய்வதாக |
| அஸ்து | ஆகட்டும். |

ஸ்ரீகாமாக்ஷி! வெண்மையென்னும் தளிரை உண்டுபண்ணுகின்றதும், சிறந்த சிருங்காரத்திற்கு இருப்பிடமும், இனிய மொழியெனும் அருவியின் பெருக்கும், கருணையென்ற கடலுக்கு அலைவரிசையாகவும், இனிமையென்கிற ஸாம்ராஜ்ய லக்ஷ்மிக்கு ஓர் பூஞ்சோலையாகவும் இருக்கின்ற உனது புன்னகையின் ஒளியானது எனக்கு மங்களங்களைச் செய்யவேண்டும்.

"ஹாஸப்ரபா மஞ்ஜரீ"—என்று பாடாந்தரம். புன்னகையின் காந்தியாகிற பூங்கொத்து—என்பது பொருள்.

उत्तुङ्गस्तनमण्डलस्य विलसल्लावण्यलीलानटी-
रङ्गस्य स्फुटमूर्ध्वसीमनि मुहुः प्राकाश्यमभ्येयुषी ।
श्रीकामाक्षि तव स्मितद्युतितति र्बिम्बोष्ठकान्त्यङ्कुरै-
श्चित्रां विद्रुममुद्रिकां वितनुते मौक्तीं वितानश्रियम् ॥ ८६ ॥

உத்துங்க-ஸ்தந-மண்டலஸ்ய விலஸல்லாவண்ய-லீலா-நடீ-
ரங்கஸ்ய ஸ்புட மூர்த்வஸீமநி முஹு: ப்ராகாச்யமப்யேயுஷீ |
ஸ்ரீ காமாக்ஷி! தவ ஸ்மிதத்யுதிததி: பிம்போஷ்ட காந்த்யங்குரை:
சித்ராம் வித்ரும-முத்ரிகாம் விதநுதே மௌக்தீம்
[விதாநச்ரியம் || (86)

| | |
|---|---|
| ஹே காமாக்ஷி! | ஹே காமாக்ஷியே |
| விலஸத்-லாவண்ய-லீலா-நடீ-ரங்கஸ்ய | விளங்குகிற அழகாகிய லீலா நாட்டியப்பெண்ணின் நாடக மேடைபோன்ற |
| உத்துங்க-ஸ்தந-மண்டலஸ்ய | உயர்ந்த ஸ்தநமண்டலத்தின் |
| ஊர்த்வ-ஸீமநி | மேல் பாகத்தில் |

| மூஹு: | அடிக்கடி |
|---|---|
| ஸ்புடம்-ப்ராகாச்யம் | தெளிவான ப்ரகாசத்தை |
| அப்யேயுஷீ | அடைகிறதான |
| தவ | உனது |
| ஸ்மித-த்யுதி-ததி: | புன்சிரிப்புக்காந்திக் கூட்ட மானது |
| பிம்போஷ்டகாந்தி-அங்குரை: | கோவைப்பழம்போன்ற உதட்டின் காந்திகளோடு சேர்ந்து |
| வித்ரும முத்ரிகாம் | பவழக்கொடியுடன் கூடிய |
| சித்ராம் | விசித்ரமான |
| மௌக்தீப்-விதாநச்ரியம் | முத்துப்பந்தலுடைய அழகை |
| விதநுதே | செய்கிறது. |

ஸ்ரீ காமாக்ஷி! விளங்கும் விப்ரமங்கள் (அழகிய சேஷ்டைகள்) என்ற நடனமாதின் அரங்கமேடையாகிய உயர்ந்த ஸ்தந மண்டலத்தின் மேல்பக்கத்தில் அடிக்கடித் தோன்றும் உனது புன்சிரிப்பின் ஒளித்தொடர், கோவைப்பழம்போன்ற இதழின் ஒளித் தோற்றங்களால் பல நிறமுள்ளதும் முத்துக்களால் ஆனதுமான அல்மானகிரியின் (எடுத்துக்கட்டியின்) அழகை விளைவிக்கின்றது.

जन्तूनां जनिदुःखमृत्युलहरीसन्तापनं कृन्ततः
प्रौढानुग्रहपूर्णशीतलरुचो नित्योदयं बिभ्रतः ।
श्रीकामाक्षि विसृत्वरा इव करा हासाङ्कुरास्ते हठा-
दालोकेन निहन्युरन्धतमसस्तोमस्य मे सन्ततिम् ॥ ८७ ॥

ஜந்தூநாம் ஜநி-துக்க-ம்ருத்யுலஹரீ-ஸந்தாபநம் க்ருந்தத:
ப்ரௌடாநுக்ரஹ-பூர்ண—சீதள-ருச: நித்யோதயம் பிப்ரத: |
ஸ்ரீ காமாக்ஷி! விஸ்ருத்வரா இவ கரா: ஹாஸாங்குராஸ்தே
ஆலோகேந நிஹந்யுரந்ததமஸ ஸ்தோமஸ்ய [ஹடாத்
மே ஸந்ததிம் || (87)

| ஸ்ரீ காமாக்ஷி! | காமாக்ஷியே! |
|---|---|
| ஜந்தூநாம் | பிராணிகளுடைய |
| ஜநி-துக்க-ம்ருத்யு-லஹரீ-ஸந்தாபநம் | பிறப்பு, துக்கம், மரணம் என்ற அலையின் தாபத்தை |
| க்ருந்தத: | போக்கடிப்பவைகளாயும் |
| ப்ரௌட-அநுக்ரஹ-பூர்ண-சீதள-ருச: | உயர்ந்த அனுக்ரஹமென்கிற பூர்ண சந்திரனுடைய |

| | |
|---|---|
| நித்ய-உதயம் | அழிவில்லாத உதயத்தை |
| பிப்ரத: | வஹிப்பவைகளும் |
| தே | உன்னுடைய |
| விஸ்ருத்வரா: | பரவுகிற |
| கரா: இவ | கைகள் போன்றவைகளுமான |
| ஹாஸ-அங்குரா: | புன்சிரிப்புக்களின் முளைகள் |
| ஆலோகேந | ஒளியால் |
| மே | எனது |
| அந்ததட ஸ-ஸ்தோமஸ்ய | பெரிய இருட்டுக்கூட்டத்தின் |
| ஸந்ததிம் | தொடர்ச்சியை |
| ஹடாத் | பலாத்காரமாக |
| நிஹந்யு: | விலக்கட்டும். |

ஸ்ரீ காமாக்ஷி! பிராணிகளின் பிறப்பு, துக்கம், சாவு இவைகளின் தொடர்பால் ஏற்படும் தாபத்தைப் போக்குகின்றதும், குன்றாத அருளெனும் பூர்ணசந்திரனுக்கு அழிவற்ற தோற்றத்தைச் செய்கின்றவைகளும், விரித்த கைகள் (அணைத்துக்கொள்ளும் கைகள்) போன்றவைகளுமான புன்னகையின் முளைகள் தமதொளியால் எனது அடர்ந்த இருளின் தொடர்பைப்பலாத்காரமாகவே அழிக்கவேண்டும்.

இந்த சுலோகத்துக்கு வேறவிதமாய் பொருள் சொல்லுவது சிறந்தது என்று தோன்றுகிறது. ஜந்தூநாம் - ஜந்துக்களுடைய, ஜநிதுக்கம்ருத்யுலஹரீ ஸந்தாபநம் - பிறப்பு, துக்கம், இறப்பு இவைகளின் துடர்பால் உண்டாகும் ஸந்தாபத்தை, க்ருந்தத:-அறப்பதும், நித்ய உதயம் - நித்தியமான உதயத்தை, பிப்ரத: - வஹிப்பதுமான, ப்ரௌட அநுக்ரஹ பூர்ணிதளுச: - குன்றாத அநுக்ரஹமாகிற பூர்ணசந்த்ரனுடைய, விஸ்ருத்வரா: கரா: இவ - பரவுகின்ற கிரணங்கள் போன்ற, தே ஹாஸாங்குரா: - உனது ஹாஸாங்குரங்கள் தமது ஒளியால் எனது காடமான இருள் கூட்டத்தை விலக்க வேண்டும்.

ஸ்ரீ காமாக்ஷியின் பூர்ணாநுக்ரஹத்தைப் பூர்ணசந்திரனை ஒப்பிடுகிறார். பூர்ண சந்திரன் ஜந்துக்களுடைய ஸம்ஸாரத்திலுண்டான தாபத்தைப் போக்காது. இந்தப் பூர்ணாநுக்ரஹமோ, அதைப்போக்கும். பூர்ணசந்த்ரனுக்கு நித்தியம் உதய

மில்லை. அநுக்ரஹமோ நித்தியம் உதிக்கும். அப்படிப்பட்ட பூர்ணாநுக்ரஹமாகிற சந்திரனுடைய கிரணங்கள் போலிருக்கின்றன உனது மந்தஹாஸாங்குரங்கள் அவை தமது ஒளியால் எனது அஞ்ஞானமாகிற இருளைப் பின்பு உண்டாகாமலிருக்கும்படி விலக்கவேண்டும் என்று கவி வேண்டுகிறார்.

க்ருந்தத:, பிப்ரத: - என்ற இரண்டு பதங்களும் முதல் வேற்றுமையின் பன்மையல்ல. ஆறும் வேற்றுமை, ஸிதருச: என்பதற்கு அடைமொழி (விசேஷணம்).

स्वाभाव्यात्तव वक्त्रमेव ललितं सन्तोषसम्पादनं
शम्भोः किं पुनरञ्चितस्मितरुचः पाण्डित्यपात्रीकृतम् ।
अम्भोजं स्वत एव सर्वजगतां चक्षुःप्रियम्भावुकं
कामाक्षि स्फुरिते शरद्विकसिते कीदृग्विधं भ्राजते ॥ ८८ ॥

ஸ்வாபாவ்யாத் தவ வக்த்ரமேவ லலிதம் ஸந்தோஷஸம்பாதநம்
சம்போ: கிம்புந: அஞ்சித ஸ்மிதருச: பாண்டித்ய-பாத்ரீக்ருதம்!
அம்போஜம் ஸ்வத ஏவ ஸர்வஜகதாம் சக்ஷு: ப்ரியம் பாவுகம்
காமாக்ஷி! ஸ்புரிதே சரத்-விகஸிதே கீத்ருக் விதம் ப்ராஜதே !!
(௮௮)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தவ | உனது |
| லலிதம் | அழகிய |
| வக்த்ரம் | முகமானது |
| ஸ்வாபாவ்யாத் ஏவ | இயற்கையாகவே |
| சம்போ: | பரமசிவனுக்கு |
| ஸந்தோஷ-ஸம்பாதநம் | ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதாயிருக்கிறது. |
| அஞ்சித-ஸ்மித-ருச: | அழகிய புன்சிரிப்பின் காந்தியினுடைய |
| பாண்டித்ய-பாத்ரீக்ருதம் | பாண்டியத்திற்கு இருப்பிடமான அந்த முகமானது |
| கிம்புந: | சொல்லவேண்டுமா? |
| அம்போஜம் | தாமரைப்பூவானது |
| ஸ்வத: ஏவ | பிறவியிலேயே |
| ஸர்வ-ஜகதாம் | எல்லா உலகத்திற்கும் |
| சக்ஷு:-ப்ரியம்-பாவுகம் | நேத்திரானந்தத்தை ஊட்டும் |

| | |
|---|---|
| சரத்-விகஸிதே | சரத்காலத்திய மலர்தலானது |
| ஸ்புரிதே | துலங்கும்போது |
| கித்ருக்விதம் | எத்தகையதாக |
| ப்ராஜதே | விளங்கும்? அப்படியேஇதுவும் |

காமாக்ஷி! இயற்கையாகவே வனப்புவாய்ந்த உன்னுடைய முகம் பரமசிவனுக்கு இன்பத்தை விளைவிக்கின்றது. அம்முகமே அழகிய புன்னகையின் திறமைக்கு இருப்பிடமாகச் செய்யப்பட்டுவிட்டால் இன்பத்தை விளைவிக்கும் என்பதில் கேட்கவும் வேண்டுமோ? தாமரை இயற்கையிலேயே எல்லா ஜனங்களுடைய கண்களுக்கு இன்பம் தருகின்றது. சரத்காலத்தின் மலர்ச்சி துலங்கும்பொழுது அத் தாமரை மலர் எவ்விதமாக மிகமிக மேன்மைபெற்று விளங்குமோ, அது போல உன் திருமுகமானது புன்சிரிப்புடன் விளங்கினால் பரமசிவனுக்கு அதிகமான இன்பத்தை அளிக்கின்றது.

पुंभिर्निर्मलमानसैर्विदधते मैत्रीरसं निर्मलं
कर्तुं कर्मलयं च निर्मलतमां कीर्तिं लभन्तेतराम् ।
सूक्तिं पक्ष्मलयन्ति निर्मलगुणां यत्तावकाः सेवका-
स्तत्कामाक्षि तव स्मितस्य कलया नैर्मल्यसीमानिधेः ॥८९॥

பும்பி: நிர்மல-மாநஸை: விதததே மைத்ரீ-ரஸம் நிர்மலம்
கர்த்தும் கர்மலயம் ச நிர்மலதமாம் கீர்த்திம் லபந்தேதராம்!
ஸூக்திம் பக்ஷ்மளயந்தி நிர்மல-குணாம் யத்தாவகா: ஸேவகா:
தத்-காமாக்ஷி தவ ஸ்மிதஸ்ய கலயா நைர்மல்ய-ஸீமாநிதே: ॥
(89)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| தாவகா: ஸேவகா: | உனது அடியார்கள் |
| நிர்மல-மானஸை: | பரிசுத்தமான மனதுள்ள |
| பும்பி: | புருஷர்களோடு |
| நிர்மலம் | சுத்தமான |
| மைத்ரீ-ரஸம் | ஸ்னேஹ ரஸத்தை |
| விதததே | செய்கிறார்கள் |
| கர்மலயம் | கர்மநாசத்தை |
| கர்த்தும் | அடைவதற்கு |
| நிர்மலதமாம் | மிகவும் சுத்தமான |

| | |
|---|---|
| கீர்த்திம் | கீர்த்தியையும் |
| லபந்தேதராம் | அடைகிறார்கள் |
| நிர்மலகுணாம் | உயர்ந்த குணமுள்ள |
| வாக்கிம் | வாக்கை |
| பக்ஷ்மலயந்தி | வெளிப்படுத்துகிறார்கள்என்பது |
| யத் | யாதொன்று உண்டோ |
| தத் | அதெல்லாம் |
| நைர்மல்ய-ஸீமாநிதே: | பரிசுத்தியின் பரம எல்லை ஸ்தானமாயுள்ள |
| தவ ஸ்மிதஸ்ய | உனது புன்சிரிப்பின் |
| கலயா | ஒரு கலையின் மஹிமையால் தான். |

காமாக்ஷி! உனது அடியார்கள் தூய மனமுள்ள புருஷர்களுடன் மாசற்ற நட்புக்கொள்ளுகிறார்கள் என்பதும், வினைகளையொழிக்க, தூய புகழையடைகிறார்கள் என்பதும், மிகத் தெளிவுள்ள அழகிய சொற்களைப் பெருகச் செய்கிறார்கள் என்பதும் மாசற்ற தன்மைக் கிருப்பிடமாகிய உனது புன்சிரிப்பின் ஒரு கலையால்தான் (அம்சத்தால் தான்).

" मैत्रीं दृढं निर्मलां लब्ध्वा कर्मलयं च निर्मलतराम् " (மைத்ரீம் த்ருடம் நிர்மலாம் லப்த்வா கர்மலயம் ச நிர்மலதராம்) என்ற பாடாந்திரத்தில், நிர்மலாம்-மாசற்ற, மைத்ரீம்-நட்பை, த்ருடம்-திடமாக (மாறாமல்) செய்கிறார்கள் என்பதும், கர்மலயம் ச-(அதனால்) வினைகளின் நாசத்தை, லப்த்வா ச-அடைந்தும், என்பது பொருள்.

आकर्षन्नयनानि नाकिसदसां शैत्येन सम्स्तम्भय-
न्निन्दुं किं च विमोहयन्पशुपतिं विश्वार्तिमुच्चाटयन् ।
हिंसन्संसृतिडम्बरं तव शिवे हासाह्वयो मान्त्रिकः
श्रीकामाक्षि मदार्तितापतमसो विद्वेषणे चेष्टताम् ॥९०॥

ஆகர்ஷந்நயநாநி நாகி-ஸதஸாம் சைத்யேந ஸம்ஸ்தம்பயந்
இந்தும் கிஞ்ச விமோஹயந் பசுபதிம் விச்வார்த்தி முச்சாடயந் /
ஹிம்ஸந் ஸம்ஸ்ருதி-டம்பரம் தவ சிவே! ஹாஸாஹ்வயோ மாந்த்ரிக:
ஸ்ரீ காமாக்ஷி! மதார்த்தி-தாப-தமஸோ வித்வேஷணே சேஷ்டதாம் // (90)

| | |
|---|---|
| சிவே! | மங்களமூர்த்தியான |
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| நாகி-ஸுதலாம் | விண்ணுலகில் வஸிக்கும் தேவதைகளுடைய |
| நயநாலி | கண்களை |
| ஆகர்ஷந் | ஆகர்ஷணம் செய்கிறவனும் |
| ஜைத்யேந | குளிமையினால் |
| இந்தும் | சந்திரனை |
| ஸம்ஸ்தம்பயந் | ஸ்தம்பனம் செய்கிறவனும் |
| கிஞ்ச | இன்னும் |
| பசுபதிம் | பரமேசுவரனை |
| விமோஹயந் | மோஹிக்கச் செய்கிறவனும் |
| விச்வார்த்திம் | உலகத்தின் கஷ்டத்தை |
| உச்சாடயந் | துரத்தியடிப்பவனும் |
| ஸம்ஸ்ருதி-டம்பரம் | ஸம்ஸாரக்கொடுமையை |
| ஹிம்ஸந் | போக்கடிப்பவனுமான |
| தவ | உன்னுடைய |
| ஹாஸாஹ்வய: | புன்சிரிப்பு என்கிற பெயருள்ள |
| மாந்த்ரிக: | மந்திரவாதியானவன் |
| மத்-ஆர்த்தி-தாப-தமஸாம் | என்னுடைய கஷ்டம், ஸந்தாபம், அஞ்ஞானம் இவைகளுடைய |
| வித்வேஷணே | போக்கடிக்கும் கார்யத்தில் |
| சேஷ்டதாம். | பிரயத்னப்படட்டும். |

மங்கள உருவாகிய ஸ்ரீகாமாக்ஷி! தேவலோகத்திய ஸபையோர்களின் (தேவதைகளின்) கண்களை ஆகர்ஷிக்கின்றதும் (கவர்கின்றதும்), குளிர்ச்சியால் சந்திரனையும் ஸ்தம்பிக்கச் செய்கின்றதும், (மரத்துப் போகும்படி செய்கின்றதும்), பரமசிவனை மோஹிக்கச் செய்கின்றதும் (மயங்கும்படி செய்கின்றதும்), உலகத்தோரின் கஷ்டங்களை உச்சாடனம் செய்கின்றதும் (விரட்டுகின்றதும்), ஜனன மரணத்தின் ஆடம்பரத்தை ஹிம்ஸிக்கின்றதும் (ஸம்ஸார நாசத்தைச் செய்கின்றதும்), ஆன உனது புன்சிரிப்பென்னும் மந்திரவாதி என் கஷ்டம், ஸந்தாபம் இருள் இவைகளுடன் த்வேஷணம் செய்வதில் (இவைகளைப் போக்குவதில்) முயலவேண்டும்.

இந்த ஸ்லோகத்தில் தேவியின் புன்சிரிப்பு மந்திரவாதி யாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இங்கு மந்திரவாதியின் செய் கையைக் கூறும் ஆகர்ஷணம் ஸ்தம்பநம் முதலிய சொற்கள் சிலேடையாகக் குறிக்கப்பட்டுள்ளன.

'मदीयमानस तमोविद्वेषणे மதீயமாநஸ தமோவித்வேஷணே' என்ற பாடத்தில், எனது மனதிலிருக்கும் இருளோடு த்வே ஷிப்பதில் என்பது பொருள்.

> क्षेपीयः क्षपयन्तु कल्मषभयान्यस्माकमल्पस्मित-
> ज्योतिर्मण्डलचङ्क्रमास्तव शिवे कामाक्षि रोचिष्णवः ।
> पीडाकर्मठकर्मघर्मसमयव्यापारतापानल-
> श्रीपाता नवहर्षवर्षणसुधास्रोतस्विनीशीकराः ॥९१॥

க்ஷேபீய: க்ஷபயந்து கல்மஷ-பயாநி அஸ்மாக மல்பஸ்மித-
ஜ்யோதிர்மண்டல-சங்க்ரமாஸ்தவ சிவே! காமாக்ஷி!
ரோசிஷ்ணவ: |
பீடா-கர்மட-கர்ம-கர்ம-ஸமய-வ்யாபார-தாபாநல-
ச்ரீபாதா: நவ-வர்ஷ-ஹர்ஷண-ஸுதா-ஸ்ரோதஸ்விநீ-சீகரா:||
(91)

சிவே! காமாக்ஷி! — மங்களமூர்த்தியான காமாக்ஷியே!

பீடா-கர்மட-கர்ம-கர்ம-ஸமயவ்யாபார-தாப-அநல-ஸ்ரீபாதா: — பீடையையே தொழிலாகக் கொண்ட கர்மங்களென்னும் கோடைகாலத்தின் செய்கை யாகிறதாபாக்னிக்கு அழிவை உண்டாக்குகிறவைகளாகவும்

நவ-வர்ஷ-ஹர்ஷண-ஸுதா ஸ்ரோதஸ்விநீ-சீகரா: — புதிய வர்ஷத்தினால் ஸந்தோ ஷிக்கச்செய்கிற அம்ருத அருவியின் துளிகளாயும்

ரோசிஷ்ணவ: — பிரகாசிக்கின்றவைகளும்

தவ — உனது

அல்பஸ்மித-ஜ்யோதிர்மண் டல-சங்க்ரமா: — மந்தஸ்மித தேஜோமண்டலங் களின் ஸஞ்சாரங்கள்

அஸ்மாகம் — எங்களுடைய

கல்மஷ-பயாநி — பாப பயங்களை

க்ஷேபீய: — நன்கு

க்ஷபயந்து — போக்கடிக்கட்டும்.

மங்கள ரூபிணியான காமாக்ஷி! துன்பத்தையே விளைவிக்கும் கர்மங்கள் என்றும் கோடைகாலத்தின் செய்கைகளாலுண்டான தாபமென்னும் அனலுக்கு அழிவைச் செய்கின்றவைகளும், புதிய பொழிவால் களிப்புறச் செய்யும் அமிருத நதியின் திவலைகளாகவுமிருக்கின்ற உனது விளங்கும் இள நகையின் ஒளிக்கூட்டத்தின் ஸஞ்சாரங்கள் அதிசீக்கிரத்தில் எங்களது பாபபயங்களை அழிக்கவேண்டும்.

“तापानल श्रीवाता:” “தாபாநல ஸ்ரீவாதா:” என்ற பாடாந்தரத்தில் அக்னியோல் தபிக்கும் ஸம்ஸாரதாபத்தைப் போக்கும் குளிர்ந்த காற்றாக இருப்பவைகளும் என்று பொருள்.

श्रीकामाक्षि तव स्मितैन्दवमह:पूरे परिस्फूर्जति
प्रौढां वारिधिचातुरीं कलयते भक्तात्मनां प्रातिभम् ।
दौर्गत्यप्रसरास्तम:पटलिकासाधर्म्यमाबिभ्रते
किं किं कैरवसाहचर्यपदवीरीत्यां न धत्ते पदम् ॥ ९२ ॥

ஸ்ரீ காமாக்ஷி! தவ ஸ்மிதைந்தவ-மஹ:-பூரே பரிஸ்பூர்ஜதி
ப்ரௌடாம் வாரிதி-சாதுரீம் கலயதே பக்தாத்மநாம் ப்ராதிபம் ।
தௌர்கத்ய-ப்ரஸரா: தம:படலிகா-ஸாதர்ம்யமாபிப்ரதே
கிம் கிம் கைரவ-ஸாஹசர்யபதவீ-ரீத்யாம் ந தத்தே பதம்।। (92)

| | |
|---|---|
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| தவ | உனது |
| ஸ்மித-ஐந்தவ-மஹ: பூரே | புன்சிரிப்பாகிற சந்திர ஒளியின் கூட்டமானது |
| பரிஸ்பூர்ஜதி | விளங்கிக்கொண்டிருக்கையில் |
| பக்தாத்மநாம் | பக்தர்களுடைய |
| ப்ராதிபம் | ப்ரதிபையானது |
| ப்ரௌடாம் | கம்பீரமான |
| வாரிதி-சாதுரீம் | ஸமுத்திரத்தின் சாதுர்யத்தை |
| கலயதே | அடைகிறது |
| தௌர்கத்ய-ப்ரஸரா: | துரதிருஷ்டங்களின்பரவுதல்கள் |
| தம:-படலிகா-ஸாதர்ம்யம் | இருள்கூட்டத்தின் நிலைமையை |
| ஆபிப்ரதே | அடைகின்றன |
| கிம் கிம் | மற்றவை எவை எவைதான் |
| கைரவ-ஸாஹசர்ய-பதவீ ரீத்யாம் | ஆம்பல் புஷ்பத்தின் நிலைமையில் |

பதம் — இருப்பை
ந தத்தே — அடைவதில்லை?

ஸ்ரீ காமாக்ஷி உனது இளநகையென்னும் நிலவுப்பெருக்கு ஒளிருகையில், அடியார்களின் மேல் மேல் தோற்றமுள்ள அறிவு, முதிர்ந்த ஸமுத்திரத்தின் நிறைமையைக் காட்டுகின்றது. துரதிருஷ்டங்களின் பெருக்குகள் இருள் கூட்டத்தின் ஒத்துமையை யடைகின்றன. மற்ற எவைதான் ஆம்பலுக்கு ஒத்துழைக்கும் வழி முறையைப் பின்பற்றுமலிருக்கின்றன?

" सर्वं कैरव साहचर्य पदवीरिति विधत्ते परम् "

"ஸர்வம் கைரவ ஸாஹசர்ய பதவீரிதிம் விதத்தே பரம்" என்ற பாடாந்தரத்தில், ஸர்வம் - மற்றவையெல்லாம், கைரவ ஸாஹசர்ய பதவீரிதிம் பரம் - அல்லிக்கு ஒத்துழைக்கும் நிலைமையை ஏற்கின்றது—என்பது பொருள்.

मन्दारादिषु मन्मथारिमहिषि प्राकाश्यरीतिं निजां
कादाचित्कतया विशङ्क्य बहुशो वैशद्यमुद्रागुणः ।
श्रीकामाक्षि तदीयसङ्गमकलामन्दीभवत्कौतुकः
सातत्येन तव स्मिते वितनुते स्वैरासनावासनाम् ॥९३॥

மந்தாராதிஷு மன்மதாரி மஹிஷி! ப்ரகாச்யரீதிம் நிஜாம்
காதாசித்கதயா விசங்க்ய பஹுசோ வைசத்ய-முத்ராகுண: |
ஸ்ரீ காமாக்ஷி! ததிய-ஸங்கம-கலா-மந்தீபவத்-கௌதுக:
ஸாதத்யேந தவ ஸ்மிதே விதநுதே ஸ்வைராஸநாவாஸநாம் ||
(93)

மன்மத-அரி-மஹிஷி — மன்மதசத்ருவின் பார்யையான
ஸ்ரீ காமாக்ஷி! — ஸ்ரீ காமாக்ஷியே!
வைசத்ய-முத்ராகுண: — நிர்மலமான வெளுப்பு குணமானது
மந்தாராதிஷு — மந்தாரபுஷ்பம் முதலியவைகளில்
நிஜாம் — தன்னுடைய
ப்ரகாச்யரீதிம் — ப்ரகாசிக்கும் தன்மையை
கதாசித்கதயா — எதாவது ஒரு ஸமயத்தில் உண்டாகிறதென்பதாக
பஹுச: விசங்க்ய — அநேகம் தடவை ஸந்தேஹித்து அறிந்து

தீய-ஸங்கம-கலா-
மந்தீபவத்-கௌதுக: } அவைகளோடு சேருவதில் உத்ஸாஹக்குறைவு உள்ளதாய்
வ-ஸ்மிதே — உனது புன்சிரிப்பில்
ாதத்யேந — ஸ்திரமாக
வைராஸ்யாவஸ்யாம் } கவலையற்று தொடர்ந்து வஸிப்பதை
தநுதே — செய்துகொண்டிருக்கிறது.

மன்மதனுடைய எதிரியாகிய பரமசிவனது பட்டராணியாகிய ஸ்ரீகாமாக்ஷி! மந்தாரம் முதலிய மலர்களில் தனது வெளியீடு சில ஸமயங்களில்தான ஏற்படுமென்று நினைத்து, வெண்மைநிறத்தின் சிறப்பு, அவைகளுடன் சேர்வதில் ஆர்வம் குன்றியதாக ஆகி, உனது புன்சிரிப்பில் இடைவிடாது இஷ்டப்படி தொடர்ச்சியாக இருத்தலைச் செய்துகொண்டிருக்கிறது.

कादाचित्कतया विचिन्त्य – காதாசித்கதயா விசிந்த்ய என்ற பாடத்தில், சில ஸமயத்தில்தான் வெளுப்பாகிறதென்று நினைத்து என்று பொருள்.

इन्धाने भववीतिहोत्रनिवहे कर्मौघचण्डानिल-
प्रौढिम्ना बहुलीकृते निपतितं सन्तापचिन्ताकुलम् ।
मातर्मां परिषिञ्च किञ्चिदमलैः पीयूषवर्षैरिव
श्रीकामाक्षि तव स्मितद्युतिकणैः शैशिर्यलीलाकरैः ॥९४॥

இந்தாநே பவ-வீதிஹோத்ர-நிவஹே கர்மௌக-சண்டாநில-
ப்ரௌடிம்நா பஹுளீக்ருதே நிபதிதம் ஸந்தாப-சிந்தா குலம் !
மாதர்மாம் பரிஷிஞ்ச கிஞ்சிதமலை: பீயூஷ-வர்ஷை ரிவ
ஸ்ரீ காமாக்ஷி தவ ஸ்மித-த்யுதி-கணை: சைசிர்ய-லீலாகரை:।।(94)

மாத: — தாயாரான
காமாக்ஷி! — காமாக்ஷியே!
அமலை: — பரிசுத்தங்களாயும்
சைசிர்ய லீலாகரை: } குளிர்மையின் விலாஸங்களுக்கு இருப்பிடங்களுமான
தவ — உன்னுடைய
ஸ்மித-த்யுதி-கணை: } புன்சிரிப்பின் காந்திக்கூட்டங்களால்
கர்ம-ஓக-சண்டாநில-ப்ரௌடிம்நா } கர்ம ஸமூஹமென்கிற பெருங்காற்றின் வேகத்தினால்

| | |
|---|---|
| இந்தாநே | ஜ்வலிப்பதாயும் |
| பஹுளீக்ருதே | அதிகமாயுமிருக்கிற |
| பவ-வீதிஹோத்ர-நிவஹே | ஸம்ஸாரமென்னும் அக்னிக் கூட்டத்தில் |
| நிபதிதம் | விழுந்தவனையும் |
| ஸந்தாப-சிந்தா-ஆகுலம் | ஸந்தாபத்தினாலும், கவலையினாலும் கலங்கியிருக்கிற |
| மாம் | என்னை |
| பீயூஷ-வர்ஷை:-இவ | அம்ருதவர்ஷங்களினால் போல் |
| கிஞ்சித் | கொஞ்சம் |
| பரிஷிஞ்ச | நனைப்பாயாக. |

தாயே ஸ்ரீகாமாக்ஷி! ஜ்வலிக்கின்றதும் வினைக்கூட்டமென்னும் கொடுங்காற்றின் வலிமையால் அதிகப்பட்டதுமான ஸம்ஸாரமென்னும் அனற்குவியலில் விழுந்தவனும், ஸந்தாபம் சிந்தை இவைகளால் கலங்கியவனுமான என்னை மாசற்றவைகளும் அமுத மழைபோன்றவைகளும், குளிர்ச்சியின் விலாஸத்திற்கு இருப்பிடமானவைகளுமான உனது புன்னகையின் ஒளித்திவலைகளால சற்று நனைப்பாயாக.

भाषाया रसनाग्रखेलनजुषः शृङ्गारमुद्रासखी-
लीलाजातरतेः सुखेन नियमस्नानाय मेनात्मजे ।
श्रीकामाक्षि सुधामयीव शिशिरा स्रोतस्विनी तावकी
गाढानन्दतरङ्गिता विजयते हासप्रभाचातुरी ॥९५॥

பாஷாயா: ரஸநாக்ர-கேலந-ஜுஷ: ச்ருங்கார-முத்ராஸகீ-
லீலாஜாத-ரதே: ஸுகேந நியம-ஸ்நாநாய மேநாத்மஜே |
ஸ்ரீ காமாக்ஷி! ஸுதாமயீவ சிசிரா ஸ்ரோதஸ்விநீ தாவகீ
காடாநந்த-தரங்கிதா விஜயதே ஹாஸ-ப்ரபா-சாதுரீ || (95)

| | |
|---|---|
| மேநாத்மஜே! | மேனையின் புத்ரியாகிய |
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| தாவகீ | உனது |
| ஹாஸ-ப்ரபாசாதுரீ | புன்சிரிப்பின் காந்தியின் திறமையானது |
| ரஸநா-அக்ர-கேலந-ஜுஷ: | நாக்குநுனியில் விளையாடிக் கொண்டிருக்கிறவளாயும் |
| ச்ருங்கார-முத்ராஸகீ—லீலா ஜாத-ரதே: | ச்ருங்கார ஸாரமாகிய தோழியுடன்விளையாடுவதில் ஆசையுள்ளவளாயுமிருக்கிற |

| | |
|---|---|
| ...ஷாயா: | வாக்கு என்னும் பெண்ணுக்கு |
| ...ஸுகேந | ஸுகமாக |
| ...பம-ஸ்நாநாய | நியமத்தோடு ஸ்நாநம் செய்வதற்கு ஏற்பட்ட |
| ...ட-ஆநந்த-தரங்கிதா | த்ருடமான ஆனந்தத்தோடு அலைபொங்கியதான |
| ...சிரா | குளிர்ந்த |
| ...ம்ருதாமயீ | அம்ருதமயமான |
| ...ரோதஸ்விநீ இவ | நதியைப்போல |
| ...ஜயதே | விளங்குகிறது. |

மேனையின் புதல்வியாகிய ஸ்ரீகாமாக்ஷி! நாக்கு நுனியில் ...ளையாடுகின்றதும் சிறந்த ச்ருங்காரமென்னும் தோழியின் ...மூகிய செய்கைகளில் ஆவல்கொண்டதுமான வாக்கென்னும் ...ணிதைக்குச் சுகமாக நியமஸ்நானம் செய்வதற்காக அமைந்து ...ழமானதும், ஆனந்த அலைகள் நிரம்பியதும் அமுதாலானது ...பால் குளிர்ச்சியுள்ளதுமான ஒரு நதியைப்போல் உனது ...ன்சிரிப்பின் ஒளித்திறம் விளங்குகிறது.

सन्तापं विरलीकरोतु सकलं कामाक्षि मच्चेतना
मज्जन्ती मधुरस्मितामरधुनीकल्लोलजालेषु ते ।
नैरन्तर्यमुपेत्य मन्मथमरुल्लोलेषु येषु स्फुटं
प्रेमेन्दुः प्रतिबिम्बितो वितनुते कौतूहलं धूर्जटेः ॥ ९६ ॥

ஸந்தாபம் விரளீகரோது ஸகலம் காமாக்ஷி! மச்சேதநா
மஜ்ஜந்தி மதுர-ஸ்மிதாமர-துநீ-கல்லோல-ஜாலேஷு தே |
நைரந்தர்ய முபேத்ய மந்மத-மருல்லோலேஷு யேஷு ஸ்புடம்
ப்ரேமேந்து: ப்ரதிபிம்பிதோ விதநுதே கௌதூஹலம் தூர்ஜடே: || (96)

| | |
|---|---|
| ...மாக்ஷி! | காமாக்ஷியே! |
| ...நைரந்தர்யம் உபேத்ய | இடைவிடாத நிலைமையை அடைந்து |
| ...ந்மத-மருத்-லோலேஷு | மன்மதனென்னும் காற்றால் அசைந்து கொண்டிருக்கிற |
| ...யேஷு | எந்த அலைகளில் |
| ...ர்ஜடே: | பரமசிவனுடைய |
| ...ப்ரேம-இந்து: | அன்பு என்னும் சந்திரன் |
| ...புடம் | நன்றாக |
| ...ப்ரதிபிம்பித: | பிரதிபலித்துக்கொண்டு |

| | |
|---|---|
| விதநுதே | செய்துவருகிறதோ |
| (தேஷாம் | அப்படிப்பட்ட) |
| தே | உனது |
| மதுர-ஸ்மித-அமரநதீ-கல்லோல-ஜாலேஷு | இனிய புன்சிரிப்பென்கிற தேவகங்கையின் அலை ஸமூஹத்தில் |
| மஜ்ஜந்தீ | முழுகின்றதான |
| மத்-சேதநா | எனது மனதானது |
| ஸகலம் | எல்லாவிதமான |
| ஸந்தாபம் | தாபத்தையும் |
| விஜீகரோது | போக்கடித்துக்கொள்ளட்டும். |

காமாக்ஷி! மன்மதன் என்னும் காற்றால் அசைகின்ற எந்தப் புன்சிரிப்பின் அலைகளில் தெளிவுடன் இடைவிடாமல் பிரதிபிம்பித்திருக்கின்ற அன்பெனும் சந்திரன் பரமசிவனுக்கு ஆவலை வளர்க்கின்றதோ, அந்த உன்னுடைய இனிய சிறிப்பென்னும் தேவகங்கையின் அலைக்கூட்டங்களில் என் மனது மூழ்கி எல்லா ஸந்தாபங்களையும் தணித்துக்கொள்ளட்டும்.

चेतःक्षीरपयोधिमन्थनचलद्रागाख्यमन्थाचल-
क्षोभव्यापृतिसम्भवां जननि ते मन्दस्मितश्रीसुधाम् ।
स्वादं स्वादमुदीतकौतुकरसं(सा)नेत्रत्रयी शाङ्करी
श्रीकामाक्षि निरन्तरं परिणमत्यानन्दवीचीमयीं ॥ ९७ ॥

சேத: க்ஷீர-பயோதி-மந்தந-சலத்-ராகாக்ய-மந்தா சல-
க்ஷோப-வ்யாப்ருதி-ஸம்பவாம் ஜநநி! தே மந்தஸ்மித-
ஸ்ரீஸுதாம் |
ஸ்வாதம் ஸ்வாதமுதீத-கௌதுகரஸம்(ஸா) நேத்ர த்ரயீ சாங்[கரீ]
ஸ்ரீ காமாக்ஷி! நிரந்தரம் பரிணமத்யாநந்த-வீசிமயீ || (97)

| | |
|---|---|
| ஜநநி! காமாக்ஷி! | தாயான காமாக்ஷியே! |
| சேத:-க்ஷீர-பயோதி-மந்தந-சலத்-ராகாக்ய-மந்தாசல க்ஷோப-வ்யாப்ருதி-ஸம்பவாம் | மனமென்றும் க்ஷீரஸமுத்ரத்தைக் கடையும், அநுராகமென்கிற மந்திர பர்வத்தின் கடைவதினால் ஏற்பட்ட |
| தே | உனது |
| மந்தஸ்மித ஸ்ரீஸுதாம் | புன்சிரிப்பின் காந்தியாகிற அம்ருதத்தை |
| உதீத கௌதுகரஸம் | அதிக உத்ஸாஹத்துடன் இருக்கும்படி |
| ஸ்வாதம் ஸ்வாதம் | அடிக்கடி அருந்தி |

| | |
|---|---|
| சாங்கரீ | பரமசிவனுடையதான |
| நேத்ரத்ரயீ | மூன்று கண்களும் |
| நிரந்தரம் | இடைவிடாமல் |
| ஆநந்த வீசிமயீ | ஆனந்த அலையாக |
| பரிணமதி | பரிணமிக்கிறது. |

அன்னையே ஸ்ரீ காமாக்ஷி! மனமெனும் பாலாழியில் மெதுவாய் அசைகின்ற ஆசையென்னும் மந்தரமலையின் கடைவதால் உண்டாகிய புன்னகையின் ஒளி என்ற சிறந்த அமுதைப் பரமசிவனது மூன்று கண்களும் ஆவல்கொண்டு இடைவிடாது பருகிப்பருகி இன்ப அலைகளாக மாறுகின்றன.

आलोके तव पञ्चसायकरिपोरुद्दामकौतूहल-
प्रेङ्खन्मारुतघट्टनप्रचलितादानन्ददुग्धाम्बुधेः ।
काचिद्वीचिरुदञ्चति प्रतिनवा संवित्प्ररोहात्मिका
तां कामाक्षि कवीश्वराः स्मितमिति व्याकुर्वते सर्वदा ॥९८॥

ஆலோகே தவ பஞ்சஸாயகரிபோ: உத்தாம-கௌதூஹல-
ப்ரேங்கந்-மாருத-கட்டந-ப்ரசலிதாதாநந்த-துக்தாம்புதே: |
காசித் வீசிருதஞ்சதி ப்ரதிநவா ஸம்வித்-ப்ரரோஹாத்மிகா
தாம் காமாக்ஷி! கவீச்வரா: ஸ்மிதமிதி வ்யாகுர்வதே ஸர்வதா||
(98)

| | |
|---|---|
| காமாக்ஷி! | காமாக்ஷியே! |
| பஞ்ச-ஸாயக-ரிபோ: | மன்மத சத்ருவான பரமசிவனுடைய |
| ஆலோகே | பார்வை ஏற்படும்போது |
| உத்தாம-கௌதூஹல-ப்ரேங்கத்-மாருத-கட்டந-ப்ரசலிதாத் | அதிக உத்ஸாஹமென்கிற காற்றின் மோதலால் அசைந்து கொண்டிருக்கிற |
| ஆநந்த-துக்தாம்புதே: | ஆனந்தமென்கிற க்ஷீரஸமுத்ரத்திலிருந்து |
| ஸம்வித்-ப்ரரோஹாத்மிகா | ஞானத்தின் அங்குரமாகிற |
| ப்ரதிநவா | புதியதான |
| காசித் | ஒரு |
| வீசி: | அலையானது |
| உதஞ்சதி | உண்டாகிறது |
| தாம் | அந்த அலையை |

| | |
|---|---|
| கவீச்வரா: | கவிச்ரேஷ்டர்கள் — |
| ஸ்மிதம் இதி | புன்சிரிப்பென்று |
| ஸர்வதா | எப்போதும் |
| வ்யாகுர்வதே | விவரிக்கிறார்கள். |

காமாக்ஷி! பஞ்சபாணனது பகைவரான பரமசிவனைப் பார்க்குங்கால் கட்டுக்கடங்காத ஆவல் என்ற காற்றின் மோதுதலால் அசைந்த ஆனந்தமென்னும்பாலாழியிலிருந்து ஞானக் கொழுந்து வடிவமாய் ஓர் புதிய அலை எழுகின்றது. அதைச் சிறந்த கவிகள் எப்பொழுதும் புன்னகையென்று விரித்துக் கூறுகின்றனர்.

सूक्तिः शीलयते किमद्रितनये मन्दस्मितात्ते मुहु-
र्माधुर्यागमसंप्रदायमथवा सूक्तेस्तु मन्दस्मितम् ।
इत्थं कामपि गाहते मम मनः सन्देहमार्गभ्रमीं
श्रीकामाक्षि न पारमार्थ्यसरणिस्फूर्तौ निधत्ते पदम् ॥९९॥

ஸூக்தி: சீலயதே கிமத்ரி-தநயே! மந்தஸ்மிதாத் தே முஹு:
மாதுர்யாகம-ஸம்ப்ரதாயமதவா ஸூக்தேஸ்து-(ர்நு)
மந்தஸ்மிதம் |
இத்தம் காமபி காஹதே மம மந:-ஸந்தேஹ-மார்க்க-ப்ரமீம்
ஸ்ரீ காமாக்ஷி ந பாரமார்த்ய-ஸரணி-ஸ்பூர்த்தௌ நிதத்தே
பதம் || (99)

| | |
|---|---|
| அத்ரி-தநயே! | பர்வத புத்ரியான! |
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| தே | உன்னுடைய |
| ஸூக்தி: | நல்லவாக்கானது |
| மாதுர்யாகம-ஸம்ப்ரதாயம் | இனிமையென்னும் சாஸ்திரத்தின் உட்கருத்தை |
| மந்தஸ்மிதாத் | உனது புன்சிரிப்பிடமிருந்து |
| முஹு: | அடிக்கடி |
| சீலயதேகிம் | பழக்கிக்கொள்கிறதா? |
| அதவா | இல்லாவிடில் |
| ஸூக்தே: | நல்ல வாக்கிடமிருந்து |
| மந்தஸ்மிதம் | புன்சிரிப்பானது (அதை பழகிக்கொள்கிறதா?) |
| இத்தம் | இம்மாதிரி |

| | |
|---|---|
| மம மந: | எனது மனதானது |
| ராம் அபி | ஒருவிதமான |
| ஸந்தேஹ-மார்க்க-ப்ரமீம் | ஸந்தேஹவழியின் சுழலை |
| ர ஹதே | அடைகிறது. |
| பாரமார்த்ய-ஸரணி-ஸ்பூர்த் தெள | உண்மையான வழி விளங்குவதில் |
| பதம் | அடியை |
| விதத்தே | வைக்கிறதில்லை. |

மங்களாகிய ஸ்ரீ காமாக்ஷி! இனிமை என்னும் சாஸ்திரத்தின் கருத்தை உனது அழகியமொழி புன்னகையினின்று முறைப்படி கற்கின்றதா? அல்லது சொல்லினின்று புன்முறுவல் பயிலுகின்றதா, என் மனம் சொல்லமுடியாத ஸந்தேஹ மார்க்கத்தில் சுழலுகின்றது. உண்மை வழி விளக்கத்தில் கால் வைப்பதில்லை.

क्रीडालोलकृपासरोरुहमुखीसौधाङ्गणेभ्यः कवि-
श्रेणीवाक्परिपाटिकामृतझरीसूतीगृहेभ्यः शिवे ।
निर्वाणाङ्कुरसार्वभौमपदवीसिंहासनेभ्यस्तव
श्रीकामाक्षि मनोज्ञमन्दहसितज्योतिष्कणेभ्यो नमः ॥१००॥

க்ரீடா-லோல-க்ருபா-ஸரோருஹ-முகீ-ஸௌதாங்கணேப்ய: கவி-
ச்ரேணீ-வாக்பரிபாடிகாம்ருத-ஜரீ-ஸூதீ-க்ருஹேப்ய: சிவே!
நிர்வாணாங்குர-ஸார்வபௌம-பதவீ-ஸிம்ஹாஸநேப்யஸ்தவ
ஸ்ரீ காமாக்ஷி! மநோக்ஞ-மந்த-ஹஸித-ஜ்யோதிஷ்கணேப்யோ நம: ॥ (100)

| | |
|---|---|
| சிவே! | மங்களமூர்த்தியான |
| ஸ்ரீ காமாக்ஷி! | ஸ்ரீ காமாக்ஷியே! |
| க்ரீடா-லோல | விளையாட்டில் ஆசையுள்ள |
| க்ருபா | கருணையென்கிற |
| ஸரோருஹமுகீ | தாமரைப்போன்ற முகங்கொண்ட ஸ்திரீயினுடைய |
| ஸௌதாங்கணேப்ய: | உப்பரிக்கைகளாயும் |
| கவிச்ரேணீ | கவிகளுடைய கூட்டத்தின் |
| வாக்பரிபாடிகா | வாக்கு ஸாமர்த்யமென்கிற |
| அம்ருதஜரீ | அம்ருதப்பெருக்குக்கு |
| ஸூதிக்ருஹேப்ய: | உத்பத்தி ஸ்தானங்களாயும் |

| | |
|---|---|
| நிர்வாணாங்குர | மோக்ஷ ஆரம்பமாகிற |
| ஸார்வபௌமபதவீ | ஸாம்ராஜ்ய வழியின் |
| ஸிம்ஹாஸநேப்ய: | ஸிம்ஹாஸனங்கள் போன்ற<br>வைகளுமான |
| தவ | உனது |
| மநோஞ்ஜ-மந்தஹஸித-<br>ஜ்யோதிஷ்கணேப்ய: | அழகிய மந்தஸ்மித ஒளியின்<br>திவிலைகளுக்கு |
| நம: | நமஸ்காரம். |

மங்களந்தரும் ஸ்ரீ காமாக்ஷி! விளையாட்டில் ஈடுபட்டிருக்கும் கருணை என்ற அழகிக்கு (தாமரை முகத்தாளுக்கு) மாளிகையும், கவிக்கூட்டத்தின் சொற்றொடர் என்ற அமுதப் பெருக்குக்குப் பிறப்பிடமும், முக்தியின் தோற்றமென்ற சக்ரவர்த்தி நிலைக்கு அரியணையுமான மனதைக்கவரும் உனது மந்தஹாஸத்தின் ஒளித்திவலைகளுக்கு நமஸ்காரம்.



इमां पञ्चशतीं यस्तु नित्यं भक्तियुतः पठेत्
श्री कामाक्षि भवेत् तस्य प्रसन्ना च वरप्रदा ॥

இமாம் பஞ்சசதீம் யஸ்து நித்யம் பக்தியுத: படேத் |
ஸ்ரீ காமாக்ஷீ பவேத் தஸ்ய ப்ரஸந்நா ச வரப்ரதா ||

இந்த பஞ்சசதியை எவர் நித்யம் பக்தியுடன் படிக்கிறரோ, அவருக்கு ஸ்ரீ காமாக்ஷீ தேவியானவள் பிரஸன்னையாகி வரங்களையும் கொடுப்பாள்.

श्री काञ्चि नगरी कामकोटि पीठाधिपः प्रभुः ।
जीयात् जगद्गुरुः सैषः श्री मूकेन्द्रसरस्वती ॥

ஸ்ரீ காஞ்சீ நகரீ காமகோடி பீடாதிப: ப்ரபு: |
ஜீயாத் ஜகத்குரு: ஸைஷ: ஸ்ரீ மூகேந்த்ரஸ்ரஸ்வதி ||

ஸ்ரீ காஞ்சிநகர காமகோடி பீடாதிபதியும் பிரபுவும், ஜகத்குருவுமான அந்த ஸ்ரீ மூகேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள், ஸர்வோத்க்ருஷ்டராக விளங்கவேண்டும்.


மந்தஸ்மித சதகம்
முற்றிற்று.